MADRAS GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS SERIES

NO. 67





T. 2708

# KAṬṬABOMMAN VARALĀṞU

# கட்டபொம்மன் வரலாறு

EDITED

BY

T. CHANDRASEKHARAN, M.A., L.T.,
CURATOR, GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS LIBRARY
MADRAS

and

THE STAFF OF THE LIBRARY

Published under the orders of

THE GOVERNMENT OF MADRAS

1960

Price Rs. 4-50

MADRAS GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS SERIES

NO. 67



# KATTABOMMAN VARAḺARU

# கட்டபொம்மன் வரலாறு

EDITED

*BY*

T. CHANDRASEKHARAN, M.A., L.T.,
CURATOR, GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS LIBRARY
MADRAS

and

THE STAFF OF THE LIBRARY

**Published under the orders of**

THE GOVERNMENT OF MADRAS

**1960**

Price Rs. 4-50

# INTRODUCTION

The public are perhaps aware of the fact that the Government of Madras have launched upon a scheme of publication of rare manuscripts treasured in two premier institutions of this state, namely, the Madras Government Oriental Manuscripts Library, Madras and the Tanjore Maharaja Serfoji's Sarasvathi Mahal Library, Tanjore. Financial help has also been extended to Dr. U. V. Swaminatha Iyer library, Adyar, Madras, for similar purpose. Though the publication of rare manuscripts was started as early as 1909 by the Government of Madras, only 12 works were taken up for publication till 1942. Of these, the printing of 3 works has not yet been completed.

Only in the year 1949-50, a regular scheme for the publication of manuscripts was prepared and accepted by the Government of Madras under the **Madras Government Oriental Series.** This scheme included the manuscripts in all the South Indian Languages in which there are manuscripts in the Library. The selection of manuscripts was done by an Expert Committee appointed by the Government specially for this purpose. Till now 157 manuscripts in different languages have been printed. Of these, 35 manuscripts are from Tanjore Maharaja Serfoji's Sarasvathi Mahal Library, Tanjore and 2 from Dr. U. V. Swaminatha Iyer Library, Adyar. In addition, 3 manuscripts, two from this library and 1 from the Dr. U. V. Swaminatha Iyer Library, Adyar, are in the press.

While all the manuscripts under the Madras Government Oriental Series were edited by various scholars drawn from different learned institutions, the publication of manuscripts under the Madras Government Oriental Manuscripts Series was resumed in the year 1950-51. All the manuscripts published under this series before 1942 were in Sanskrit. But in 1950-51 they included the manuscripts in other languages also. These are edited by the Curator with the assistance of the Pandits in respective languages. Till now 60 works have been printed including the total number of 51 since 1951.

Since 1958-59, however, no fresh manuscripts were taken up for publication in both the series. There were several proposals for printing of manuscripts. Of these, the Government of Madras have now

sanctioned the publication of the following 7 Tamil Manuscripts in G. O. No. 81859-E 6/59-15 Education dated 5-1-1960 communicated in Proceedings R.C. No. 138-K 2/60 dated 27-1-1960 of the Director of Public Instruction, Madras.

**I Government Oriental Manuscripts Library Madras.**

1. Tani-p-padalkal·
2. Kerala Desa Varalaru.
3. Yapparunkala Virutti (with Kurippurai).
4. Kattabommań Varalaru.
5. Palamoli Tirattu.
5. Kalambaka-k-Kottu.
7. Uttira Ramayana Natakam.

**II Dr. U. V. Swaminatha Iyer Library, Adyar.**

1. Manuvijnanesvariyam.
2. Suddhanta Bharatam

Of the 7 manuscripts from this library, Palamoli-t-tirattu has been dropped as it was found to contain many archaic proverbs. The entire publication has been recommended for aid from the Government of India under the Scheme for the Development of Modern Indian Languages. It is also hoped that the Government of India aid will be forthcoming in due course. Since the amount has to be reimbursed from the Government of India, it was ordered that the expenditure of the scheme should be incurred before 31-3-1960. Though the time actually available for getting the manuscripts printed is less than 2 months, the publication has been started in right earnest and every possible eflorts are being made to complete the same before the stipulated time. There has, however, been one change in the scheme of publication as submitted by the Curator on account of the limited time available. Originally the above manuscripts were intended to be edited by outside scholars under the Madras Government Oriental Series, but now they have been edited by the Curator himself with the assistance of the Tamil staff of the library under the Madras Government Oriental Manuscripts Series.

On account of the great speed with which the press copies were prepared, edited and rushed through the press, a few mistakes might have crept in. It is hoped that the learned scholars who read the works will make the necessary corrections, if any.

In this connection, I will be failing in my duty if I do not express my thanks to the Controller of Stationery and Printing, Madras, for scrutinizing the quotations of the private presses, for supplying the required paper for printing, for passing the printing bills from the presses in a very short time and for taking up the printing of the biggest of the six manuscripts in the Government Press itself.

This Edition is based upon a single paper manuscript bearing R. No. 6841 transcribed from a manuscript obtained on loan from Sri T. P. Minakshisundaram Pillai, M.A., B.L., Professor of Tamil, Annamalai University. I am beholden to him for kindly lending the manuscript in his possession.

Sri M. Pasupathi, Tamil Pandit of this Library, was in charge of the preparation of the press copy of this work and my thanks are due to him for helping me in editing the manuscript before giving it to the press. The Government of India have to be thanked for their kind grant to the Government of Madras for enabling the Government Oriental Manuscripts Library, Madras, to get printed this invaluable manuscript. Sri V. C. Ramachandran, B.A., L.P.T., of the India Printing Works, Mylapore, Madras-4, also deserves my thanks for printing the manuscript neatly in a very short period of less than a month.

Madras,<br>2—3—1960.

T. CHANDRASEKHARAN,<br>*Curator.*

# கட்டபொம்மன் வரலாற்றின்

## முகவுரை

உலகின் பல் வேறு நாடுகளில், மனிதவினம் முன்னேறுவதற் காகப் பலப்பலக் காலங்களில் வாழ்ந்த, தன் வாழ்க்கையையே அர்ப் பணித்த மாபுருஷர்கள் தோன்றியுள்ளனர். அவர்களுடைய இளமை தொட்ட வாழ்க்கை முதல், முதுமை தொட்ட வாழ்க்கை வரையில் அவையனைத்தும், அந்த நாட்டு மக்கள் உள்ளங்களில் பதிந்து, அந்த நாட்டுச் சரித்திரத்தில், மறக்கமுடியாத ஓர் இடத்தையும் அடைந்துள்ளன. இப்பொழுது காணப்படும் ஒவ்வொரு நாட்டின் வரலாற்றைப் புரட்டிப் பார்த்தால் அவ்வுண்மை புலனாகும். நாட்டு வரலாற்றை ஒவ்வொருவரும் அறிந்து கொள்ள வேண்டியது இன்றி யமையாததாகும். இந்நோக்கத்துடனேயேதான், நாட்டுக்காகவும், நாட்டு மக்களுக்காகவும் உழைத்தத் தந்நலங்கருதாத் தகைமையாளர் களின் வரலாற்றைப் பள்ளிச் சிறுவர்களுக்கும், உயர்நிலைப் பள்ளி, கல்லூரி முதலிய மாணாக்கர்கட்கும் பாடமாக வைத்துப் போதனை செய்யப்படுகின்றன. மேல் நாடுகளில், இளஞ் சிறுவர்களுக்கு நாட்டுப் பற்று முதலில் உண்டாக்கும் நோக்கத்துடனேயே, அவ் வரலாறுகள் முதற் பாடமாகவும் கட்டாயப் பாடமாகவும் வைத்துப் போதிக்கப்படு கின்றன. அதனால், அந்நாட்டுச் சிறுவர்கள், தாம் பருவம் வந்தக் காலத் தில், தம் வாழ்கையில் ஒருகூறு நாட்டுப் பற்றுக்குமிக்கு, நாட்டுக் கெனப்பணியாற்றுகிறார்கள். நம் இந்தியாவில், இதுபொழுதுதான், அரசியலார் அந்நோக்கத்துடன் பள்ளிச்சிறுவர்களுக்கு வீரர்களின் சரித் திரத்தைப் பாடமாக வைக்க வேண்டும் என்றக் கட்டாயம் ஏற்படுத்தி வருகின்றனர். ஆனால், இந்தியர் வரலாறோ அல்லது இந்திய நாட்டு வீரர்களின் வரலாறுகளோ ஒன்றிரண்டைத் தவிர, முழுவதும் இன் னும் செம்மையாக எழுதப்படவில்லை. இதில், இந்திய அரசியலார் இது பொழுது, மிக இன்றியமையாக் கண்ணுங் கருத்தும் செலுத்தி வரு கின்றனர். இந்த நிலையில், இந்தக் கட்டபொம்மன் வரலாறும் அச் சிட்டு வெளிவந்துள்ளது.

வரலாற்று ஆய்வாளர்களின் குணம்:— ஒரு கருத்தினைத் தெள்ளத் தெளிய அறிந்து வெளிப்படுத்துவதற்குமுன், அதனிடத் துக் காய்தல், உவத்தலின்றி ஆய்ந்து கூற வேண்டியது ஆய்வாளர் களுக்குரிய குணங்களிலொன்றாகும். அதனோடன்றி, அக் கருத்து வெளிப்படுத்துவதற்கு முன், அக் கருத்து நாட்டு மக்களுக்கு

என்ன, என்ன உணர்ச்சிகளை ஏற்படுத்துமோ என்ற அச்சமும், உண்மை நிலையை அப்படியே எடுத்துக்கூறுவதில், " உச்சிமீது வானிடிந்து வீழினும் அச்சமில்லை " என்ற பாங்கின் துணிவும், கருத்துக்களைச் சாதனங்களைக் கொண்டு ஆய்வதில், பன்னாள்பசி யெடுத்தானொருவன், அவனுக்கேற்ற சோறுகண்டால் அதனை எவ் வாறு அள்ளியள்ளி உண்ணுகிறானோ அந்த அவாவும், விரைவும் கட்டாயமாக இருத்தல் வேண்டும். ஆக, காய்தல் உவத்தலின்றி ஒத்த நடு நிலைமையும், உண்மை நிலை கூறுவதில் துணிவும், பசியெடுத்தானின் அவாவும், விரைவும் ஆகிய குணங்கள் ஆய்வாளர்களிடத்து என்றும் நிலைத்திருக்க வேண்டிய குணங்களாகும்.

கட்டபொம்மனைப்பற்றி:— வீரபாண்டியக் கட்டபொம்மன், வீரபாண்டியபுரத்தினையாண்ட ஜகவீர பாண்டியக் கட்டபொம்முவுக்கும் சண்முகக் கனியம்மாளுக்கும் 3-1-1760-இல் முதல் மகனாகத் தோன்றினான். அதன் பின்பு, ஆறு ஆண்டுகள் கழித்து ஊமைத்துரையும், பின்பு துரைசிங்கமும், ஈசுவர வடிவு, துரைக்கண்ணு ஆகிய இரு பெண்களும் தோன்றினர். வீரபாண்டியக் கட்டபொம்மனுக்கு வீரசக்கம்மாள் என்ற பெண்ணை மணம் புரிவித்தனர். தளவாய் குமாரசாமி என்னும் ஊமைத்துரைக்கு சௌந்தர வடிவு என்ற பெண்ணையும், சுப்பையா என்னும் துரைசிங்கத்திற்கு ஞான முத்தம் மாள் என்ற பெண்ணையும் மனைவியர்களாக மணம்புரிவித்தனர். வீரபாண்டியக் கட்டபொம்மன், தனது முப்பதாம் ஆண்டில், அஃதாவது 2–2–1790–இல், வீரபாண்டியபுரத்தில் அரியாசனம் ஏறினான். அவனது அவைக்கு, சிவசுப்பிரமணியப் பிள்ளை என்ற தானுபதிப் பிள்ளையை மந்திரியாகவும், அவைப் புலவராகச் சங்கர மூர்த்திப் புலவரையும் அமர்த்திக் கொண்டு ஆட்சி நடாத்தினான். தனது கம்பளங்களுக்கும், சேனைவீரர்களுக்கும், தன் உறுதுணைத் தம்பியாம் வாய் பேசாப் பாண்டியனை ஊமைத்துரையையே படைத்தலைவனாக வும், மற்ற, சிவத்தையா, பொட்டிப்பகடை, வெள்ளையத் தேவன், வீரமல்லு முதலானோர்களை, கோட்டையையும் படையையுங் காக்கும் அலுவலாளர்களாகவும் நியமித்துப் புகழ்பட ஆண்டு வந்துள்ளான். இவன் தன் பாட்டன் பாஞ்சாலன் நினைவுச் சின்னமாக ஒரு வனப்பும் வலிவும் வாய்ந்த கோட்டையைக் கட்டி, அதற்கு பாஞ்சாலன் கோட்டை என்ற நாமம் இட்டு, அதனுள் அரண்மனை, அவைக்களம் முதலியனகட்டி அங்கிருந்து ஆட்சி புரிந்து வந்துள்ளான்.

இவன் பரம்பரையைப்பற்றி, வரலாற்றை எழுதிய ஆசிரியர்கள் கூறுவனவாவது :—பல்லாரி ஜில்லாவில் வாடிக்கோட்டை என்னும் ஊரில் கம்பளப்பரம்பரையில் உதித்தவர் என்றும், பஞ்சங் காரணமாகத் தென்னாடு நோக்கி வந்து, புதுக்கோட்டை, சிவகங்கை,

இராமநாதபுரம் முதலிய சமஸ்தானங்களில் குடியேறியவர்கள் என்றும், பின்னால், மதுரையை ஆண்ட விசுவநாத நாயக்கருக்கு ஒற்றர்களாக விளங்கிப் பின்னால், அவனால் கொடுக்கப்பட்டு ஆதரிக்கப் பட்டதே வீரபாண்டியபுரம் என்ற இடமாகும் என்றும், அவன் ஆண்டுள்ள இடத்தினை; பாண்டிய மரபில் ஒருவரான ஜகவீரப் பாண்டியன் ஆண்டான் எனவும், அவனுக்கு மகப்பேறு இல்லாத காரணத்தால் இவனை மகனைப் பாவித்து எடுத்துக்கொண்டார் என வும், அதன் காரணமாக அப்பாண்டியன் இறந்ததும், அவனுக்குச் செய்யவேண்டிய ஈமக்கடன்களை இவன் செய்து, அந்நாட்டுக்கு உரிமை கொண்டாடிப் பட்டமெய்தினன் என்றும் பலவாறாகக் கூறுகின்றனர். இன்னும் இவர்களின் பரம்பரை முப்பத்திரண்டு பகுதியாக இருந்தது பல்லாரி ஜில்லாவில் என்றும், தென் பாண்டி நாட்டில் அரசுரிமை யேற்று 72-பாளையங்களாகப் பிரிந்து ஆண்டு வந்தனர் என்றும் கூறப்படுகின்றனர்.

எது எவ்வாறாய் இருப்பினும், வெள்ளைக்காரர், நவாப்பின் அநுமதி பெற்றுப் பாளையங்களின் வரி வசூலைச் செய்ய முற்பட்டப் பொழுது, வெள்ளைக்காரர்களால் ஏற்படுத்தப்பட்ட பில் கலெக்டர் களுக்கு, வரிகொடுக்க மறுத்தவர்களில், இந்த வீரபாண்டியக் கட்ட பொம்மனும் ஒன்றாகும் என்று மட்டும் உறுதிப்படுத்தப்படுகின்றது, வரலாற்று நூலாசிரியர்களால்.

கட்டபொம்மனின் குணாதிசயங்கள் :—இவன், தோள்வலி, வாள் வலி, கொடைத்தன்மை, அண்டினவர்களுக்கு அபயங்கொடுத்து ஆதரிக்குந் தன்மை, தனக்கும், தன் பேச்சுக்கும் கட்டுப்படாதவர்களை நீதி முறையில் முதலில் அச்சுறுத்தி, பயன் விளைக்காதுபோனால் இறுதியில், சாம-பேத-தான-தண்டம் என்ற முறையில் அடங்காதவர் களை அடக்கிவைக்குங் குணமும், முதலியன உடையவனாகத் திகழ்ந் துள்ளான். இவனுக்கு, கருத்தையா என்ற பெயரும் உண்டு. இவன் வெள்ளைக்காரக் கும்பினியை, எதிர்த்துச் சண்டை நடத்தியது முதற் கொண்டு இறந்ததுவரையிலானப் பகுதி மட்டுமே இந்நூலில் இடம் பெறுற்றுள்ளது. அவை கும்மி என்னும் இசைப்பாட்டில் பாடப்பட்டி ருக்கின்றது. அதனால் இது, கட்டபொம்மன் வரலாற்றுக்கும்மி அல் லது சண்டைக்கும்மி என்று அழைக்கப்படுகின்றது. இந்நூலை இயற்றிய புலவர், உண்மை நிலையை ஒளியாது, பட்டவர்த்தனமாகக் கூறிச் சென்றுள்ளார். இவர் பெயர் மலையரசுக் கவிராயர் என்று இறுதிக் கும்மிக்கண்ணிகளில் கூறப்படுவதிலிருந்து ஒருவாறு ஊகிக்க வேண்டியுளது.

அல்லது, சங்கரமூர்த்திப் புலவரே இதனை யாத்திருக்கலாம். ஏனெனில், மங்கைபாகக் கவிராயர் சங்கரமூர்த்திப் புலவரைப்பற்றி தூதொன்று பாடியுள்ளார். அதில், சங்கரமூர்த்தி என்பவர் புலவனாக

வும், புரவலனுகவும் திகழ்ந்தவர் என்று கூறப்படுகின்றது. இவர் தமது அரசன் வரலாற்றை, எளிய முறையில் நாடோடியும் பாமரர் களும் அறியும் வகையில் கும்மிப்பாட்டில் பாடியிருக்கலாம். மற்ெருரு கும்மியும் இந்நூல் நிலையத்தில் உள்ளது. அதனை மங்கைபாகக் கவி ராயர் இயற்றியதாகவுள்ளது. அந்தக் கும்மி நூலுக்கும் இதற்கும் நிறைய வேறுபாடுகள் காணப்படுகின்றன.

## இந்நூலின் சுருக்கம்

வீரப்பாண்டியக்கட்டபொம்மன், தனக்குக் கீழ்ப்படாதனவும், கும்பினியாருக்கும் நவாப்புக்கும் வரிகள் செலுத்துகின்ற பாளையக் காரர்களை அடக்குவதிலும் ஒடுக்குவதிலும் முனைந்திருந்தான். நாட்டு மக்களை வறுத்தி, வரியாக வாங்கியப் பணத்தைக் கும்பினிக்கு அனுப் புவதில் பழக்கங்கொண்ட, தனது பாளையத்தின் சுற்றுப்புறத்திலுள்ளப் பாளையங்களில், தானும் தனது கம்பளத்தார்களும் சேர்ந்து, கும் பினிக்கு வரியாகச் சேர்த்து வைக்கும் அவர்களின் நெற்பொதிகளைப் போரிட்டு, அபகரித்து வந்து, தானும் தனது நாட்டுமக்களும் வாழ் வதற்கு வகைசெய்து கொண்டுவந்தான். இந்தக் கருத்தில் கொள்ளை யடிப்பது என்பது அவன் கண்ட நீதி முறையாகும். இதனைத் தவிர, வேறு எந்த முறையிலும், வழியிலும் பிற பாளையக்காரர்களைக் கும்பினிக்கு வரி செலுத்துவதினின்றும் அவன் தடுக்க முடியவில்லை. அப்படித் தடுத்தும், இடுக்கண் விளைத்துங்கூட இவனது பேச்சுக் களைக் கேளாவண்ணம் பிறபாளையத்தார் கும்பினிக்கு வரி செலுத்தி வந்தனர்; நிறுத்த வில்லை! அவ்வளவு தூரம் கும்பினிக்கு அடி பணிந்து நடந்து வந்தனர். இந்தச் செய்கையே, வீரப்பாண்டியக் கட்டபொம்மனுக்கு அடங்காக் கோபத்தையும், அதனுல் அவர்களின் பொருள்களை அபகரிக்கச் செய்யும் எண்ணத்தையும் தூண்டியது. இவன் மட்டும் வீரதீரத்தோடு, பிற பாளையக்காரர்களையும் கும்பினி யாரையும் எதிர்த்தெதிர்த்துப் போராடி வெற்றி மாலை சூடியுள்ளான். இதற்குத் தக்க சான்றுகள் உள்ளன. இங்ஙனம் நடக்குங் காலத்தில், இராமநாதபுரம், எட்டையாபுரம் முதலிய ஜமீந்தார்களிடத்திருந்து புகார்கள் கிளம்பிக்கொண்டேயிருந்தன. இவர்களுக்கு நேரில் கட்ட பொம்மனைக்கண்டால், அவன் கேட்டால், அல்லது சொல்லியனுப் பினுல், உடனே கேட்டப்பொருள்களைக்கொடுத்தலும், பின்னுல் இவர் களுக்கு அநுகூலமாகவும் காவலாகவும் உள்ளக் கும்பினித்துரையிடத் தில் புகார் செய்வதும் வழக்கமாக இருந்தனர். இஃது இவ்வாறு இருக்க;

சென்னைக் கவர்னர்-ஜெனரலின் உத்திரவு பெற்றுக் கும்பினி யார்துரை சாக்ஸன் என்பான் இராமநாதபுரம் வந்தான். அவனிடத் தில், இராமநாதபுரம் துரை, எட்டையாபுரந்துரைகள் வந்து கட்டப்

பொம்மனைப்பற்றி பிராதுகள் கூறினர். அதற்கு சாக்சன் துரை, கட்டபொம்மனைப் பற்றிக் கேட்டு, அவனைவரவழைத்துத் தக்கவாறு அடக்கி ஒடுக்குகிறோம் என உறுதி உரைத்தான். உடனே, 72 பாளையக்காரர்களோடும் என்னைச் சந்திக்கஉடனே புறப்பட்டு வர வேண்டும் என அஞ்சலில் கடிதம் அனுப்பினான்.

பாஞ்சை மன்னன் கட்டப்பொம்மனிடத்துக் கடிதம் வந்தது. கடிதத்தைப் பிரித்துக்கம்பளத்தார் அனைவரும் படித்துப் பார்த்து, ஒன்று கூடி ஆலோசனை செய்யலானார்கள். ஊமைத்துரையிடத்தில் தானாபதிப் பிள்ளை கைச் சாடைகள் மூலம் கடிதத்தின் சாராம்சத்தை அறிவித்தான். செய்தி கேட்டு, தன் கைவிரலைக் கடித்து, நாளையே பயணம் என்று கூறி, அண்ணன் கருத்தை உசாவினான் ஊமைத் துரை. முடிவில் இருவரும் சாக்ஸன் நேர்மையாகவும் சந்தோஷமாக வும் பேட்டி கொடுத்தால் நம் நன்றி அவனுக்குரித்தாகட்டும்; இல்லை யெனின், மாய்கைகள், வஞ்சனைகள் செய்தானானால், அவனை மண்டை சிதறவுதைப்பதே சரி என்று உறுதிகள் பேசிக்கொண்டனர்.

உடனே, தானாபதிப் பிள்ளையைக் கூப்பிட்டு, சேனை தளங் களைச் சேகரம் செய்யும் என்று உத்தரவிட்டான். தானாபதிப்பிள்ளை யும், எல்லாத் தலைவர்கட்கும் நிருபம் எழுதி உடன் ஆயத்தம் ஆகும் படிச் செய்தான்.

**கம்பளத்தார் பேட்டிகாண ஒன்று திரளுதல்:—** நாட்டுத் தலைவர்கள், கோட்டைத் தலைவர்கள்; முள்ளுக்காட்டுச் சூரன், கொட்டமடக்கி, வேல்காரர், தேவமார், சேர்வைக்காரர், சின்னக் கோடாலி,பெரியக் கோடாலி, சித்துளி, மன்னவன் சில்வார், தேக்குல வார், கர்த்தன் சிவத்தையா, முத்தையா, முத்துக் கருத்தையா, முத்து சிவத்தையா, உத்தமக் குமரையா, தளகர்த்தன் வெள்ளையா, சின்னத் தளவாய், பெரியத் தளவாய், புலிகுத்தி நாயக்கன், சென்னம நாயக்கன், பொன்னையா, மன்னவனார் கோட்டைச் சுப்பையா, மன்னன் சின்னண்ணன், வீரண்ணன், மாதிரி வெள்ளையன், பூவண் ணன், காவலிலும் வெகுளியிலும் போரிடுவதிலும் கெட்டிக்காரனாக இருப்பவனும், கோழிச் சண்டையில் திறமை மிக்கவனும், சட்டத்திட்ட மானவனும் ஆகிய பாதர்வெள்ளை, தாய்க்கிராமம் பசுவந்தனைச் சாமி நாயக்கன்மார், நாகம்பட்டி வசீகரன், நாகம்பட்டித் துரை மன்னர், சின்னத்துரை, சந்திர குமார், குளத்தூர் அப்பர் நாயக்கன், பூசனூர் மணிமுத்துப் பிள்ளை, முத்துக்குமாரர், சேவல்பட்டித்தேவன், நொண் டிச் சுப்பண்ணன், தூத்துக்குடி அய்யாவுத்துரை, வேடபுறம் வெள் ளைச் சாமி, நாடுபுகழ் சேதுராமநாயக்கன், வெள்ளிக்குரிச்சி முத்து நாயக்கன், மாந்தைநகர் செல்வன், தளவாய்ப்புறம் கட்டமல்லு, சிவசங்கரன், குழந்தைவேலு, சித்திரவேலு, வெடிச்சூரபோகி, பாறைக்குன்றக் கொத்தாளமுத்து, பாண்டியபுரத்து வீரப்பன், சூரங்குடி வாலசுப்பிரமணியன், சுந்தர பாண்டியன்,

அல்லிக் குளத்துச் சுப்பா நாயக்கன், அணியநல்லூர் வீரண்ணன், கல்லுமடம் மாதவநாயக்கன், காளல்குடி கட்டமல்லன் சில்லா நத்தம் வாலே நாயக்கன், சின்னன் மைத்துனன், கொல்லம் பருப்பு மாடசாமி, அரசடிவாழும் அப்பாவு நாயக்கன், அரசமுத்து, கருசக் குளம் கருப்பண்ணன், நல்லக் காம்பட்டிவாழும் லெக்கையன், முள்ளுப்பட்டி வீரண்ணன், முள்ளுக்காட்டு வீரபாண்டியன், வள்ளி நாயகப் புறத்தார், சோலையநல்லூர் வீரண்ணன், குதிரைக்குளத்துத் தும்பிச்சி, மேல மருதூர்ப் பாண்டியர், வீரலெக்கணன், சின்னமல்லு, ஆத்தூர் அழகண்ணன், நல்ல ஐயர் பட்டி மெய்யண்ணன், குண்டத் தலங்குடி குமாரண்ணன், சண்முகபுரத்திலே சின்னமல்லு நாயக்கன், தம்பி தடிவேங்கையன், கம்மவார், தோக்லகுவார், சில்லவார், அருங் குளத்து நாட்டார், அம்பலவாணப் பொம்மன், ஏழுகிராமத்து மாட சாமி, வெள்ளூர்ப்புறத்துக் கருத்தமுத்து, வேடிக்கைகாரன் சிவத்து முத்து, குழந்தைவேல்பிள்ளை ஆறுமுகம், சித்தூர்ப்பட்டிச் சிங்கன், அருள்புரம் முருகப்பிள்ளை, நிருபன் சுந்தரலிங்கம் பிள்ளை, மணியாச் சித்துரை மன்னவன், சிங்கேறு நாட்டார், வீரசூரன், வங்காரு நாயக்கன், கொட்டாப்புளி, மகமது தம்பி ஈசுப்பு லெப்பை, குப்பராவுத் தன், இஸ்மான் ராவுத்தன், சாத்தன், பொட்டைச் சங்கரன், குட்டப் பாண்டியன், பள்ளக்கலாடி, குடிமகன், குடும்பன் பள்ளக்கருப்பன், சன்னக் கோடாலி, பரம்பெரியான், பொட்டிப்பகடை, கந்தன்பகடை, முத்தன் பகடை, தாமன் பகடை, தட்டப்பாரையான், சக்கையன், லெக்கையன் முதலியவர்கள் பலப்பல பாளையங்களிலிருந்து, தத்தம் பரிவாரங்களுடன் பாஞ்சாலங்குறிச்சியில் புடைசூழ்ந்தனர். இவர்கள் ஒன்று திரண்டது வசந்தகால மேகசஞ்சாரத்தை யொத்துக் காட்சி யளித்தது.

ஒவ்வொரு பாளையப் பட்டும் கவணி என்ற பெயரில் அழைக் கப்பட்டு வந்துள்ளது. அவரவர்கள், கட்டபொம்மனுக்கு, தத்தம் காணிக்கையாக, நெற்பொதிகளைக் கொண்டுவந்து அவன் சமுகம் வைத்து வணங்கினர். உடனே கட்டபொம்மன், எல்லோரையும் ஒன்றுபோல சோமன் கட்டுவதும், முண்டாசுக் கட்டுவதும் முன் குஞ்சம் பின்குஞ்சம் கட்டுவதும் ஆக உத்திரவு பிறப்பித்தான். அதிர் வேட்டுகளும், வெடிகளும் போட்டுக் கிளம்பினர். கட்டபொம்மனும் சிங்காரித்துக் கொண்டு, நெற்றியில் திருநீறணிந்து, கத்திப் புருவங்கட்கு மையிட்டு, சவ்வாது, சாந்து, புனுகு முதலிய வாசனைத் திரவியங்களணிந்து, சந்தனத் திலகமிட்டு, பார்வைக்கு ஒளிவிளக்காக விளங்கும் துப்பட்டா மேல்போட்டுக் கொண்டு, கண்டி, சரப்பணி, மோகனமாலைகள், வண்டிக் கடுக்கன், முதலிய அணிவகைகள் அணிந்து கையில் சுண்டுவில்லும், கத்தியும் எடுத்துக்கொண்டு தம்பி ஊமைத் துரை, மந்திரி தானுபதிப்பிள்ளை, துரைசிங்கம், முதலானவர்கள் உடன் சூழ, லிங்க பூசை, சிவ பூசை, குருபூசைகளும் முடித்து, தானங்

கள் செய்து, சாத்திரம் பாரத்து போசனச்சாலையில் நுழைந்தான். அங்கு வாழையிலையில், சம்பாச் சோறும், சாதிக் கோழிக் கறியும், முயல் கறியும், கதுவாலி உடும்பு முதலியவற்றின் கறிகளும், தேனமுதும், பதினெட்டுக் கறிவகைகளுடனே, உணவருந்திவிட்டு, 72 பாளையத்திலும் திரண்டு வந்துள்ள கம்பளத்தாரனைவருக்கும் பந்தி பந்தியாக வைத்துப் போஜனம் செய்வித்தான்.

பலரும் உண்டு, உண்ட களைப்பு மாறுவதற்கு, அவரவர் தோப்புகளிலும் சோலைகளிலும் சென்று அமர்ந்தனர். உடனே, கட்டப்பொம்மன் பயணப் பேரிகை முழங்கச் சொல்லி எல்லோரும் ஒருங்கே பாஞ்சைப்பதி விட்டேகினர். கம்பளத்தாரைப் பிறர் அணுகிக் கேட்டால், நாங்கள் குற்ருல நாதரை தரிசிக்கப் போவதாகக் கூறும்படி உத்தரவிட்டான். உடன் வேங்கைப்புலிபோல் ஊமைத் துரை கிளம்பினன். கட்டபொம்மன் சக்கதேவியையும், உமையையும், வணங்கிவிட்டுச் சென்றனன் பேட்டிக்கு !

கட்டபொம்மன் பேட்டிக்கு போகுமுன்,

"ஆண்டவளே ! லோகநாயகியே! என்னை யாதரிக்கும் சக்க தேவியம்மா !; உண்டென்ற பேர்க்கு ஒளிவிளக்காய் நிற்பாள் உத்தமியே! சக்கதேவியம்மா! வேண்டிய வரங்கள் கொடுக்கும் எங்கள் வீரமல்லுசக்கதேவியம்மா! நம்பினபேர்க்கு உதவி செய்யும் லோக நாயகியே!" என்று சக்கதேவியை முக்கியமாக வழிபட்டுவிட்டுக் கிளம்புகிருன். அப்போது சக்கதேவி கோவிலில் பல்லி நிமித்தஞ் சொல்லியது. தும்பிச்சி நாயக்கன் பல்லி சொல்லியதற்குப் பலன் சொல்லத் தொடங்குகிருன், அஃதாவது, இந்தப் பல்லிச் சொல்லின் பலன், "நமக்கு ஜாக்ஸன் துரை பேட்டி கொடுக்கமாட்டான். மேலும், கத்திப்போர், வெத்திப்போர், ரத்தக்காடாகும்" என்றும் சொல்லி முடித்தான்.

தும்பிச்சி நாயக்கன் சொன்ன வார்த்தையைக் கேட்டு, கட்டப் பொம்மன், கண்கள் பொறிபறக்க, கையைக் கடித்து உதறிக்கொண்டு, "தெய்வ உதவி நமக்கு உண்டு, தேவி கிருபைகள் நமக்குண்டு" என்று சொன்ன வையாபுரித்துரைப் பேச்சின்படிப் பயணமானுன். அப்பொழுது, தனது சேனை வீரர்களுக்கு,

"பிறந்த உடனேஇறந்த காயமினிப்
பின்னே உயிர் வைத்துப் பார்க்கலாமா?"
கறந்த பாலையுங் காகங் குடியர்து,
கட்டபொம்மன் துரை பேருசொன்னுல்"
சற்றும் நெஞ்சந் திடுக்கிடவே துஷ்ட
மித்திரப் பேய்கள் பயப்படுமே"

வெற்றியதாகி வரலாம் என்று கூறி உற்சாகமூட்டினுன்.

உடனே, தான் வெள்ளைக்குதிரை மீது அமர்ந்து சவாரி செய்ய, மற்றப் பிரதானி முதலியோர்களும் அவர்கள் தமக்கே உரித் தானப் பல்லக்கில் ஏறிச் சவாரி செய்ய, யானை, பரி, சேனை, ஒட்டகை அவைகளின்மேல் பேரிகைகள் முழங்க, பாஞ்சைநகர் விட்டுப் புறப் பட்டான் கட்டபொம்மு துரை.

அவன் குதிரைமீது சவாரி செய்யவும், அருகில் தம்புரு வீணை முழங்கிட, வெண்சாமரைப்போட: தமிழில் வாழ்த்துப்பாட, கட்டியங் கூற, பராக்கு எச்சரிக்கை என்று முழங்க, மங்கையர் மங்களம் பாடியும், நாட்டியம் ஆடியும் வர, மேளவாத்தியங்கள் முழங்க, வல்லையம், நேரிசம் வரிசையாகச் சூழ்ந்துவர, தாழை மடல்களும், பிச்சு, இரு வாட்சிப் பூக்களை முடித்துக் கொண்டு வீரர்கள் புடைசூழ குற்ருல நாதரை நோக்கிச் சென்ருன்.

குற்ருலத்தில் கூடாரமடித்து, குற்ருல நாதரைத் தரிசித்து விட்டுச் சபை நடத்தினுர். கட்டபொம்மனும் கொலுவிருந்தான். இது கிடக்க;

கும்பினியின் சாக்ஸன்துரை குற்ருலத்தில் வடபுறத்தில் கூடாரமடித்திருந்தான், அவனும் தர்பார் நடத்தினுன். மேலும், அவன், தன் பொட்டலரைப் பார்த்து வேங்கைபோல் சீறிக்கொண்டு, கட்டப்பொம்மன் நம்மை பேட்டி செய்ய வரவில்லை. சண்டைக்கு ஆயத்தமாகவே வந்துள்ளான். இவன் துஷ்டப்பயல்! வாயிதாக்கட் டத் தவறியவன்! நமது படைகளின் திரம்கண்டும், இவன் கிஞ்சித்தும் அச்சமில்லாமல் பாளையஞ் சேர்த்துக்கொண்டு வந்துள்ளான், இவனைப் பார்த்தால் மதங்கொண்ட யானையைப் போல் தோற்ற மளிக்கிருன்.'' என்று பல்வாருகக் கூறினுன்.

இது செய்திகள் அறியாதக் கட்டப்பொம்மன், தாளுபதி நோக்கிப் பேட்டி காணக் கூறினுன். அவனும் சென்று, சலாம் செய்து, பேட்டிக் கொடுக்கவேண்டினன், சாக்ஸன் துரையிடத்தில். சாக்ஸன் திருநெல்வேலியில் பேட்டி கொடுப்போம் என்று கூறி யனுப்பிவிட்டான்.

அங்கு இருவரும் சென்று முகாமிட்டனர். சாக்ஸன்துரை அங்கும் பேட்டி கொடுக்க மறுத்து ஸ்ரீவில்லிபுத்தூரில் பேட்டி கொடுப்போம் என்று கூறிவிட்டு, அங்குச் சென்றனன். இவ்வாருகச் சாக்ஸன்துரை, ஸ்ரீவில்லிபுத்தூர், சங்கர நயினுர் கோவில், திருச்சுழி, கமுதி நல்லூர், அலங்கார நல்லூர், முதலிய விடங்களில் எல்லாம் பேட்டி, பேட்டி யென்று வரவழைத்து வரவழைத்து ஏமாற்றி, இறுதி யில் இராமநாதபுரத்தில் பேட்டி என்று கூறி அங்கு சென்றுவிட்டான்

சாக்ஸன் இராமநாதபுரத்தில் இராமலிங்க விலாசத்தின் மேல் மாடியில் போய் அமர்ந்து இருக்க,வீரர்களை வாயில் காவல்காரர்களாக நியமித்து, தக்க பந்தோபஸ்துடன் தங்கினன். அப்பொழுது அங்கிருந்த தம் இனத்தவரான கர்னல் அவிட்டன் துரையிடத்தில் உரையாடி மகிழ்ந்தான். பின்பு;

பொட்டலரைப் பார்த்து, "கட்டபொம்மன் மிக்க துட்டனுச்சு! அவனைக் கண்ணலே பார்க்கவும் அச்சமாயிருக்கிறது! சின்னத்துரை போல் இருக்கிருன்; எக்களிப்பாக நம்மிடத்தில் வந்துள்ளான்; சாகத்துணிந்தவன், சண்டைக்கு வந்தவன் போலிருக்கிருன்! ஆள், பரி, சேனைகளோடு வந்துள்ளான்! கிஸ்திப்பணம் செலுத்தவில்லை! கேள்விக்கும் பதில் சொல்லவில்லை! பச்சையாய் ரத்தங் குடித்திடுவான்! மூளையுருஞ்சுவான் ஊமையன்! ஆதலால், இவனை சென்னைக்கனுப்பி அங்குத் துப்பாக்கியால் சுடவேண்டும்" என்று இன்னேரன்ன கூற்றுகளைக் கூறினன். மேலும், இராமலிங்க விலாசத்தைச் சுற்றிப் பாருவிட்டான்.

வீரப்பாண்டியக் கட்டப்பொம்மனும் இராமநாதபுரத்தில் இராமலிங்க விலாசத்தின் பின்புறமாகவே, முகாமடித்து, தன் பரிவாரங்களோடு ஏகச் சக்கரவர்த்திபோல் கொலுவீற்றிருந்தான். மற்ற சேனைத் தலைவர்களும் கம்பளத்தார்களும் மகிழ்ச்சியாக, மல்யுத்தம், சாவல் கட்டி விளையாடுவது முதலியவற்றில் பொழுதுபோக்கி யிருந்தனர்.

இதனைக் கண்ட சாக்ஸன் துரை, கட்டபொம்மனின் சேனைத் தளத்தைப்பார்த்து, இவன் நமக்கு எட்டாதக் கொம்பிலிருக்கின்ற தேன் என நினைத்து, கையை வாயில் வைத்துக் கடித்து, தொப்பியைக் கழற்றி மேஜைமீது அடித்து, உக்கிர ஆவேசத்தோடும், வீரியக் கோபங்களோடும், தீனி தின்பதில்லை, தலைகவிழ்ந்து படுப்பதில்லை, இவனை விலங்கு மாட்டாவிட்டால் என சபதங்கள் கூறினன். உடனே, அம்மூன்று பேரையும் அழைத்து வரும்படிக் காயிதம் எழுதியனுப்பினன். கடிதம் கண்ட கம்பளத்தார் ஆவேசங் கொண்டனர் கும்பினிக் காயிதங் கொண்டு வந்த சிப்பாகியிடம், ஊமைத்துரை சரமாரியானக் கேள்விக் குமுறல்களை விடுத்தான், அஃதாவது, இப்பொழுது நாங்களனைவரும் பேட்டி காண வந்தால் என்ன குற்றம்? எல்லோரும் வந்தால் வருவமே யல்லாமல், இல்லாதிருந்தால் வருவதில்லை. இதனல் பொல்லாங்கு வந்தால் வரட்டும்; எங்களுக்குப் பொல்லாப்புக்குப் பயமில்லை; உங்கள் சாக்சன் புத்தியில்லாமல் நடந்தால், கத்தியால் வெட்டிப் பிளந்திடுவேன்; என்று கடுங் குரலில் சன்னைகள் காட்டிக் கூறினன். மற்றும், காவல்காரன்மகனும், பொட்டிப் பகடையும், பாதர்வெள்ளையும், ஊமைத்துரை போலவே, கோபங் கொண்டு குமுறி யெழும்பிடவே, காகிதம் கொண்டுவந்த சிப்பாகி ஓடிவிட்டான்.

ஓடிவந்தச் சிப்பாகி, சாக்சனைக் கண்டு சலாம்செய்து, சென்றுவந்த விபரங்களைக் கூறினன். சாக்சனுக்குக் கோபம் உண்டாகி, அவிட்டன் துரையை ஆலோசனைகள் கேட்டான். அவன் "பாஞ்சைப்பதியில் முன்னே மணியம் பார்த்தக் கோபாலய்யரை யழைத்து, தந்திரமாய்க் கூறியனுப்பினல், கட்டப்பொம்மனைக் கணத்தில் கூட்டி வருவான்" என்று ஆலோசனை கூறினன்.

சாக்சன்துரை, அதுபோலவே, கோபாலய்யரை யழைத்து, "கட்டப்பொம்மன் ஊமைத்துரை தானுபதிப்பிள்ளை ஆகிய மூவரையும் என்னைக் காணும்படிக்குத் தக்கவாறு அவர்களிடம் கூறியழைத்து வந்தால், உமக்குத் தக்கப் பூமிகளைப் பரிசாகத் தருவேன், பதவி தருவேன், பணமும் தருவேன் எனக் கூறினன்.

கோபாலய்யர் கட்டப்பொம்மனைக் கண்டார். அவனும், அவரிடம் அன்பாகப் பேசினன். ஐயரும், அவன் மனங்கோணுதவாறு, சாக்ஸன் துரை கூறியதைக் கூறி, மூவரைமட்டும் அழைத்தார். அதற்கு, கட்டபொம்மன் பேட்டிகாண அழைக்கும் சூழ்ச்சி நினைத்துதுடித்தான். போர் முகத்திற்கு அஞ்சாத ஊமையன் சினந்து, "பனைமரத்தில் ஏறலாமா? ஏறிப், பாளை தொடாமல் இறங்கலாமா? அதுபோல, இதுவரை வந்தோம். இறுதியில் அந்தச் சாக்சனைக் காணுமல் போனல் பயனில்லை: இளப்பமாகும் எதிரிக்கு? சங்கு சுட்டாலும் வெண்மை தரும்! தங்கங் கெட்டாலும் நிறந்தான் போமோ? மனோன்மணி, சக்கதேவி கிருபைகள் இருக்கின்றன. சாக்கீசன் தானுகவே, சந்திப்புக்குக் கடிதம் எழுதினல் பேட்டி காணலாம். இல்லையெனில் ஒரு கை பார்ப்போமவனை" என்று இன்னொரன்ன கூறினன். உடனே, பேட்டி காண அனைத்துக் கம்பளமும் சென்றன. வாயிற்புறத்திலேயே, கம்பளத்தாரை நிற்க வைத்துவிட்டு, வெள்ளையத்தேவனை மாடிப்படியின் கீழ் தங்க வைத்துவிட்டு, உள்வாசலோரத்தில், ஊமைத்துரையும் மற்றவர்களும் நிற்க, இராமலிங்க விலாசம் முழுவதும் இப்படியாக நிறுத்திவைத்து, தானுபதியும் கட்டப்பொம்மனும் மேல்மாடிவீடு சென்றனர், பேட்டிகாணச் செல்லும்போதே, சாக்சன் துரை தலைகவிழ்ந்திருந்தான். தக்க மரியாதை காட்டவில்லை. பின்னே, முகம் கடுகடுப்புடன் கர்னலைக் கூப்பிட்டு, பாண்டியனையும் தானுபதியையும் பிடியுங்கள், விலங்கடியுங்கள் என்று உத்தரவு இட்டான்.

சாக்சனின் குறிப்பினை யறிந்த தானுபதி, உடனுக்குடன், கட்டப்பொம்மனிடத்தில் குறிப்பினல் கருத்தை யறிவிக்க, கட்டப்பொம்மன் மேல்மாடியிலிருந்து கீழிறங்கினன். கோபாலய்யரும் கடைக் கண்ணினல் கல்லல் வருமென்று கூறவே, விருவிரு என்று துரிதமாகக் கீழிறங்க, உடன் சாக்சன் ஓடிவந்து பிடித்து நிறுத்த, அவனை உதறித்தள்ளி, எள்ளி நகையாடிவிட்டு இறங்க முயற்சிக்க, கர்னல் அவிட்டன் துரை உடன் வந்து கட்டப்பொம்மனைத் தடுக்க,

கோபங்கொண்டு கட்டப்பொம்மன் அவனை உதாசீனப் படுத்த, இருவரும் அங்குக் கட்டிப் புரண்டார்கள் சில நாழிகை. அந்த மல்கட்டுச் சப்தம் கேட்டு, வெளியில் இருந்த பாதர்வெள்ளையனும் ஊமையனும் குலவையிட்டனர். உடன் கட்டப்பொம்மன் பாதர்வெள்ளையை கலாம் வேண்டாமென்று நிறுத்த, அது சமயம் பார்த்து, அவிட்டன்துரை கட்டப்பொம்மனை, மல்கட்டாகப் பிடித்து இழுத்தான். உடனே பெருங் கோபங்கள் தானாகிக் கட்டப்பொம்மன், தன் வீரமொழிகளைக் கூறி, குலவையிடவே, மற்றக் கம்பளமும் குலவையிட்டு, அவிட்டன் துரையைக் கொன்று, கதவு திறந்து வெளியேறி, இராமநாதபுரக் கடை வீதிகளைக் கொள்ளையும் கொலையும் செய்து சென்றனர். அது பொழுது கும்பினியாரின் பீரங்கிக் குண்டொன்று அடைப்பக்காரனை இறக்க வைத்தது. இராமநாதபுரம் நகரை விட்டேகி நெடுந்தூரம் சென்றவுடன் தானாபதிப்பிள்ளைத் தன்னைநோக்கி வராமைக் கண்டு, கட்டபொம்மன் ஆலோசித்தான், மற்றவர்களையும் சரிபார்த்தான். ஊமையனும் பிள்ளை வராமைகண்டும், அகப்பட்டுக்கொண்டதைக்கண்டும் வருத்தமுற்றான். உடனே, கன்னிமார்கோவில் கெவுளிச் சகுனஞ் சொல்லவும், அதற்குப் புலிக்குத்தி நாயக்கன் பலன் சொல்லத் தொடங்கினான். அஃதாவது, தானாபதிப்பிள்ளை சமர்த்தனென்றும், அவனுயிர்க்குச் சேதமில்லையென்றும், கண்டிதம், தண்டிதம் மெத்தவுண்டு அவனுக்கென்றும், தண்டனைக்குள்ளாகிப் பின்பு சென்னைப் பட்டணம் சென்று, ஜெனரல் துரைகளைக் கண்டு, பேட்டிசெய்து, பின்னே நாற்பது நாளாகும் அவன்வருவதற்கு" என்று பலன் கூறினான்.

உடனே, பாளையக்காரர் பாஞ்சாலங்குறிச்சி நோக்கிச் சென்றனர். போகும்போது வெள்ளைக்காரருக்கு உட்பட்டத் தூத்துக்குடியில் கொள்ளையிட்டனர். உடன் பாஞ்சை நகரையடைந்தனர். இது இவ்வாறு இருக்க;

அவிட்டன் துரையிடம், சாக்சன் துரை, வெதும்பிப் பேசி, எட்டுநாளைக்குள் கட்டப்பொம்மனைப் பிடித்து விலங்கடிக்க வேண்டும் என்றான். மற்றும், தானாபதிப்பிள்ளையிடத்தில் கோபத்தைக் காட்டி, அவனைச் சித்திரவதை செய்து, மானபங்கம் படுத்திக் கிட்டி விலங்கடித்தான். பின்னே, அவனை, பாராக் காவலோடு சென்னை-கவர்னர் ஜெனரலிடம் அனுப்பிவைத்தான்,

அங்கே: தானாபதிப்பிள்ளை, கவர்னர் ஜெனரலைக் கண்டு, சாக்சன் துரை தனக்குச் செய்த அட்டூழியங்களையும், கட்டபொம்மனுக்கு வெகுளிப் பிறக்குமளவு நடந்து கொண்டதையும் விளக்கமாகக் கூறினான். கவர்னர் துரைகள் பிள்ளையின் பேச்சுக்கு மதிப்பும் ஆதரவும் கொடுத்து, கட்டபொம்மனை நேரே சென்னைக்கு வருமாறு கூறியனுப்பினர்.

பின்னே, தானுபதிப்பிள்ளை பாஞ்சைநகரடைந்து, நடந்தவிவரங்களை முதலிலிருந்து இறுதிவரைக்கும் கோர்வையாகக் கட்டப்பொம்மனிடத்தில் கூறினர். உடனே பிள்ளைமகனுக்கு அன்பு மொழி கூறி இருக்கச் செய்து, அவன் கூற்றுப்படி, கட்டபொம்மன் சென்னைக்கு ஆயத்தமானுன்: உடன், கட்டபொம்மன் தன் பரிவாரங்களோடும் மதுரை மீனுட்சியம்மையை தரிசித்துவிட்டு, திருச்சி சென்று, துரைமார்களைக் கண்டான். அங்கே துரைமார்கள் மிக மரியாதையாக அவனை வரவேற்று உபசாரம் செய்தனர். இதனை யெல்லாம் சாக்சன் துரை கண்டுகொண்டு வாளா இருந்துவிட்டான். பின்னே கட்டப்பொம்மன், சென்னைக் கவர்னர் ஜெனரலைக் கண்டு, பேட்டி கண்டான். கவர்னர் ஜெனரல் துரைமார் அனைவரும் இவனை, ராஜ உபசாரத்தோடு வரவேற்ருர். இருவரும் சித்தமகிழ்ந்தங்குத் தங்குங் காலத்தில், கட்டப்பொம்மனைப் பார்த்து, பலப்பல வினுக்களை எழுப்பினுர். அதுபொழுது ஒவ்வொரு வினுவுக்கும் தக்கப் பதிலை செம்மை பொருந்தக் கூறிக்கொண்டே வந்தான். அஃதாவது, தூத்துக்குடிக் கொள்ளையடித்தமை, சேவுகர் சம்பளம் பற்ருக்குறைக்கென்றும். எட்டையாபுரத்தில் கொள்ளையடித்தமை, பதிலுக்குப் பதில் செய்தேன் என்றும், காட்டுநாயக்கனூர் கம்பங்கொல்லையில் நான் தீ வைக்கவில்லை; அவனே வைத்துப் பழி சுமத்திவிட்டான் என்றும் ஏழு வருஷத்துப் பாக்கியைக் கட்டாமல் இருந்ததற்கு, வானம் பெய்யவில்லை, விளைவுமில்லை, தழைவுமில்லை, காடு வீண்பாடாய்ப் போச்சுது, மக்கள் வடக்கே நாடிச் சென்றுவிட்டனர், இட்ட விதையும் விளையவில்லை, விளைந்த பயிரும் தாளாய்ப் போச்சுது, வெள்ளாண்மைக்கு எப்பொழுதும் தாவந்தம் சொல்ல முடியாது; ஆகவே வானத்தின் கொடுமையினுல் இந்த விரோதங்கள் வந்ததென்றும் விளக்கிக் கூறினுன். பின்பு, மழை பெய்தால், கிஸ்திப் பணம் கட்டுகிறேன் என உதட்டுப் பேச்சினுல் பேசிவிட்டு, துரைமார்களின் சீர்வரிசைகளைப் பெற்றும் துரைச்சாணியின் புகழ்மாலையைக் கேட்டும் சென்னையை விட்டுப் பாஞ்சைக்கு மீண்டனன்.

## திருமண நிகழ்ச்சி

சட்டப் பிரதானியாம் சிவசுப்பிரமணியப் பிள்ளை, மகனின் கலியாணத்திற்குப் பாக்கு வைத்தான். அப்பொழுது, ஊமைத்துரை என்னென்று கேட்க, அவன் புரியும் வண்ணம் கைச்சன்னைகள் செய்து செய்திகள் தெரிவிக்கப்பட்டன. உடனே ஊமைத்துரை, பிரதானியோடு திருநெல்வேலிச் சீமையில் கும்பினியின் நெற்பொதிகளைக் கொள்ளை செய்தனர் பட்டப்பகலில். அதுபொழுது, கும்பினியின் ஏஜெண்டுகள் அவனை மறுத்துக் கேட்க, அந்த ஊமைத்துரை, "வானம் பொழியுது, பூமி விளையுது" மன்னவனுக்கேன் வரிகொடுப்

பது? அவன் மைத்துனனு? சாதிக்காரனு? உழவு துரைக்கு வந்தவனு? உழவெருதுகள் மேய்த்தவனு? வெள்ளாண்மைக்கு என்ன உதவி செய்துள்ளான்? அவன், கிஸ்திக்கு வந்தால் வாள்முனையில் பணம்'' என்று பதில் கூறிவிட்டான். இவ்வாறு, தூத்துக்குடியிலும் கொள்ளைகொண்டு போனுன்.

உடனே தூத்துக்குடி பிறகட்டு மேஜர் சென்னைக் கவர்னர் துரைகட்குக் கடிதம் எழுதிக் கூக்குரலிட்டான்.

சென்னை, கும்பினித் துரைகள் கட்டப்பொம்மனுக்கு, வெகுளியுடன் அழைப்புக் கடிதம் அனுப்பினுர். கட்டப்பொம்மன் அதனைப் படித்து, விடுத்து, நாட்டாண்மை செய்வதும், வேங்கைப்புலி வேட்டையாடுவதும், கும்மியடிப்பதும், வேடிக்கையாகக் கொலுவிலிருப்பதுமாக விருந்தான்.

கட்டப்பொம்மன், கடிதத்தை நிராகரித்ததைக் கண்ட கும்பினியார், சென்னையிலிருந்து பட்டாளம் ஒன்று திரட்டி, அவனை எதிர்க்கும்படி உத்திரவிடுத்தனர். கும்பினிப் பட்டாளமும் திரண்டு, மக்காளித்துரை (Macaulay) தலைமையில் பாஞ்சை நோக்கி வந்தது.

கட்டப்பொம்மன் கும்பினிப் பட்டாளம் நாலாத் திசையிலும் திரண்டு வருவதைக் கண்டு, தன் சகாக்களுடன் ஆலோசித்தான். உடன் கும்பினியை எதிர்க்க கம்பளத்தார் திரண்டெழுந்தனர். அது நோக்கி, வெள்ளையத்தேவன் போருக்கு எழும்பிடக் காகம் குறுக்கிட்டது. அவன் மனைவி சொப்பனங் கண்டதைக் கூறி, தன் கணவனைப் போகாதே என்று தடுத்தாள். அஃதாவது,

"இன்று உன்னை யிழந்தேன்; குளிக்க மஞ்சளரைத்தேன், அது கொம்பானைக் கரிபோலாச்சுது; வாழைத் தோப்பு அழியக் கண்டேன்; மல்லிகைப் பூ கருகக் கண்டேன்; பாஞ்சைப் பாழூராகப் போகக் கண்டேன்; எனது கூந்தல் அவிழ்ந்து அலையக்கண்டேன்; கொண்டையில் பூ குலையக் கண்டேன், ஆந்தை அலறி விழிக்கக் கண்டேன்; கூகை குளறக் கண்டேன்; இஞ்சிக் கிணறு இடியவும், எலுமிச்சந் தோப்பு அழியவும், மாமரத் தோப்பும்; கோட்டையும் சிதறவும் கண்டேன்! கூடக் கோபுரக் கொத்தளங்கள் இடியக் கண்டேன்; கோட்டை அழியக் கண்டேன், நாட்டில் மண்மாரி பெய்யக் கண்டேன்: இந்த நாடுவிட்டு ஓர் பெண் போகக் கண்டேன்; கீழ்க் கோட்டை வாசலிலுள்ளக் கீரைப் பாத்தியில் குண்டு விழக் கண்டேன், அங்கே உன் தலை போகக் கண்டேன்; தானுபதி நாகலாபுரத்தில் தூக்கக் கண்டேன்; கருத்தய்யா கட்டப்புளியில் தூக்கக் கண்டேன்; பட்டத்தானை நகர் விட்டுப் போய்விடவும், நான் சொக்கநாதர் அறிய இந்தப் பொல்லாதச் சொப்பனங் கண்டேன்; ஆதலின் போகாதே, போகாதே என்று மடிபிடித்திழுத்து அழுதாள்.

பாதர்வெள்ளை அவளது தடையினல் சபலமும், உடனே உறுதியும் கொண்டு, சுத்த வீரனென்று பேரெடுத்து நமது கர்த்தனைக் காட்டிக் கொடுக்கலாமா? போடி நீ! யப்புறம் என்று கூறிவிட்டான். பின்பு, நல்லவள் வார்த்தையைக் கேளாமல், வல்லமையானப் புயந்தட்டிப் போருக் கெழும்பினன்.

உடனே, இருவர் போர்முனையும் கடூரமாக ஒன்றுக்கொன்று எதிர்க்கவும், வெள்ளையத்தேவன் வானிலிடிபோல் சண்டையிட்டுப் பல நூறு வெள்ளையர்களைக் குத்திக் குவித்துவிட்டு, வந்துகொண்டிருக்கும் வேளையில், காலந்துரை குலவை யிடவும், வெள்ளையத்தேவன் அவனை எதிர்க்கவும், இறுதியில், காலந் துரையைக் குத்தி மலத்திட்டான். பின்பு, ஹாக்கித் துரையால் வெள்ளையத்தேவனும் பட்டிறந்தான். இதனைக் கண்ட ஊமைத்துரை, வெள்ளையத்தேவன் உடலை மார்போடணைத்துக் கொண்டு கதறினன். கட்டபொம்மனும் அலறினன்; மற்றவரும் நினைத்து வருத்தமும் அயர்வும் ஆனார்கள்.

அதுபொழுது, அச் செய்தி கேட்ட அவன் மனைவி, வாயிலும் வயிற்றிலும் அறைந்துகொண்டு யுத்தக்களத்திற்கு ஓடோடி வந்தாள். தோகைமயில் போல் வாய்திறந்து, நாயகன்மேலே, யடித்துக் கொண்டு விழுந்து புலம்பினள். தன் ஆற்றுமை யெல்லாம் சேர்த்து ஒன்றாக அழுதாள். (அவள் அழுததை, கவி, தன் சொல் வளத்தினல் தத்வரூபமாகக் கூறுவதை நேரே நூலில் படிக்கவும்). உடன் கட்டப்பொம்மன் அவளைத் தேற்றி, ஆதரவு மொழி கூறி அமர்த்தினன். சந்தனக் கட்டையடுக்கி அதன்மீது அவனுடலை வைத்து எரித்தான். பின்பு இருமுனையரும் தத்தம் பிணங்களை அடக்கம் செய்யலானார்கள்.

காலந்துரை இறந்ததை, சென்னை கவர்னர், ஜெனரல் துரைகளறிந்து, அதிகக் கோபங்கொண்டு, அக்கினீசுத் துரையைப் பாஞ்சைக்குப் பட்டாளத்துடன் அனுப்பினார்கள். அப் பட்டாளம் மதுரை வைகைக் கரையில், கூடாரமடித்திருந்து, இறுதியில் ஒட்டப்பிடாரத்தில் வந்திறங்கின. அதுசமயம் அங்கு இருந்தத் துரைமார்களிடத்தில் யுத்தத்தைப்பற்றி விவரமறியலானன் அக்கினீசுத்துரை.

அக்கினீசுத்துரை, உடனே பட்டாளத்தைத் அணிவகுத்து நிறுத்திக் கம்பளத்தார்மீது குண்டுமாரிகளும், பீரங்கிகளும் பொழிந்தான். அதனையறிந்துக் கட்டப்பொம்மனின் தளகர்த்தர்கள், ஆலோசித்து, அவர்கள் பகலில் தூங்கும்போது, தாங்களனைவரும் ஒரே மூச்சுடன் அவர்களை வேட்டையாடிக் கொலையும் செய்தனர். உடனே, அதனையறிந்த அக்கினீசுத் கடுங்கோபங்கொண்டு பீரங்கிகளைக் கணக்கில்லாமல் போட்டான். போர்க்களம் ஒரு ரணக் காடாகத் திகழ்ந்தது. மக்காளித் துரையால் கந்தன் பகடைச் சுட்டுக் கொல்லப்பட்டான். பின்னே, கம்பளத்தா ரனைவரும்,

களத்தை விட்டுத் தப்பினர். (தப்பிய விதங்களை மிக அருமையாகக் கவி, சித்திரத்திருக்கிறார், காண்க.)

கட்டபொம்மன், கந்தன் பகடை இறந்ததை, சுந்தரலிங்கத்தின் வாயிலாகக் கேட்டு, வருத்தமுற்று, பின்னே, மீண்ட சுந்தரலிங்கத்திற்கும் வீரமல்லுக்கும் பரிசுகள் வழங்கினான். இது நிற்க,

பட்டாளத்தின் பெரும்பகுதி பட்டமை கண்டு, அக்கினீசுத்துரை மிக வருத்தமும் துயரமுங் கொண்டான். உடனே, பாஞ்சை நகர் நோக்கிப் படையெடுத்துச் சென்றான்.

அதுபொழுது, அதனை யறிந்தக் கம்பளத்தார் முப்பதின்மர் எதிர்த்துச் சென்று போரிட்டனர். முப்பது பேரும் மடிந்தனர். உடனே, கும்பினிப்பட்டாளம் பாஞ்சைநகர்க் கோட்டைக்கண்மையில் சென்று முகாமடித்தன. போர்க் கோலமும் ஆயின; போரிடவும் துணிந்து பீரங்கிகளை முழங்கின. பாஞ்சைக் கோட்டை, தீப்பற்றி யெரிந்தது. அப்பொழும், கட்டப்பொம்மனும் மற்றவரும் அதனை உதாசீனமாகக் கருதியே, தங்கள். தங்கள் தொழிலில் ஈடுபட்டிருந்தனர். அதனைக் கண்டு அக்கினீசுக்குச் சந்தேகம் உண்டாயிற்று. செம்பாதி ராத்திரி வேளையில் கம்பளத்தார் ஒன்றுகூடி ஆலோசித்து, தப்பிப்பிழைத்து, கோட்டைக்கப்புறம் சென்று எதிர்க்க வெண்ணினர். வெளியில் தப்பிப்போய் ஊமைத்துரை போர் தொடுத்தான். கும்பினியின் எதிர்ப்புக் கடுமையினால் ஆவேசங்கொண்டு, தடிக்கம்பும், வளை தடியும் கொண்டு வீராவேசத்தோடு நெருங்கிப் போரிட்டான். அதுபோலவே, சின்ன வீரய்யா, சின்ன வீரண்ணன், சின்ன லக்கணன், முத்தன் பகடை, பொட்டிப் பகடை முதலானோரும் போரிட்டனர். எண்பது கும்பினித் துரைகளையும் பலநூறு சோல்சர்களையும் இறக்கடித்தனர். அக்கினீசுக்கு அது வருத்தத்தைத் தரவே, உடனே, குதிரைமீது வந்து பட்டாக்கத்தி கொண்டு கம்பளத்தாரை வெட்டிக் கொண்டே, போரிட்டு வந்தான். அதனைக்கண்டக் கம்பளத்துக் காலாடிக் கருப்பன், உக்கிரமாக எதிர்த்துப் போரிட்டான். பின்பு, பாஞ்சைக் கோட்டைக் கேகினர் கம்பளப் படைகளும் ஊமைத்துரையும்.

கட்டப்பொம்மன், ஊமைத்துரையின் காயங்களைக் கண்டு வருத்தப்பட்டான். உடனே நிலைமை அனைத்தும் சீர்தூக்கிப்பார்த்து எல்லோரும் வெளியேகினர். பின்பு, போகும் வழியில், கட்டப்பொம்மன் காளையார் கோவிலில் தானுபதியை நிறுத்திவிட்டு ஏகினான். ஊமைத்துரையும் சிவத்தையாவும் காளையார் கோவில்காட்டில் வழி தப்பிப் போயினர்.

கட்டப் பொம்மனும் ஒரு பகுதிக் கம்பளப் படையும், புதுக் கோட்டைநகரத்துத் தொண்டைமான் அரண்மனை ஏகி, அங்கே, அவனது உபசாரங்கள் பெற்று, உண்டு மகிழ்ந்து, ஊமைத்துரை

வழிதப்பிப் போனதைப் பற்றி நினைந்து, உள்விசாரமாகத் தங்கி யிருந்தனர்.

ஊமைத்துரையும் ஒருபகுதிக் கம்பளமும் வழிதப்பி, கன்னி வாடிச்சீமை போய்ச்சேர்ந்தனர். தம் அண்ணனை வழிதப்பவிட்டோம் எனநினைந்து அங்கு வருத்தமுற்று இருந்தான். ஒரு கருணீகர் இல்லத்தில் உணவருந்தினன். இதுகிடக்க;

தொண்டைமான், கட்டப் பொம்மனை நகர்விட்டு வந்ததின் காரணத்தை வினவ, கட்டப்பொம்மன் உண்மைக் காரணத்தைக்கூறி அபயம் வேண்டினன். அதுபொழுது, தொண்டைமான், கள்ள நினை வுடன், கும்பினித்துரைகளின் பகையும் தனக்கு இவனால் ஏற்படுமோ என ஐயுற்று, அதற்குத்தக, கட்டபொம்மனைப்பார்த்து, "நீங்கள் காளையார்கோவில் காட்டில் ஒளிந்திருந்தால், கும்பினியாரால் கண்டு கொள்ளமுடியாது; அப்படி செய்வது உத்தமமான செய்கை" என்று கூறினான். அப்படியே, கட்டப் பொம்மனும் காட்டில் சென்று ஒளிந் திருந்தார்கள். அதேபொழுதும் தொண்டைமான், இந்தச்செய்தியை கும்பினித் துரைக்குக் கடிதம் எழுதித் தெரிவித்துவிட்டான், பின்பு;

கடிதங்கண்ட அக்கினீசுத்துரை அக்கணமே படைகளைத் திரட்டிக்கொண்டு, காளையார் கோவிலின் காட்டில் முகாமிட்டுக் கட்டப் பொம்மனைத் தேடும்படி உத்தரவு இட்டான். கும்பினிப் படை யும் அக்காட்டினை முற்றுகை செய்து, கட்டப் பொம்மனையும், பிற கம்பளத்தார்களையும் கைதுசெய்ய முயற்சித்தனர். இதனைக்கண்டு, கட்டப்பொம்மன் புலம்பி, ஒருவாறு மனந்தேறிக் கும்பினிப்படை யினரை எதிர்த்தான். இருவருக்கும் நீண்டநாள் சண்டை நடந்தது. இறுதியில் கட்டபொம்மனைக் கைது செய்தனர். அப்பொழுது உண்மையிலேயே கட்டப்பொம்மு மனங்குமுறி வருந்திவிட்டான். உடன், கும்பினியார் இவனையும் பிறரையும் மூடுபல்லக்கிலேற்றிப் பாராவுடன் கொண்டுபோந்தனர்.

அடுத்து, அக்கினீசுத்துரைக்கு ஊமைத்துரையின் புலன் வரவே, கன்னிவாடிச் சீமைக்கு ஏகி, ஊமைத்துரையைத் தேடினான். கன்னிவாடிக் காட்டை நோக்கிச் சுட்டான். இதுகண்டு ஊமை யனும் பச்சைமலைக் கோட்டை வரை எதிர்த்துப் போரிட்டு, இறுதியில் விருபாட்சிமலைக்குத் தப்பிவிட்டனன். அக்கினீசுத்துரை ஏமாந்து கட்டப்பொம்மனிடத்து, அவனது தம்பி ஊமைத்துரையை ஒப்புவிக்கக் கூறினான். மேலும் அப்படிச் செய்தால், உங்களிருவரையும் மன் னித்து விடுவேன் என்றும் ஆசைகள் கூறினான். அதனைமெய்யென் றெண்ணி, கட்டபொம்மன் தன் தம்பிக்குக் கடிதம், "தான் வழி தப்பிப் போனது முதற்கொண்டு, வக்கணை வைத்து விபரமாக எழுதி, லெக் கைய நாயக்கனிடத்தில் கொடுக்தனுப்பினான்.

ஊமைத்துரை, அண்ணனின் நிலையைக் கடிதமூலமாக் அறிந்து, துக்கித்து, லெக்கைய நாயக்கனைப் பார்த்து, " நீங்கள் சுக மாக இருப்பீர்! நானும் விரைவில் அங்குவந்துவிடலாம என்று நினைத் திருந்தேன்! நான், அண்ணன் பட்டப்பாடுகளை அறியேனே! நானு மவ்விடத்திலிருந்தால் அக்கினீசுப் பிடிக்கமுடியுமோ? பிறந்தவன் றைக்கே இறந்த காயம், இனிப் பின் உயிர் வைத்திருக்கலாமா? கறந்த பாலையுங் காகங் குடியாது, கட்டபொம்மன் என்று பெயர் சொன்னால்!" என்று கூறி கிலேசங்கள் கொண்டு, கைச்சன்னைகள் மூலம் அண்ணன் நிலமையை மற்றவருக்கும் உரைத்தான். அவர் களும் வருத்தமுற்றிருந்தனர். பின்னே, கடிதப்படி அண்ணனைப் பார்க் கக் கன்னிவாடிச் சீமைக்கு ஊமைத்துரை வந்தனன். வரும்பொழுதே அக்கினீசுத்துரை, அவனை கைது செய்துவிட்டான். ஒன்றுந் தோன் ருமல் ஊமைத்துரை தியங்கி மயங்கி இருந்தான்! கம்பளமுழுவதும் கலங்கியிருந்தது! அது சமயத்தில்;

தானுபதிப்பிள்ளையைத்தேடி, நாகலாபுரம் அக்கினீசுத்துரை சென்ருன். அங்கே தானுபதியையும் கைது செய்து, பாளையக்காரர் களிடத்தில் வீரியம் பேசி, சென்னைக் கவர்னர் துரைகளுக்கு, அது விபரங்களைக் கடிதத்தின் மூலம் தெரிவித்தான். உடனே, சென்னை கவர்னர் கடிதங்கண்டு, பதில் உத்தரவு இட்டனர். அதன்படி, நாகலா புரத்தின் வேப்பமரத்தில் தானுபதியையும், கயத்தாற்றுப் புளிய மரத் தில் கட்டபொம்மனையும் தூக்கிலிட்டுவிட்டான் பாதகன்! அக்கினீ சுத்துரை.

இந்த நிகழ்ச்சியைக்கண்டு, ஊமைத்துரை, முகத்திலும் வாயி லும் கையாலறைந்துகொண்டு அலறியழலுற்ருன். "என் பேச்சைக் கேளாதப் பாளையக்காரர்கள், கும்பினியாருக்குப் புல்லும் விறகும், குதி ரை முளையும் சுமப்பீர்கள்! ஊமைத்துரையுடைய பூங்காரம் ஒருவராலும் சொல்லமுடியாது! என்று புலம்பினுன். தந்திரஞ் செய்தல்லோ தமை யன் உயிரை வாங்கிவிட்டான்" என்றுங் கூறி கதறியழுதான் அதுபொழுது;

அக்கினீசு, ஊமைத்துரைக்கு அறிவு கூறி, பாஞ்சைநகர் சென்று, அங்குள்ளத் கோட்டைகளையும் மதிள்களையும் தகர்த்தெறிந் தான். பின்பு, பாளையங்கோட்டைக்குச் சென்று கூடாரமடித்து, ஊமைத்துரைக்கும், மற்றக் கம்பளத்தாரனைவருக்கும் நித்தம் ஒரு ரூபாய் படியளந்து, பாளையங்கோட்டையில் சிறைவைத்தான். கும் பினிப் பட்டாளத்திற்குக் கண்டிப்பு உத்தரவிட்டு, உஷாராக இருக் கும்படிக்கூறி, பொட்டிப்பகடையை ஊமையனுக்கு வேலைக்காரனுக வும் நியமித்துவிட்டு, சென்னைக்கு ஏகினுன். அங்கு துரைமார்களைக் கண்டு, தான் கம்பளத்தாரை நடத்திய முறைகளைக் கூறினுன். இது கிடக்க;

ஊமைத்துரை, பாளையம் மலைக்கோட்டையில் சித்திரவதைக் குள்ளாகி, வலையிலகப்பட்ட மான்போல் விழித்துக்கொண்டு சுண்ணும் புத் தண்ணீரை, நீராகக் குடித்துக்கொண்டும், பத்துமாதங்கள் கழித் தான். அப்பொழுது கடவுளரைத்துதித்தான். பின்பு இதற்கு வழி தான் என்ன? வென்று சிவத்தையாவை ஊமைத்துரை கேட்க, அவன் ஆலோசனைப்படி கடிதம் எழுதி, புலிகுத்திநாயக்கனுக்குப் பொட்டிப்பகடை மூலம் அனுப்பினுன். பொட்டிப்பகடைத் தன் காலின் செருப்பினுள் வைத்துக் கடிதத்தைக் கவனத்துடன் கொண் டேகினுன். பின்பு;

புலிகுத்தி நாயக்கன் கடிதங்கண்டு, அதன்படியே, நாங்களனை வோரும் ஒருங்கே மாறுவேடத்துடன் வருகிறோம் கோட்டைக்கு! நீங்கள் அதுபொழுது உஷாராக இருக்கவும், என்று ஊமைத் துரைக்கு பதில் எழுதிவிட்டான். பின்பு;

காலதாமதத்தால் பொட்டிப்பகடை வயிற்றுவலியென சாக்குக் கூறி, சிப்பாகிமார்களிடத்திலிருந்து தப்பி, ஊமையனிடம் பதிலைச் சேர்ப்பித்தான். (பொட்டிப்பகடை சிப்பாகிமார்களிடத்தில் தப்பித்துச் செல்லுதலையும் வருதலையும் படித்துணர்க) உடன்;

பாஞ்சை கம்பளத்தாரனைவோரும் மாறுவேடம் பூண்டனர். அஃதாவது, சுப்பிரமணியர் போலவும், காவடித்தூக்கியாடுபவர் போல வும், பக்தர் சித்தர்கள் போலவும், சாமியார்கள் போலவும், தமிழ்ப் புல வர்கள் போலவும், மயில் போலவும் பலப்பல மாறுவேடங்கள் பூண்டு, பாளையங்கோட்டைக்கு வந்தார்கள். மாறுவேடத்தில் ஊமையனிடத் தில் சென்று, எட்டு நாட்களுக்குள் 'உம்மை மீட்போம்' என்று கூறிக் கொண்டனர். காவடி வேடமெடுத்தோர் பாளையங்கோட்டைத் தெரு வோடே யாடிக்கொண்டு நோட்டம்பார்த்தனர். சடையன் குட்டிச் சேர்வை என்பவன் ஞானப்பண்டாரம் வேடமெடுத்து (வேட வரு ணனை நூலில் காண்க) தெருக்களில் சுற்றிக்கொண்டு, காசிதேசம் முதற்கொண்டு கன்னியாகுமரிவரை தீர்த்த யாத்திரை போய் வரு கிறேன் என்றும், ஏகாந்த ஞானியென்றும், வைத்தியம் பார்ப்பே னென்றும், வஞ்சனையால் வைக்கப்பட்டப் பில்லிகள், நஞ்சுவியாதி கள் முதலியவற்றை மந்திரத்தால் போக்குவேனென்றும், என்னிடத் தில் சஞ்சீவி மூலிகை, நாகதாலி மூலிகை, குரு மூலிகை முதலியன, வேண்டியது உண்டெனவும், செய்வினை, தீவினை, சூனியம் இவை களைப் போக்குவேனென்றும், பிள்ளைத்தாயம் கொடுப்பேனென்றும் எனது திருநீற்ருல் கொடிய பிணிகளும் நீங்கும் எனவும், கூறிக் கொண்டே நோட்டம் பார்த்தான். உடனே;

பாளையங்கோட்டை மக்கள் குறைதீர வழிகேட்டனர். நோய் தீர மருந்தும் கேட்டனர். இவர்களுக்கெல்லாம் நல்ல திருநீற்றைக் கொடுத்தான். இதனைக் கண்ட கும்பினிச் சிப்பாகிகளும் பாவவியாதி

க்ளுக்கு மருந்து கேட்டனர். அவர்களுக்கெல்லாம், வெள்ளைப்பாஷர் ணத்தை யள்ளி, யள்ளிமடித்துக் கொடுத்தான். அவர்களனைவோரும் மருந்து உண்டு, குத்துயிரும், கொலையுயிருமாகக் கிடந்து, ஞானி யெங்கே, யெங்கே எனத் தேடினர். அதுபொழுது, ஞானிமறைந்து நாட்டிடையன் வேடம் பூண்டுசென்ருன். மற்றவர் காட்டில் விற கொடித்து நாட்டில் வந்து விறகு விற்பவர்கள்போல ஆயுதங்களை இடையில்வைத்து மேலே விறகுவைத்துக்கட்டி, கட்டொன்றுக்கு இரண்டிரண்டு பேராக, கோட்டையினுள் நுழைந்து, விலையை, சாதா ரண மக்களும் வாங்காதவாறு உயர்த்திக்கூறிச் சென்று, ஊமையனி ருக்கும் வாயிலினை யடைந்து, அவனுக்கே விறகினைவிற்பவர்போல உள்நுழைந்து, செய்தி கூறினர். ஊமையனும் விறகுவாங்குவது போல, கட்டுகளை இறக்கி, உள்ளிருந்தோரனைவரும் ஆயுதங்கள் பெற்று, குலவைப் போர் நடத்தத் துணிந்தனர். பின்பு;

கும்பினிச் சிப்பாகிமார்களையும் சோல்சர்களையும் கால்விலங் கோடேயே ஊமைத்துரை, கொன்றுழக்கித் தப்புவித்து ரணவேட் டை யாடினுன். மற்றவர்கள் பாளையங்கோட்டையை விட்டேகி, தூத் துக்குடி, எட்டையாபுரம் கொள்ளையிட்டு, பாஞ்சைவந்து அமர்ந்தனர் கம்பளத்தார். பின்பு, ஊமைத்துரை, பாஞ்சைநகரில் சந்திரவட்டம் போல், இராத்திரி காலத்திலேயே ஓர் கோட்டையைக் கட்டுவித்தான் பழையபடியே, ஊர்ஆட்சி கம்பளத்தாரோடு சேர்ந்து நடாத்திவந் தான். பின்பு;

பிற்கட்டு, மேஜர் ஊமையன் தப்பியதையும் பாஞ்சைசென்று கோட்டைகட்டியிருப்பதையும், சென்னை கவர்னருக்குக் கடிதம் எழுத, அவர்கள் ஆலோசித்து, போர்ப்படையோடு பாஞ்சை நகர் சென்றனர். தள்ளா குளத்திலிருந்து முகாமடித்துப் பின்பு, கயத்தாற்றில் முகாம டித்து ஒட்டப்பிடாரத்தில் அணிவகுப்பு செய்து, எட்டையாபுரத்தானை யும் வரும்படிசெய்து, அனைவரும்சேர்ந்து கோட்டைமீது பீரங்கிக் குண்டுகளைப் பொழிந்தனர். இறுதியில், கோட்டை இடியாமைகண்டு, எட்டையாபுரத்தரசரின் ஆலோசனைப்படி கோட்டையைச்சுற்றி பஞ்சு மெத்தைகளும், கிச்சுக்குடுக்கைகளும் போட்டு, பீரங்கிக் குண்டுகளை ஏவ, கோட்டையிடிந்தது. அதுபொழுது ஊமைத்துரை வருத்த முற்று, சஞ்சலங்கொண்டு தனது மைத்துனி, தமக்கை, தங்கை உற் ருர் பெற்ருர்களைத் தன் வாளினுல் கொன்றுபோட்டு, நகர்விட்டேகி னுன். ஊமையன் தேவி தப்பிவிட்டாள். கும்பினிவசம் அகப்பட்டுக் கொண்டாள். அக்கினீசுத்துரை தன் உடன் பிறந்தவர்களைப்போல காக்கிறேன் பயப்படாதே என உறுதி கூறினுன் அவளுக்கு. இஃது இப்படியிருக்க, (இடையில் பொட்டிப்பகடை விளையாட்டு, கம்பளத் தார் கும்பினியாரை ஏமாற்றுதல் முதலியன நூலில் நேரேபடித் துணரவின்பம்பயக்கும்) ஊமைத்துரை, மருதூரில் சென்று பாண்டி யர்களை அடைக்கலம் புக, அவர்களும் உபசரிக்க, இதுவிபரம் "இடந்த

நாட்டார்'' மூலம் அக்கினீசுக்குத் தெரிய, அங்கு அவன் படையுடன் செல்ல, அங்கும் பயனில்லாது போரிடவும், மருதுபாண்டியர்களைத் தூக்கிலிட்டான். பின்பு, ஊமைத்துரை தப்பிப்போக, அவனைக் கண்டுபிடிக்க ரூ. 500 இனும் என பறையறைவிக்க, கன்னிவாடிச் சீமையில் ஓர் இளங்கன்னி வீட்டில் உணவுண்டிருந்த ஊமையனை அவள் மூலம் செய்தியறிந்து அக்கினீசு, படையுடன் சென்று கைது செய்து ஊமையனையும் தூக்கிலிட்டான். எட்டையாபுரத்தாரும் மனங் குளிர்ந்தனர்.

இந்தச் செய்தியை மேலே கும்பினிக்கு அறிவிக்கவும், அவர்கள் அக்கினீசுத் துரையை வரவழைத்து, கேள்விகள் கேட்டுக் கடிந்தனர். பின்னே, ஊமையன் தேவியை காவலுடன் காத்து ரட்சித்தனர். அவளும் ஆண்மகனைப்பெற்று, வேல்முருகு எனத் திருநாமம் சூட்டி பள்ளிக்கு வைத்தனர். பிள்ளை வேல்முருகுக்கு கத்தி கேடயத்தின் மீது அவாசெல்லக்கண்டு, அதனைக் கண்ட கும்பினி துரைகட்கு ஆலோசனை உண்டாகி, காவலுடனேயே வளத்துடன் காப்பாற்றினர். இதுவரையிலே இந்நூல் இனிது முடிகின்றது. இறுதியில், ஊமையன் கோட்டைகட்டியவை கும்பினியாருடன் பொருதவை முதலாயின நூலை நேரடியாகப் படித்தால்தான், முழுவின்பத்தையும் வாசகர்கள் பெறலாம் என்று கருதி அப்பகுதிகள் இதில் குறிப்பிடப் படவில்லை. ஆதலின், வாசகர்கள் அதனையும் படித்துணர வேண்டுகிறேன்.

இந் நூலுக்கு முன், வெளிப் பதிப்பாசிரியர்களும், பதிப்பகத்தாரும், கட்டப்பொம்மன் நேர்மையுடனும் நீதியுடனும் கும்பினியையும் மற்றவர்களையும் எதிர்த்துப் போரிடாமல், கொள்ளை, கொலை முதலியன செய்தான். ஆதலின்: அவன் ஓர் பகற்கொள்ளைக்காரனே என்று முடிவுகட்டி வேண்டப்படாத விமர்சனங்களுங் கொடுத்திருக்கின்றனர். ஆனல், அவர்கள் கூறுங் காரணங்களை ஆய்ந்து, நடுநிலைமையுடன் தீர்ப்புங் கூறப்புகின், அக்காலத்திற்கு உகந்த முறையில், வெள்ளைக்காரர்கள் துப்பாக்கியும் பீரங்கிக் குண்டும் வைத்துப் போரிடவும், கத்தி, கேடயம், வாள் முதலியவைகளையே பெரிதாகவும் உறுதுணையாகவும் நினைத்து வாழ்ந்த, அக்கால குறுகிய மன்னர்களுக்கு, அதுவும் கட்டபொம்மனை யொத்த பாளையக்காரர்களுக்கு, எதிரிகளைச் சூழ்ச்சியாலும் ஏமாந்த காலங்களிலும் எதிர்த்துப் போரிடுவதே உகந்த முறை என்றுதான் கூறவேண்டும். சிலர், அவர் பூர்வீகத்தை வைத்துக்கொண்டு, பரம்பரை வீரமுடையதன்று; ஆதலின் இவன் வீரத்துடன் எதிர்த்தான் என்பது பொருந்தாது என்ற முறையில் கருத்தை வெளியிட்டுள்ளனர். இந்த முறை வீரர்களுக்குக் கணிப்பதில்லை. இந் நூலுக்குப் பின்னல் எழுதப்பட்ட கும்மி நூல்கள், கதையையே திரித்துக் கூறிச் சென்றுள்ளன! அவை விரிக்கின் பெருகும் என்றஞ்சி இங்கு எழுதப்பட வில்லை. உதாரண

மாக முதலில் தூத்துக்குடிக் கொள்ளைக்கு தானாபதிப்பிள்ளையின் மகன் கலியாணமே, காரணம் என்று இந்நூல் இயம்ப, பிற நூல்கள், ஊமைத்துரை கலியாணமும் சேர்ந்ததாகும் எனக் கூறுகின்றன. இது பொருந்தாது எனத் துணிவர் இந் நூலினை முழுவதும் பயில்ப வர். அடுத்து, கட்டபொம்மன் முதலில், தானேயே, கும்பினிக்கு கப் பம் செலுத்தாமை குறித்துப் பல காரணங்கொண்டு, பேட்டிகாண ஓடோடியும் சென்றான்" என்று பிற நூலில் கூறப்படுகின்றது. அக் கருத்து, வரலாற்றுக் கோர்வை தெரிந்தவர்கள் கூற மனபொறப்பார். ஏனெனில், பாஞ்சைப்பதியின் பழைய மணியக்காரனும் கோபாலய் யரை அழைத்துக் கும்பினியான், சாகசமான வார்த்தைகள் கூறி, கட்டபொம்மனைப் பேட்டி காணும்படிச் செய்யவேண்டும் என்று கும்பினியார் கூறி யனுப்பியதிலிருந்து, கட்டப்பொம்மன் கிஸ்திப் பணம் பாக்கிக்காக பேட்டிக்குப் போகவில்லை என்பது புலனாகும். மற்றும் எப்பொழுதுமே யாருக்கும் அடிபணியாதவன் என்பது கும்பி னிக் குறிப்பை யுணர்ந்த வப்பொழுதே சாக்சனையும் மற்றவர்களையும் இராமலிங்க விலாசத்தில் எதிர்த்து முறியடித்தும், அப்பொழுதைக்கப் பொழுது கும்பினியாரை எதிர்த்து விரட்டியடித்துத் துரத்திப் போர் செய்தவைகளிலிருந்தும் ஊகித்துணரலாகும். ஆகவே, இவன் மக்களை வருத்தவில்லை. கும்பினிக் கடங்கிய இடங்களிலேயே: அது வும் தன் கூற்றின்படி யிசையாதக் கம்பளங்களையும் மக்களையுமே துன் புறுத்திப் பணியவைத்தான். இக் கருத்தும், நினைவும், செய்கையும் அரச பீடத்திலிருக்கும் அனைத்தவர்கட்கும் அக்காலத்து இயற்கை நியதியாகும். ஆகவே, தந்நலங் கருதாத் தகைமை யாளனாகவும், வீறுடனும், இவருடன், இறுதிவரை கம்பளமனைத்தும், முழுமூச்சாக நின்று, சாதாரண ஆயுதங்களை வைத்துக்கொண்டு கும்பினியாரை எதிர்த்த ஒன்றனைக் கருதியே, அவனை நாம் போற்றி, இந்தியாவின் விடுதலைக்கும், இந்திய மக்களின் நினைவுக்கும் உகந்த ஓர் வீரனாக நினைத்து அவனுக்கு வந்தனை செய்து ஞாபகப்படுத்திக் கொள்வோ மாக!

---

# கட்டபொம்மன் வரலாறு அல்லது சண்டைக்கும்மி

## காப்பு

கடதட விகடித நடனு சரணங்
கருமுட வரிதிரு மருகா சரணம்
வடவரை யதிரிட வந்தாய் சரணம்
மதகரி யெனவுருக் கொண்டாய் சரணம்
அடவியில் விழிதடு மாரு சரணம்
அடியேன் கவலையைத் தீர்த்தாய் சரணம்
நடமிடு சிவனுய் வந்தாய் சரணம்
நாதா கணபதி சரணம் சரணம்.

## நூல்

பாஞ்சை நகரில் வளர்ந்தோங்கும் வீர
பாண்டியன் கட்டபொம் மேந்திரன்மேல்
வாஞ்சையாய்க் கும்மித் தமிழ்ப்பாடத் திரு
வாக்கருள்வாய் சக்க தேவி யம்மா !
பூலோகப் பாண்டியன் கட்டபொம்மு துரை
மேலுங் கும்மித் தமிழ்ப்பாட் டுரைக்க
சாலோக சாமீப சாரூப சாயுச்சிய
சக்கதேவி பாதந் தான் தொழுது
சத்தி சடாட்சரி வீரமல்லு பொம்மு
சக்க தேவி பாதந் தான்தொழுது
சுத்த வீரசூரன் கட்டபொம்மு துரை
துலங்கும் பாஞ்சை வளமை சொல்வேன்.

### பாஞ்சாலங்குறிச்சி நாட்டுவளம்

நாட்டு வளமையைச் சொல்லுகிறேன் பாஞ்சைக்
கோட்டை வளமையைக் கேளுங்கடி!
கோட்டைகளாஞ் சுத்துக் கோட்டைகளாம் மதில்
கொம்மைகளாங் கெட்டி வேலைகளாம்
வீட்டி லுயர்மணி மேடைகளாம் மெத்த
வீடுக ளாமதில் மேடைகளாம்

பூட்டுங் கதவுகள் நேர்த்திகளாம் பணம்
பொக்கிஷ வீடுபார் சாஸ்த்திகளாம்
சக்கதேவி கோவி லாலையமாந் தேவி
சன்னதி வாசல் விசாலங்களாம்
மிக்க நெடுந்தெரு வீதிகளாம் வெகு
விஸ்த்தார மாய்க்கொலு மண்டபமாம்
சப்ரமஞ்ச கூட மேடைகளாஞ் சித்திரச்
சாலையுஞ் சந்தனச் சோலைகளாம்
புஷ்ப மலராலே பந்தல்களாம் வெகு
செப்ப முடனே ஆசாரங்களாம்
ஆசார வாச லலங்காரந் துரை
ராசன் கட்டபொம்மு சிங்காரம்
பூவாசம் வீசும் புகழ்வீசும் எங்கும்
பொன்வாடை வீசும் பன்னீர்வீசும்
வாவிக் கரைகளுஞ் சோலைகளும் நதி
தாவள மான விசாலங்களாம்
ராசாதி ராச ரரண்மனையில் பாஞ்சை
நாட்டரசன் கொலு வீற்றிருந்தான்
காரியக் காரர் கரணிக்கரும் நல்ல
கம்பளச் சேர்வைக் காரர்களும்
கெம்பீர மாகச் சபைகூடிச் சாவல்
கட்டிவிட் டங்கே விளையாடி
சேயிழை மாதர் சுயம்பாட ஒயில்
செல்வக் குமாரர் விளையாட
வாய்பேசாப் பாண்டியன் ஊமைத்துரைச்சாமி
ஞாயம் விசாரணை தான்கேட்க
பாஞ்சால நாட்டுத் துரைமார்கள் நல்ல
பார்வைக் கேற்ற ஒயில்காரர்
பூச்சிட்டுத் துப்பட்டா மேல்போட்டுச் சபை
போதர வான விளையாட்டு
வட்டப் பொட்டுக்காரன் மைக்காரன் காவல்
வாகுள்ள வெள்ளையன் சீராட்டு

## கட்டபொம்மன் நடவடிக்கை

திட்டங்க ளாகவே கட்டபொம்மு துரை
செய்கையைக் கேளுங்கள் நல்லோரே!
வேட்டைக்குப் போவதுங் காட்டுக்கு வாரதும்
விஸ்தார மாய்விளை யாடுவதும்

தாட்டிமை யாய்ச்சாவல் கட்டுவதுந் துரை
தன்னரசாய்ச்சீமை யாளுவதும்
கும்பினிக் கேகிஸ்திக் கட்டாமல் வெகு
கூட்டங் குமிசலாய்த் தான்கூடி
செம்பாதி ராத்திரி வேளையிலே தினம்
தீவெட்டிக் கொள்ளை யடிப்பதுவும்
காமனைப் போல்வடி வெடுப்பதுவும் கல்வி
படிப்பதுவுங் கும்மி யடிப்பதுவும்
பூமிதனில் கொள்ளை யடிப்பதுவும் எட்டியா
புரத்தில் சண்டைப் பிடிப்பதுவும்
தொல்லுல கில்கட்ட பொம்முதுரை செய்தி
சொல்ல முடியாதே மெல்லியரே!
முல்லை யரும்பை யெடுப்பதுவும் பிச்சிப்
பூவை முடித்து நடப்பதுவும்
சொல்லுவா ருந்திருச் செந்தூரில் சிவ
சுப்பிர மணியரைப் பூசிப்பாரும்
மாப்பிள்ளை மார்போலே வருவதுவுஞ் சப்பிர
மஞ்சத்தில் மெத்தைகள் விரிப்பதுவும்
ஆயி மனோன்மணி சக்கதேவி பொம்மு
அம்மன் பூசைதினம் முடிப்பதுவும்
ஞாய விசாரணை கேட்பதுவு மந்த
ஞாயம் பயில்பண்ணித் தீர்ப்பதுவும்
ஏழைப் பரதேசிக் கன்னங் கொடுப்பதும்
இந்திரன் போல்கொலு விருப்பதுவும்
பாளையக் காரன் பவுசுக்காரன் வீர
பாண்டியன் பாஞ்சைப் பதிராசன்
இப்படி யாகத் துரைத்தனஞ் செய்துகொண்
டிருந்தான் கட்டபொம் மேந்திரதுரை
அப்படி யாக்கொத்தப் பாஞ்சை நகருக்கு
அழிவு வந்ததைக் கேளும் பெண்ணே!
வந்த விதிகளைச் சொல்லுகிறேன் அந்த
மார்க்கத்தைக் கேளுங்கள் தோழியரே!
தந்திர மாயிந்தச் சீமையோ ரெட்டுக்கும்
சாகிசன் மேஜர் கலெக்கட்டராம் (Collector)
சென்னைப் பட்டணம் கெவுன்மண் டர்துரை
செய்யும் உத்தர வின்படியாம்
எந்நாளும் சாகீசன் (Jackson) மேஜர் துரைவலு
இங்கிலீசுத் துரைக் கெங்குதுரை
வந்தானே ராம நாதபுரத் தில்துரை
வல்லமை சொல்லுகிறேன் கேளுங்கடி!

## கும்பினியாரிடம் எட்டையாபுரத்தார் பிராது கூறுதல்

சிந்தை மகிழ்ந்தல்லோ சாகீசன் மேஜரும்
சீமை யதிகாரம் பார்த்தனராம்
எட்டையா புரம்பிர தானிவந்து துரை
இடத்தில் என்ன பிராதுசொல்வான்
கட்டபொம்மு துரை துஷ்ட நடத்தையை
எட்டையா புரத்தாருஞ் சொல்வராம்
தர்மத் துரைகளே! கேளுமென்று வெகு
சாதுரிய மாகவே சொல்வாராம்
அருங்கு ளத்திலே கம்மஞ்சாணைக் கதிர்
அஞ்ஞூறு கோட்டையும் கொள்ளைகொண்டான்
வர்மங்க ளாகவே தட்டைப் படப்பிலே
வைத்து நெருப்பைக் கொளுத்திவிட்டான்
விருதாப் பொல்லாங்கு செய்கிறு னெங்கள்
வீட்டில் வந்துகொள்ளை யடிக்கிறுன்
எப்போது? வென்றுன் காட்டு நாய்க்கனூர்
எல்லைச் சதிரிலே மேய்ந்தமாட்டை
முப்பது நாற்பது பால்மாட்டை ஓட்டி
முந்நூ றெருதையுங் கொள்ளைகொண்டான்
தூத்துக் குடியிலே வெள்ளைக்கா ரர்வீட்டில்
தொண்ணூறு சாக்குப் பணமெடுத்தான்
பார்த்தீர்களோ ஞாயந் தீர்த்தீர்களோ ஆடிக்
காற்றிலே தீயைக் கொளுத்துகின்றுன்
பட்டிக்கா டெல்லாம் குடிபோச்சே தட்டைப்
படப்புக் காடெல்லாம் பறிபோச்சே
இப்படியாய்க் கொள்ளை யடித்தாக்கால் நாங்கள்
என்னமாய்க் காலங்கள் தள்ளுவது?
இப்போ தவனை வரவழைத்துத் துரை
இந்தச்சணம் ஞாயங் கேளாவிட்டால்
எங்களுக் குக்குடி யங்கேயில்லை நாங்கள்
ஏகிப் பிரதேசம் போவோமென்றுர்
இங்கே அவனை வரவழைத்துத் துரை
தங்கள் விசாரணை செய்யாவிட்டால்
படியி லேஒரு நொடியில்லை சென்னப்
பட்டணம் போகிறேன் பிராதுக்கு
கடூரமான சொல் உரைக்கவே துரை
காரியந் தானென்று கேழ்க்கவே

## சாகீசன் துரை எட்டையாபுரத்தினருக்குப் பதில் கூறுதல்

சீமை யதிகாரி கலேக்கட்டர் இந்தச்
செய்தியைக் கேட்டல்லோ ஏதுசொல்வார்
மாமூல் வழக்கமும் பார்த்திட்டார் துரை
கோபமாய்ச் செய்திக ளுரைத்திட்டார்
அப்படியாய்க் கொத்த கட்டபொம்மு தனை
இப்பவே தானே வரவழைத்து
செப்பமாய் ஞாயமுந் தீர்க்கிறோ மவன்
துர்ப்புத்திக் குறும்பை ஒடுக்குகிறோம்
மருவலர் கட்டபொம் மேந்திரன் குறும்பை
அறியலாம் பின்பு அடக்கலாம்
தரணியிலவன் கிருத்துவத்தினாலே
தான்கிஸ்திப் பாக்கியாய்ப் போட்டுவிட்டான்
தோப்பரூப் பணமுஞ் செலுத்தா மல்வலு
துஷ்டனும் கட்டபொம் மேந்திரனும்
தட் டான பாஞ்சைப் பதிதனிலே யவன்
தன்னர சாய்ச்சீமை யாளுகிறான்
கோட்டைகள் போட்டுத் துரைத்தனஞ் செய்கிற
கொள்ளைக்காரன்கட்ட பொம்மனைத்தான்
பேட்டிய தாக வரவழைத்து ஞாயம்
பேசிட வேணு மெனஉரைத்தான்

## கும்பினியார் முதலில் கட்டபொம்மனுக்குக் காகிதம் அனுப்புதல்

மாயா வினோதனுஞ் சாகீசன் மேசரு
மன்னன் கமிட்டி யாலோசனையாய்
ஞாயமாய் மேஸ்த்திரட் டாபீசு போலீசு
ஞாயங்கள் செய்திட வேணுமென்று
மட்டுக் கடங்காதக் கட்டபொம்மு துரையை
இட்டமாய்ச் சந்திக்க வாவெனவே
திட்டங்க ளாகவுங் கும்பினிக் காயிதஞ்
சீக்கிரங் கண்டிப்பாய்த் தானெழுதி
டப்பை யெழுபத்தி ரண்டு துரைமாரும்
இப்பவே சந்திக்க வாருமென்று
முத்திரை வைத்தல்லோ முகாம்வைத் தானதை
மூன்றும் பிறைபோலே சுவடித்தான்
விஸ்தாரக் காயித மனுப்பி னைதி
வேகமாய்த் தபாலி லேகினான்

## கும்பினிக் காகிதம் கண்ட கம்பளத்தாரின் ஆலோசனை

காயிதம் வந்துதே பாஞ்சைப் பதிதுரை
கட்டபொம் முபிர தானியிடம்
மாயமாய்க் காயிதம் வந்துதென்று அப்போ
வாசித்துப் பார்த்தானே பிள்ளைமகன்
வாசித்துக் காயிதச் செய்திகளை விசு
வாசன் கட்டபொம்மு ராசனிடம்
நேசமாய்ச் சொல்லி உரைத்திடவே ஒரு
நிமிஷத் திலேயதி வேகமுடன்
சொன்ன சமாசாரம் என்னவென்று அங்கே
மன்னவன் ஊமைத் துரைகேட்டான்
தன்னவ னாகிய பிள்ளை மகன்கை
சன்னைகள் போட்டு மொழிந்தனராம்
மெய்வார்த்தை பிள்ளை மகனுரைக்க வலு
வேகமாய் ஊமைத் துரைதானும்
கையைக் கடித்தவன் துடைதட்டி னன்இரு
கண்ணுஞ் சிவந்திடக் கோபமுடன்
ஆகட்டும் நாளைச் சவாரி யென்றான் நம்ம
அண்ணன் மனப்பாகம் என்ன ? வென்றான்
போகவே வேணுஞ் சவாரி யென்றான்வார
பொல்லாங்குக் கேபய மில்லையென்றான்
சந்தோஷ மாகவே பேட்டி தந்தால்நம்மள்
சலா மென்றுமே பேட்டி செய்வோம்
மாய்கைகள் வஞ்சனை செய்தக்கால் வலு
மண்டை சிதற உடைப்ப னென்றான்
கட்டபொம் மேந்திரன் ஊமைத் துரையுமே
கலந்து அன்புகள் பேசிக்கொண்டார்

## கும்பினியாரை, கம்பளத்தார் கம்பீரத்துடன் பேட்டி காணச் செல்லல்

சட்டமாய்ச் சாகீசன் பேட்டி செய்யச்
சடுதி பயணஞ் சவாரி யென்றான்
நன்றாக நம்முட சேவுகரை ஒரு
நாழிகையி லாகிற் செய்யுமென்றான்
என்று ஊமைத்துரை உறுமினான் நல்ல
தென்று பிள்ளைமகன் எழும்பினான்
மெட்டுக ளாகவே கட்டபொம்மு துரை
மேலான யோசனை யேதுசொல்வான்

கட்டான கும்பினிச் சாகீசன் மேசரைக்
கண்ணாலே பார்க்கவும் வேணுமென்றான்
கும்பினிப்பட்டாளம் பார்க்க வெகு
கெம்பீரமாய்ச் சபை செய்யவேணும்
சம்பிர தாயமாய்ச் சாகீசன் மேசரைக்
சந்திப்புக் காணவே வேணுமென்று
சீக்கிர மாகவே சேனை தளங்களைச்
சேகரஞ் செய்யும் பிரதானி யென்றான்
பாக்கிய வான்கட்ட பொம்முதுரை இப்போ
பயணப் பேரிகை செய்யு மென்றான்
தாஷ்டீகன் உத்திர வாகிடவே நிருபந்
தானு பதிப்பிள்ளை தானெழுதி
நாட்டுத் தலைவரைத் தானழைத்தான் முள்ளுக்
காட்டுச் சூரனை வரவழைத்தான்
கோட்டைத் தலைவனைத் தானழைத் தான்தம்பி
கொட்ட மடக்கியைத் தானழைத்தான்
தீட்டிய வேல்காரும் தேவமா ரும்நல்ல
சேர்வைக் காரரைத் தானழைத்தான்
சின்னக் கோடாலி பெரியக் கோடாலியுந்
சித்துளியுங் கண்ட கோடாலியும்
மன்னவன் சில்வார் தேக்குலவார் ஒயில்
வரிசைக் கம்பளம் சீமையாம்
கர்த்தன் சிவத்தய்யா முத்தய்யாவு முத்துக்
கருத்தய் யாவுஞ் சிவத்தய்யாவும்
உத்தம னை குமரய்யா வுரசி
சித்தன் தளகர்த்தன் வெள்ளையாவும்
சின்னத் தளவாய் பெரிய தளவாயுஞ்
சேர்ந்த புலிகுத்தி நாயக்கரும்
சென்னம நாயக்கன் பொன்னையா வும்தம்பி
மன்னவ னர்கோட்டைச் சுப்பய்யாவும்
மன்னவன் சின்னண்ணன் வீரண்ண னுஞ்சரி
மாதரி வெள்ளையன் பூவண்ணனும்
காவல்கா ரன்மகன் கோபக் காரனவன்
கண்ட விடமெல்லாஞ் சண்டைக் காரன்
சாவல் கட்டில்வெகு கெட்டிக்காரன் சட்ட
திட்டக்காரன் வெகுமெட்டுக் காரன்
முச்சாணை வைத்திடும் வேலெடுத் தான்படை
முன்னே குதித்தானே பாதர்வெள்ளை
பச்சைத் தலைப்பாகு கட்டிக்கொண் டான்நல்ல
பிச்சிப்பூ மாலை முடித்துக்கொண்டான்

தாய்க்கிராமம் பசு வந்தனைச் சாமி
நாயக்கன்மார்வெகு மூர்க்கமதாய்
மார்க்கமுள்ள நாகம் பட்டி வசீகரன்
வட்டனுங் கெட்டிக் கவுண்டனவன்
வில்லெடுக் குஞ்சுத்த வீரருடன் நல்ல
வேட பட்டித்துரை மன்னருடன்
கில்லிலி யென்று குலவையிட்டு நல்ல
குண்டப் பெருமாள் குளத்தைவிட்டு
தளசிங்க மேளங்கள் சின்னத் துரையுடன்
சந்திரகு மாருடன் வந்தனராம்
குளத்தூர் தன்னிலே அப்பா நாயக்கன்
கொள்ளையிலே கெட்டிக் காரனவன்
வைபோகிக் குதிரைமே லேறிக் கொண்டுகை
வீசிக் கொண்டுவிளை யாடிக்கொண்டு
பூசனூர் வாழும் விசுவாசன் தமிழ்
புங்கபிள்ளை மணிமுத்துப் பிள்ளை
சீரான சுப்பய்யா மக்களுடன் ஒரு
சேகரமாய் வெகு வேகமுடன்
பேரான முத்துக் குமாருடனே லெக்கை
பார்பா ரென்று மீசை முறுக்கி
செல்வன் சேவல்பட்டித் தேவனும் நல்ல
கல்விக் குதவிசெய் வல்லவனும்
வில்வி சயன்தம்பி கும்பணனும் வெகு
வீரப்பனும் நொண்டிச் சுப்பணனும்
தூத்துக்குடி அய்யாத் துரையுடன் ஆடிக்
காற்றுகள் போலே விரசுடனே
வேடபுறஞ் சுத்த வெள்ளைச்சாமி பாதர்
வெள்ளையன் தீவெட்டிக் கொல்லைச்சாமி
நாடுபுகழ் சேது ராம நாயக்கன்
நாக ரீகமுள்ள நாயக்கனும்
வெள்ளிக குரிச்சி முத்து நாயக்கன்
மேன்மை பொருந்திய மாந்தைச் செல்வன்
தளவாய்ப் புறத்திலே கட்டமல்லு சிவ
சங்கரன் சிங்கன் குழந்தை வேலு
முடிச்சா ணேந்தல் படையுடனே நல்ல
முத்துக் குமார்சித்திர வேலுடனே
வெடிச்சர போகி தானெடுத் தான்வெகு
துடி களாக நடக்கலுற்றான்
பாரைக் குட்டத்தில் கொத்தாள முத்து
பாண்டிய புரத்திலே வீரப்பனும்

சூரங் குடியிலே வாலசுப்பிர மணியன்
சுந்தர பாண்டியன் வன்னியனும்
அல்லிக் குளத்திலே சுப்பா நாயக்கன்
அணிய நல்லூரில் வீரணனும்
கல்லு மடத்திலே மாதவ நாயக்கன்
காளல் குடியிலே கட்டமல்லன்
சில்லா நத்தத்தில் வாலை நாயக்கரும்
சின்னன் மைத்துனன் கட்டையனும்
கொல்லம் பரும்பிலே மாடசாமி சனங்
கூட்டங் குமிசலாய்த் தானும்வந்தான்
அரசடி ஊர்வாழும் அப்பாவு நாயக்கன்
ஆன தளயாய் அரசமுத்து
கருசக் குளத்துக் கருப்பணனும் நல்லக்
காம்பட்டி வாழும் லக்கையனும்
முள்ளுப்பட்டி முத்து வீரணனும் அந்த
முள்ளுக் காட்டுவீர பாண்டியனும்
வள்ளி நாயக புறத்தாரும் ஒயில்
வரிசைக் கம்பளச் சேருவையும்
கோலைய நல்லூரு வீரணனும் நல்ல
குதிரைக் குளத்திலே தும்பிச்சியும்
மேல மருதூர் பாண்டிய நாயக்கன்
வீரலெக்கன் சின்ன மல்லுடனே
ஆத்தூர் வாழு மழகண்ணனும் நல்ல
அய்யரு பட்டிபில் மெய்யணனும்
குண்டத் தலங்குடி குமாரண னும்வெகு
கோலா கலமுள்ள படைகளும்
சண்முக புரத்திலே தின்னமல்லு நாயக்கன்
தம்பி யுந்தடி வேங்கையனும்
கம்மவார் சில்லவார் தோக்குலவார் படைக்
கரைபிரண்டு வருகு தய்யா
அருங்குளத் தூரு நாட்டாரும் பொம்மு
அம்பல வாணனுந் தம்பியரும்
பேர்பெற்ற மன்னரெல் லாங்கூடி ஒரு
பேச்சாய்க் கைவீசி வந்தனராம்
ஏழு கிராமத்தில் மாடசாமி தம்பி
இங்கிதக் கார னதிகாரி
வெள்ளூர் புறத்தில் கருத்தமுத்து வெகு
வேடிக்கைக் காரன் சிவத்தமுத்து
புனுகு சந்தனப் பொட்டழகன் பொடிப்
பூச்சழகன் கை வீச்சழகன்

கழுவி லிருந்து காலாட்டு வான்கை
காட்டுவான் கல்வி மூட்டுவான்
கொங்கலர் குரிச்சிப் பிள்ளைமகன் தம்பி
குழந்தை வேல்பிள்ளை ஆறுமுகம்
சிங்கார மாய்ச்சித்தூர்ப் பட்டியில் சிங்கனும்
சீரான தம்பியுஞ் சேருவையும்
அருள்புரத் துக்கு முருகப்பிள்ளை மாத
ராசைக் கிசைந்திடு முத்துப்பிள்ளை
நிருபன் சுந்தர லிங்கம்பிள்ளை மகன்
நெசவான் சுப்ர மணியப் பிள்ளை
மணியாச் சித்துரை மன்னருடன் புது
மாப்பிள்ளைபோல வரிசையுடன்
கணிச மாகவே புறப்பட்டுத் தனிக்
காங்குறுமால் கட்டிச் சுங்குமிட்டு
காருங் கவுண்டன் கரிக்கவுண்டன் காயங்
கட்டுஞ் சிங்கேர நாட்டாரும்
விந்தைக்குள் வீர முத்துக் கருப்பனும்
வீரசூரன் சுவாமி மேகவர்ணன்
அங்குமகன் சின்னப் பொம்முட னேநல்ல
ஆட்டுக் கிசைந்திடுஞ் சேருவையும்
மங்கைய ரங்குதன் வங்கார் நாயகன்
வாரசிங் காரத்தைப் பாருங்கடி!
மெட்டுக்காரன் வட்டப் பொட்டுக்காரன் பரி
நோட்டம்படி யாளுங் கொட்டாப்புளி
கொட்டுக் குலவை முழக்கிக்கொண்டு வெகு
குமுசுடன் வாரான் பாருங்கடி!
மகம்மதுத் தம்பி ஈசுப்பு லெப்பையும்
மார்க்கமுள்ள குப்பை ராவுத்தனும்
தர்ம குணவானும் மாமுஞ் சாமியுந்
தம்பி இஸ்மானு ராவுத்தனும்
சாத்தன் காலடிச் சாத்தணனும் பொட்டைச்
சங்கரன் குட்டையன் பாண்டியனும்
கூத்தனுங் கூத்தனும் பள்ளக்கா லாடியுங்
குடும்ப னுங்குடி மகனுடனே
விருப்பமாய்ப் பள்ளக் கருப்பன் காலடி
புறப்பட்டான் சன்னக் கோடாலி
பரப்பெரி யானும் பொட்டிப் பகடையும்
பத்தஞ்சுபேர் சுத்த வீரர்வந்தார்
கந்தன் பகடையும் முத்தன் பகடையும்
கைகாற் றுமன் பகடையுடன்

பொட்டையன் கட்டையன் பொட்டிப் பகடையும்
　　பொல்லாத பேர்களுஞ் சூழ்ந்தனராம்
தட்டப்பா ரைச்சின்ன மல்லு நாயக்கனுந்
　　தம்பியும் சக்கையன் லக்கையனும்
கோலா கலமாகப் பாஞ்சைப் பதியிலே
　　கும்பாகக் கூடுதே கம்பளமும்
காலாள் களொரு சேகரமாய்க் கை
　　காரர்ப் படை யொருபுறமாம்
வசந்த காலத்தில் மேகசஞ் சாரம்போல்
　　வந்து நிறைந்ததே கம்பளமும்
இட்டமா யாயிரத் தெட்டுப் பொதியிலே
　　இப்போ கவணிகள் நொடியிலே
கோட்டைக் குத்துப்பட்டா கொண்டுவரச் சொல்லி
　　கொற்றவ னுத்தர வாகிடவே
நாட்டுக் கவணி அஞ்ஞூறு பொதிமன்னுற்
　　கோட்டைக் கவணி யெழுநூறுபொதி
கொண்டுவந்தான் துரையைக் கண்டுநின்ருன் செயங்
　　கொண்டனவே நயங் கண்டேனென்ருன்
சண்டப் பிரசண்டனுங் கட்டபொம்மு துரை
　　சந்தோஷ மாகவே யேதுசொல்வான்
காயிதம் போட்டவன் சாகீசன் மேஜரைக்
　　கண்டுபேட்டி செய்யப் போறதினுல்
ஆயிரங் கம்பளச் சேருவைக் கும்நல்ல
　　அஞ்ஞூறு வட்டச் சேவுகருக்கும்
ஒன்றுபோல் சோமன் கட்டுமென் ருன்படை
　　மன்னரெல் லாமிசைக் கட்டுமென்ருன்
மண்ணளந் தீசனை மனதில்வைத்து ஒயில்
　　மண்டு வரிசைகள் செய்துகந்து
கெண்டைபோட்ட லெஞ்சியைச் சுங்குவிட்டு வெகு
　　கெர்ச்சித மாய்ச்சிலர் சுங்குவிட்டார்
முண்டாசுக் கட்டுகள் கோட்டைக்கட் டாய்க்கட்டி
　　முன்குஞ்சம் பின்குஞ்சம் மெட்டுகளாய்
வல்ல வேட்டுகளுந் தான்போட்டு ஒயில்
　　வரிசை யாக விளையாடி
மல்லிகை முல்லை இருவாட்சி பிச்சி
　　வாசம் பொருந்து மருக்கொழுந்து
பூவெடுத் தான்பிச்சிப் பூமுடித்தான் ராச
　　போசனுங் கட்டபொம் மேந்திரனும்
வாவென்ருன் வங்கரைச் சேவகரை யொரு
　　மாதிரி யாய்ப்பொட்டுப் போடுமென்ருன்

நெத்தியி லேதிரு நீறணிந்தான் வெகு
நேர்த்தியாய்க் கண்ணுடி பார்த்துவந்தான்
கத்திப் புருவங்கள் போலிருக்குங் கடைக்
கண்ணுக்கு மையிட்டுப் பன்னீரிட்டு
சாந்து சவ்வாது புனுகணிந்தான் நல்ல
சந்தனப் பொட்டும் விலாசம் வைத்தான்
காந்தியாய்த் துப்பட்டா மேல்போட்டான் கையில்
கல்கட்டு மோதிரந் தானுமிட்டான்
கண்டி சரப்பணி மோகன மாலைகள்
வண்டிக் கடுக்கன் அணிந்து கொண்டு
சுண்டுவில் லுங்கையில் தானெடுத்தான் சிவ
சுத்தவீரன் கத்தி கைபிடித்தான்
இவ்வித மாகச் சந்திரன் போலவே
இப்படிச் சிங்காரஞ் செய்திடவே
சிந்தை மகிழ்ந்தனர் கட்டபொம்மு துரை
சிவத்தையா ஊமத் துரையுடனே
போசன்தா னுபதி சுப்பிரமணியப் பிள்ளை
புண்ணியவான் சிங்கந் தன்னுடனே
வாசமுள்ள பூசை செய்திடவே மக
ராச மன்னர்கள் புகழ்ந்திடவே
கெங்கை நதியிலே நீராடி வெகு
கெர்ச்சித மாகவே நீறு பூசி
மங்கள மாயெழு லிங்கம்வைத்து அருள்
தங்குங் சிவபூசை தான்முடித்து
பொங்கமுடன் சங்கு தான்முழங் கச்சிவ
பூசை குருபூசை மால்விளங்க
எங்கும் பிரபல மாகவே தான்பிர
சங்கமாய்த் தானங்கள் செய்திடவே
பூராண சாத்திரந் தான்பார்த்தான் தீரன்
போசனச் சாலையுந் தான்புகுந்தான்
சீரான போசனச் சாலையி லேதுரை
தேவிபூசை செய்திட வேணுமென்று
வந்திருந்தான் சுயபெந்து சனத்துடன்
வாழையிலை போட்டு நேர்மையுடன்
சந்தோஷமாய்ச் சில தாதியர்கள் கரி
தானும் வைத்துச் சம்பாச்சாதம் வைத்து
சம்பாச் சாதமும் ரொம்பவைத்து அதில்
சாதிக் கோழிக்கறி மேலே வைத்தார்
உண்பதுக் கேற்ற முயல்கறியும் கது
வாலி உடும்பு பொரிக்கறியும்

பாலுடன் சர்க்கரை தேனமுதும் நல்ல
பாகம் பதினெட்டுக் கறியுடனே
நாலா வகைப்பல காரங்களும் மக
ராச னருந்தி யிருந்தனராம்
வந்தபடை வீரச் சேவுகர் எல்லோருக்கும்
வரிசை யாகவே பந்திவைத்து
சந்தோஷ மாகவே கட்டபொம்மு துரை
தம்பியுஞ் சேனை தளங்களுடன்
சாப்பிட்டு மெள்ளத் தகையாறி அவர்
தாம்பூலம் போட்டு இளைப்பாறி
மாப்பிள்ளை மார்போல வீற்றிருந் தார்சிலர்
மாமரத் தோப்பிலே போயிருந்தார்
அப்போது கட்டபொம் மேந்திர துரைபிர
தானி யாலோசனை யேதுசொல்வான்
தப்பாமல் காயிதம் போட்டதோர் கும்பினிச்
சாகீசன் மேஜரைக் சந்திக்கவே
பயணப் பேரிகை செய்யச்சொல்லித் துரை
பாஞ்சைப்பதி அங்கே விட்டேகி
தயவுள பிரதானிக்குஞ் சேனைக்குஞ்
சகலபேர்க் கொருசேதி சொல்வான்
கண்டபேர்கள் நீங்கள் எங்கே போரீரென்று
கண்டிப்பாய்க் கேட்டபேர் தங்களுக்கு
எண்டிசை போற்றிய குற்றால நாதரை
இப்போ தெரிசிக்கப் போறோமென்று
சொல்லுங்கள் சொல்லுங்க ளென்று சொல்லிக்கட்ட
பொம்மு துரைவழி கூடினராம்
வில்லுங் கையுமாய் ஊமைத்துரை தானும்
வேங்கைப் புலிபோலே நடந்தனராம்
தானுபதிப் பிள்ளை தாஷ்டீக ரும்வழி
தானடந்தார் சுத்த வீரர்களும்
சேனை தளபதி கட்டபொம் முதுரை
சித்தமா யுள்ளத்தி லன்புவைத்து
ஆயி மனோன்மணி சக்கதேவி பொம்மு
அம்மனைப் போற்றி வணக்கஞ் செய்தான்
தாயே உமையே பரிபுரையே சக்க
தேவி யெனைக்காக்க வேணுமம்மா !
ஆண்டவளே ! லோக நாயகியே ! என்னை
ஆதரிக்குஞ் சக்கதேவி யம்மா !
உண்டென்ற பேர்க்கு ஒளிவிளக்காய் நிற்பாள்
உத்தமியே ! சக்க தேவியம்மா !

வேண்டிய வரங்கள் தான்கொடுக்கும் எங்கள்
வீரமல்லுச் சக்க தேவியம்மாள் !
ஒன்பது கம்பளம் வீரமல்லு ! நல்ல
உத்தரவு சக்க தேவிசொல்லு !
நம்பின பேர்க்கு உதவிசெய்வாய் லோக
நாயகியே ! சக்க தேவியம்மா !
அன்புடன் நல்வாக்குச் சொல்லவேணும்! நானுங்
கும்பினியார் பேட்டி செய்யவேணும் !
ஞாயமென்று சொல்லி கும்பினி யாரிப்போ
நம்மிட பாஞ்சை நகர்மீதில்
காயிதம் போட்டவன் சாகீசன் மேஜரைக்
கண்டுபேட்டி செய்யப் போறதினுல்
காட்டிக் கொடுக்காதே சக்கதேவி ! கடைக்
கோப்பிலே நில்லாதே வீரமல்லு !
மூட்டிக் கொடுக்காதே சக்கதேவி முனிக்
கோப்பிலே நில்லாதே யென்தாயே !
என்று பணிந்தானே கட்டபொம் முதுரை
எல்லோருங் கைகூப்பித் தான்தொழுதார்
நின்று தொழுதான் பிரதானி யப்போ
நிமித்தஞ் சொன்னுளே சக்கதேவி !
பல்லி நிமித்தஞ் சொல்லிடவே யப்போ
நல்லது சோசியம் பாருமென்ருன்
வல்லவன் தும்பிச்சி நாயக்கரும் அப்போ
சோசியம் பார்த்து மொழிந்தனராம்
காரிய மாகவே நேர்மையுடன் அங்கே
காதல் பார்த்துமே யேதுசொல்வான்
வீரிய மாகவே சொல்லு தென்ருன்வீர
பாண்டியனே சொல்லக் கேளுமென்ருன்
இத்தாதி பேர்களுங் கேளுமென்று அப்போ
எடுத்துரைத் தானே தும்பிச்சியும்
இந்த நிமித்தம் பலன்சொல்லு தேநாம
ளிப்போ பயணம் புறப்படவே
சந்தேக மில்லாமல் சாகீசன் மேசருஞ்
சந்திப்புப் பேட்டி கொடுக்க மாட்டான்
சத்திய மாகவே கத்திப்போர் வெத்திப்போர்
ரத்தக்கா டாகுமென் சாமியென்ருன்
உத்த மனதாய்ச் சொல்லிடவே அப்போ
ஊமத் துரையுஞ் துடித்திடவே
கையைக் கடித்து உதறினுனே ரெண்டு
கண்கள் பொறித்தான் பறந்திடவே

வையாபுரித் துரையை நினைந்தா னேவெகு
ஒய்யார மாகவே தானெழுந்தான்
தெய்வ உதவி நமக்குண்டு சக்க
தேவி கிருபைகள் நமக்குண்டு
செய்வதென்ன இனிச் செய்வதென்ன அண்ணு
சீக்கிர மாகப் பயணமென்ருன்
பிறந்த வுடனே இறந்த காயமினிப்
பின்னே உயிர்வைத்துப் பார்க்கலாமா
கறந்த பாலேயுங் காக(கன்று)ங் குடியாது
கட்ட பொம்முதுரை பேருசொன்ஞல்
சத்தும் நெஞ்சந் திடுக்கிடவே துஷ்ட
மித்திரப் பேய்கள் பயப்படுமே
வெத்திய தாகி வரலாமென்ருன் சுத்த
வீரர்கள் சேரப் புறப்படென்ருன்
காகிதம் போட்டவன் சாகீசன் மேசரைக்
கண்ணுலே பார்த்திடவேணுமென்ருன்
ஆயிரம் பேருஞ் சவாரியென்ஞ னந்தச்
சாகீசன் சமத்துப் பார்ப்போமென்ருன்
பட்டத்துக் குதிரைக்குத் தீனிவைத்தா னந்த
வைபோகி மட்டத்தில் யேறவுந்தான்
மெட்டுள்ள வெள்ளேக் குதிரையின் மேலேறிக்
கட்டபொம்மு துரை சவாரிசெய்தான்
திக்கு விசையன் சிவத்தய்யா முத்தய்யா
சீக்கர மச்சு மட்டமேறி
சக்க தேவிதுணே யென்று பிரதானி
தண்டிகை மீதினி லேறிக்கொண்டான்
பாஞ்சை நகர்க்கோட்டை விட்டகன் ருன்பெரும்
பாதையைக் கூடி நடந்துசென்ருன்
வாஞ்சை யுள்ளதுரை மன்னவரும் குட
வர்த்தனரும் வழி சென்றனராம்
ஆனே பரிசேனே ஒட்டகையும் அதின்
மேலாகப் பேரிகை தான்முழங்க
மாஞ பரஞன கட்டபொம் முதுரை
வாரசிங் காரத்தைப் பாருங்கடி!
தம்பூரு வீணே முழங்கிடவே வெண்
சாமரைப் போடத் தமிழ்ப்பாட
கமபீர மாகவே கட்டியங் கூறப்பராக்கு
எச்சரிக்கை யென்று தான்முழங்க
மங்கையர் மங்களம் பாடிவர வெகு
சிங்கார நாட்டிய மாடிவர

சங்கீத மேளங்க ளுந்தொனிக்க நல்ல
நாக சுரங்களுந் தான்முழங்க
வல்லேயம் நேரிசம் வேலைக்காரர் சிலர்
வரிசை யாகவே சூழ்ந்துவர
உல்லாச மாகவே கம்பளச் சேருவை
யெல்லோருங் கூடி வழிநடந்து
தாழை மடல்களும் பிச்சி யிருவாட்சி
சாந்து சவ்வாது கமகமென
பாளையத் தூரடே தான்ஊமத் துரைவீர
பாண்டியன் வாரதைப் பாருங்கடி !
சாமி பராக் கெச்செரிக்கை யென்றுசொல்லச்
சந்தி வட்டக்குடை முன்னடக்க
பூமிதனில் சுத்த வீரசூரன் கட்ட
பொம்முதுரை வாரான் பாருங்கடி!
பாஞ்சால தேசத் துரைமார்கள் நல்ல
பாருவைக் கேத்த ஓயில்க்காரர்
பூஞ்சிட்டித் துப்பட்டா மேல்போட்டு அவன்
போறசிங் காரத்தைப் பாருங்கடி !

## கம்பளத்தார் குற்றாலத்தில் முகாமடித்தல்

நன்னகர் பொன்னகர் குற்றால நாட்டினில்
மன்னன் கட்டபொம்மு வந்தனராம்
சன்னிதி வாசலில் முன்பாக அங்கே
சகல பேர்களும் அன்பாக
பத்தியாய்க் குற்றால நாதர் தெரிசனம்
பார்த்துச் சிந்தைமனம் பூரித்திட்டார்
விஸ்தாரக் கூடாரம் போட்டனராம் சற்றே
வேடிக்கை யாய்ச்சபை செய்தனராம்
குத்துக்கால் வெள்ளி விலாசம் பூச்சரமா
முத்துச்சித்திரக் கூடார வுல்லாசம்
மெத்தை விரித்து ஒலகு வைத்து அங்கே
வீத்திருந்தான் கட்டபொம் முதுரை
சின்னத் துரையும் சிவத்தய்யா முத்தய்யா
சேகரக் கார ரனைவோரும்
கர்ணன் தானுபதிப் பிள்ளையுடன் படை
மன்னரெல் லோரும் மகிழ்ந்திருந்நார்
சன்னதி வாசலில் கட்டபொம்மு துரைச்
சமத்தன் வந்து கொலுவிருக்க

இனிமேலுங் கதை சொல்லுகிறே னீங்கள்
எல்லோருங் கேளுங்கள் தோழியரே!
சீமைக் கதிபதி யாகவந்த இந்தத்
தேசத்துக் கலெக்கட்டர் மேஜர்துரை

## கும்பினியார் குற்றாலத்தில் கூடாரமடித்தல்

ராமநா தபுரம் விட்டேகி இந்த
நாடெல்லாம் பார்த்து நலமாகி
திருக்குற் றாலம் வடபுறம் பாளையஞ்
செய்தானே கும்பினிக் கூடாரம்
பெருக்க மாகவே சாகீசன் மேசரும்
பேரணி யாகவே சோல்சர்களும்
மேசைப் பலகைகள் போட்டுக்கொண் டாரதில்
மேலேயுந் தீனிகள் வைத்துக்கொண்டார்
பாஷைகள் பேசுற பொட்லரும் நல்ல
ராயசக் காரர் மிட்டாவதாரும்
சிப்பாகி மார்கள் ஜமேதாரும் வெடித்
துப்பாக்கிவெள்ளி வெடிக்காரர் நிற்க
கல்லு வெடிக்காரர் புல்லாங் குழல்காரர்
கட்டுற்ற பட்டாணி மாவுத்தமார்
கல்லுக்கட்டி வெடி சூழ்ந்திருக்க துரை
சாகீசன் மேஜரும் வீத்திருக்க
சங்கையுடன் சபை செய்திருக்க அங்கே
ரெங்கப்பன் சிப்பாகிக் கிட்டநிற்க
பொங்க முடனந்தச் சாகீசன் மேஜரும்
சிங்கம்போல் வாய்விட்டுத் தான்முழங்க

## சாகீசன் துரை குமுறுதல்

அப்போது சாகீசன் மேஜர் துரையுமே
அதிகஆ லோசனையா யேதுசொல்வார்
பொட்டுவார் முகம்பாத்துப் பாஷைசொல்லித் துரை
எட்டடி வேங்கைபோல் சீறலுற்றான்
கட்ட பொம்முவந்த துஷ்டத் தனங்களை
கண்டாயோ சிப்பாகி மார்களே
விந்தையாய்ப் பாளையஞ் செய்துவந்தான் வெகு
வேடிக்கை யாய்ச் சபை கூட்டிக்கொண்டான்
சந்திப்புச் செய்யவும் வந்ததில்லை இவன்
சண்டை முயற்சியால் வந்திருக்கான்

கட்டாமி ருசுக்கோல் சன்னப் பிறவீச்சென்று
மட்டுக் கடங்காத துஷ்டனுச்சு
சட்டப் படிக்கி நடக்காட்டா லவனே
வெட்டுவேன் பட்டாக் கத்திக்கொண்டு
ஞாய மிருக்க நடுவிருக்க வெந்த
நாளும் நமக்கு வலுவிருக்க
வாயிதா மெத்த ஒழுங்கு தப்பிவந்த
கட்டபொம்மு வலு துஷ்டனடா
வாளிருக்க வடிவேலிருக்க இரு
தோளிருக்கக் கத்தித் தானிருக்க
ஏழக் குறேணித் தளந்தானிருக்க வெந்தன்
நாலு பட்டாள மிருக்க
பாஞ்சைக் கதிபதி கட்டபொம்மு துரை
பாளையஞ் சேர்த்துக்கொண் டிங்கேவந்தான்
மாஞ்சு போறகால மாகவே தோணுது
மதத்தானையைப் போலிவன் தோணுதென்றான்
அத்தரி பானிச்சோ மாதரிச் சோவென்
றடித்தானே டொப்பியை நாற்காலிமேல்
கர்த்த னருள்பெற்ற சாகீசன் மேஜருங்
கமிட்டி மார்க்கங்கள் செய்யலுற்றான்

## கட்டபொம்மு பேட்டிகாண தானுபதிப் பிள்ளையை அனுப்புதல்

இந்த விரோதந் தெரியாம லங்கே
என்ன சொல்வான்கட்ட பொம்முதுரை
சந்தேக மில்லாமல் சாகீசன் மேஜரைச்
சந்திப்புக் கேளும் பிரதானியென்றான்
நல்லதென்று சொல்லி பிள்ளைமகன் தள
நாயக னுத்தர வின்படியாய்
மெள்ளவே சாலை வழியில்சென்றான் பாரு
மெட்டுங் கண்டான் கட்ட திட்டங்கண்டான்
கோலாகல மாகத் தானு பதிப்பிள்ளை
கூடார வாசல் வரும்போது
காலனைப் போலே நிற்கின்ற சிப்பாகி
மால்தார் வேஷமா யேதுசொல்வான்
அத்தரி பானிச்சோ மாதரிச்சோ லவுண்டி
ஆரடா நீயிங்கே வந்தாயென்றான்
கத்தரிக் காயுண்டு தோட்டத்தி லேநானுங்
கட்டபொம் மேந்திரன் பிரதானி

வந்தசமு(மா) சாரம் சாகீசன் மேஜர்க்கு
வல்ல சிப்பாகிநீ சொல்லுமென்ருன்
விந்தையாய்த் தாஞ பதிசொல்ல அந்த
க்ஷணமே சிப்பாகி தானேடி
சாகீசன் மேஜ ரிடத்தில்சென்று அவன்
பாஷைகள் சொல்ல நிசமேயென்று

## தாஞபதிப்பிள்ளை சாகீசனைப் பேட்டி காணல்

வாகுள்ள பாஞ்சைப் பிரதானிப் பிள்ளையை
மார்க்கமா யிங்கே வரட்டுமென்ருன்
அந்த சமாசாரஞ் தாஞ பதிப்பிள்ளை
அறிந்து சிந்தை மகிழ்ந்திடவே
சந்தோஷ மாய்வந்து சாகீசன் மேஜரைச்
சந்திப்புச் செய்து சலாமுஞ்செய்து
மார்க்கமாய்க் கும்பினிச் சாகீசன் மேஜரும்
வாவென்று சொல்லிச் சலாமுஞ்செய்தான்
தீர்க்கமுள்ள பிரதானிப் பிள்ளை அவன்
வாக்குமூலச் செய்தி யேதுரைப்பான்
கட்டபொம் முதுரை சட்டமுடன் துரையை
கண்டுபேட்டி செய்ய வந்ததிஞல்
சட்ட திட்டமாகச் சந்திப்புக் கேழ்க்கவும்
தான்வந்தேன் நான்பிர தானியென்ருன்

## சாகீசனின் பதில்

சாகீசன் மேஜ ரதுகேட்டு வெகு
வேகமாய்க் கோப ஆங்காரமிட்டு
யீகீகி யென்றுக் குறுஞ்சிரிப் பாய்துரை
யிதுவே சந்திப்புச் செய்திடவே
நேசமுடன் திருநெல்வேலி நகர்
வாசனை பேட்டிகள் தாரனென்ருன்
ஆசரா(சீரு) கவந்து சேருமென்று துரை
சாகீசன் மேஜர் பயணம் வைத்து
நயவஞ் சகமாய்த் தானுரைத் துத்துரை
நடந்தான் சாலை வழிபார்த்து
செயமுள்ள மட்டமுஞ் சீனிவைத்து அங்கே
சென்ருனே சாகீசன் மேஜர்துரை

### சாகீசன் துரை திருநெல்வேலியில் முகாம் அமைத்தல்

நாடெல்லாம் போற்றுந் திருநெல்வேலி சென்று
கூடாரஞ் செய்தல்லோ தானிருந்தான்
ஓடிவந் தானே பிரதானிப் பிள்ளையும்
உத்தமன் கட்டபொம் மேந்திரனிடம்
நடந்த சேதியைக் கேளுமென்றான் பின்னே
நாமும் பயணஞ் சவாரியென்றான்

### செய்தி கேட்டு கட்டபொம்முவின் கோபாவேசப் பேச்சு

கடுங்கோபங் கொண்டு ஊமைத் துரைதானுங்
கையைக் கடித்தங் கேது சொல்வான்
பெண்சாதி பிள்ளை மேலாசை வைத்தபேர்கள்
என்பின்னாலே வாராதே யென்றுசொன்னான்
சண்டை முகூர்த்தங்கள் செய்யவென்றான் அந்தச்
சாகீசன் மண்டைக்கு நாசமென்றான்
துண்டுதுண்டாய் வெட்டிச் சாகீசன் மேசரைத்
தூளாய் பருந்திக்கிட வேணுமென்றான்
சிப்பாகி மார்களைச் சோல்சரை மேஜரைத்
துண்டமாகச் செய்ய வேணுமென்றான்
இப்பவே நாமுஞ் சவாரியென் றானங்கே
யேகமாய்ச் சேவகர் தன்னுடனே
சேனை தளத்துடன் கட்டபொம்மு துரை
திருநெல்வேலி வந்து சேர்ந்தனராம்

### தானாபதி சாகீசனைப் பேட்டி கொடுக்க வேண்டுதல்

தானா பதியப்போ சாகீசன் மேஜரைச்
சந்திப்புக் கேழ்க்க நடந்தனராம்
கூடார வாசலில் போய்நுழைந் தான்பிள்ளை
குனிந்துமெள்ளச் சலாமுஞ் சொன்னான்
நாடாளுங் கும்பினிச் சாகீசன் மேஜரை
நன்மையாய்ச் சந்திப்புத் தாருமென்றான்

### சாகீசனின் பதில்

அந்நேரஞ் சாகீசன் மேஜர்துரை அங்கே
என்னசொல்வான் கலெக்கட்டர் துரை
மன்னனே ஸ்ரீவில்லிப் புத்தூரில் வரச்
சொன்னனடா பேட்டி யங்கேயென்றான்

பயணம் பயண மென்றுசொல்லித் துரை
பாதையைக் கூடி நடந்தனராம்
செயஞ்செய மென்று ஸ்ரீவில்லிப் புத்தூரில்
சேர்ந்தானே சாகீசன் மேஜர்துரை
கமிட்டி மார்க்கமாய்ச் சொன்ன சமாசாரங்
கட்டபொம்மு துரை சமூகத்திலே
சமுகந் தனிலே கிமுத மாகவே
தானுபதிப் பிள்ளைத் தான்சொலவே

## ஸ்ரீவில்லிபுத்தூர் பேட்டி

பேரணி யாகவே தீரன் கட்டபொம்மு
பின்னுடன் சேவுகர் தன்னுடனே
சீரணி யாகவே ஸ்ரீவில்லிப் புத்தூரில்
சேர்ந்தானே கட்டபொம் மேந்திரதுரை
சிந்தை கலங்காமல் தானு பதிப்பிள்ளை
சேர்ந்தானே சாகீசன் மேஜரிடம்
தந்திர மாகச் சலாமுஞ் சொல்லித்துரை
சந்திப்புக் கேட்டானே பிள்ளைமகன்
அங்கேயுஞ் சாகீசன் மேஜரேது சொல்வான்
சங்கரனூர் கோயில் பேட்டியென்றான்
இங்குச் சரிப்படா தென்றானே துரை
அங்கே வாவென்று நடந்தானே
சாலை வழியாகச் சாகீசன் மேஜருஞ்
சங்கரனூர் கோவில் போய்ச்சேர்ந்தான்

## சங்கரநயினூர் கோவில் பேட்டி

ஆலோ சனையாகத் தானு பதிப்பிள்ளை
அந்நேரங் கட்டபொம் மேந்திரனிடம்
சொல்லி வாய்மூடி முழிக்குமுன்னே பிள்ளை
நல்லதென் றங்கே நடந்துபின்னே
வல்லமை யாகவே சேனை தளத்துடன்
உல்லாச சங்கர னூர்கோவில்
சங்கரனூர் கோவில் வந்திறங்கித் துரைச்
சந்திப்புக் கேட்டானே பிள்ளைமகன்

## திருச்சுழியில் பேட்டி

அச்சமில் லாமல் திருச்சுழிக் குவந்தால்
அந்த க்ஷணம்பேட்டி செய்வோமென்றான்
இச்சண மேவர வேணுமென்றான்துரை
கெர்ச்சித மாக நடந்துசென்றான்

திருச்சுழி நகர்ப் போய்ச்சேர்ந் தான் துரை
தனிச்சுக் கூடாரஞ் செய்திருந்தான்
அரைச்சணந் தங்காமல் தானுதி பதி
அந்நேரங் கட்டபொம் மேந்திரனிடம்
கும்பினிச் செய்தி மொழிந்திடவே கேட்டுக்
கம்பளத் தாரு மெழும்பிடவே
தம்பியுஞ்சேனையுந் தானும் பிரதானியுஞ்
சடுதியில் வந்து திருச்சுழியில்
பூமென்னும் பிரதானிப் பிள்ளை யப்போ
பொல்லாத சாகீசன் துரையைக் கண்டு
ராமராம வென்று சலாமுஞ் சொல்லி யிங்கே
தானே சந்திப்புத் தாருமென்று
சந்திப்புக் கேழ்க்கவே பிள்ளை மகனப்போ
சாகீசன் மேஜரு மேதுசொல்வான்
வந்தாயோ பிள்ளை மகனே யென்றான்கமுதி
மார்க்கத்தில் சந்திப்புத் தாரோமென்றான்

## கமுதி நல்லூர் பேட்டி

நீதி பெருகுங் கமுதிநல் லூரிலே
நிச்(ட்)சய மாய்ப்பேட்டி செய்வோமென்றான்
வாதி லுரைத்தல்லோ சாகீசன் மேஜரும்
வந்தான் கமுதி நகர்சேர்ந்தான்
விதிவச மென்றுமே பிள்ளைமகன் ரொம்ப
அதிக யோசனை யாகவேதான்
கெதியுள்ள கட்ட பொம்முவிடம் வெகு
மதியாய்ச் செய்தி மொழிந்திடவே
கண்டறி வோமென்று தானு பதியுடன்
கலந்தழ(ள)ப் புக்கள் பேசிக்கொண்டு
மண்ட லம்புகழ்க் கமுதை மாநகர்
வந்து சேர்ந்தான் கட்டபொம்முதுரை
தம்பியுஞ் சேனையுந் தானும் பிரதானியும்
சடுதியில் வந்து கமுதிநகர்
முன்னேறித் தானு பதியோடித் துரை
முன்பாக நின்று சலாம்போட்டு
எந்நா(ன்னு)ளுங் கும்பினிச் சாகீசன் மேஜரை
சொன்னசொல் போல்பேட்டித் தாருமென்றான்
தன்னிமை யாகவே சாகீசன் மேஜரைச்
சந்திப்புக் கேழ்க்கவே பிள்ளைமகன்
அந்நேரஞ் சாகீசன் ஏதுசொல் வான்பிள்ளை
அலங்கார னூரிலே பேட்டியென்றான்

## அலங்காரநல்லூர் பேட்டி

தலங்கள் தோறுஞ் சுத்திவந் தோமென்று
சாய்வுசலாஞ் சல்லிய மில்லாமல்
அலங்காரனூரிலே வாங்களென் ருன்அதி
சீக்கிரம் பேட்டிகள் தாரேன்ருன்
குலவை போட்டு அலங்கார னூர்வந்து
கூடாரஞ் செய்தானே சாகீசனும்
உர(ற)மாய்த் தானு பதியோடி வெகு
திறமாய்க் கட்டபொம் மேந்திரனிடம்
அலங்கார னூரிலே பேட்டியென்று துரை
அதோபோனுன் சவாரி யென்ருன்
இலங்கைப் பொழுதுங் கூடித்தொடருவேன்
என்ருனே கட்டபொம் மேந்திரதுரை
ஊமைத் துரையுடன் சேர்ந்த சனங்களும்
உச்சிதப் பேச்சுக்கை வீச்சுக்களும்
எமனைப் போலே கோபங் கொண்டு அபி
ருமத்து மார்க்கம் நடந்துசென்று
அசைஞ்ச நடையாகத் துரையும் பிள்ளையும்
அலங்கார னூறிலே போய்ச்சேர்ந்து
என்செய்வனே! கர்த்தனே! யென்றுசொல் லித்தமிழ்
ரஞ்சித வான்பிர தானியுந்தரன்
சாகீசன் மேஜரைக் கண்டு சலாஞ்சொல்லிச்
சந்திப்புக் கேழ்க்கவே பிள்ளைமகன்
ஞாயமாய்ச் சந்திப்புத் தான்கேழ்க்க என்ன
ஞாயமாய்ச் சொல்லுவான் கலைக்கட்டர் துரை
நாளைக்குத் தானல்ல வேளையென்ரு னங்கே
ராமநாத புரம்பேட்டி யென்ருன்
பார்த்திபன் தன்னை யெழுப்பிக்கொண்டு துரை
பாதையை கூடி நடந்து சென்ருன்

## இராமநாதபுரம் பேட்டி

ராமநா தபுரம் போய்ச்சேர்ந்தான் ஒருச்
சாமத்தில் சாகீசன் மேஜருந்தான்
செயமாய் மேல்வீடு தான்பார்த்தான் துரை
ராமலிங்க விலாசம் போய்ச்சேர்ந்தான்
ஆசார வாச லலங்கரித்தான் துரை
ராசாங்க மாகக் கொலுவிருந்தான்
தேச முழுவது மதிகாரச் சட்டம்
செலுத்துஞ் சாகீசன் ஒய்யாரம்

வாயிதா வேலை யொருபுற மாஞ்சமுக
ருயச வேலையு மோர்புறமாம்
ஞாய விசாரணை ஓர்புற மாந்துரை
ராசன் காணிக்கர் ஓர்புறமாம்
திங்கள் வதனஞ் சிற(வ)ந்திருக்கத் துரைச்
சிங்கம்போல் சாகீச னங்கிருக்க
ரெங்கப்பன் சிப்பாகி கிட்டநிற்கச் சங்கர
லிங்கப்பன் மேல்புற மாயிருக்க
மேசைப் பலகை விலாசமிட்டு அதில்
மேலேயுந் சீன்வைத்துச் செப்பமிட்டு
தேசத்தில் முந்திரிச் சாராய மதில்
செய்திடுங் கோதுமை ரொட்டிகளும்
போதர வாகவே தானும்வைத்துக் கர்னல்
பூரித்து மெள்ளச் சலாமுஞ்சொல்லி

## சாகீசன் தன் இனத்தாரோடு உரையாடி மகிழ்தல்

சாதித் துரையான சாகீசன் பேச்சையுஞ்
சந்தோட்டியா(துஷ்டியா)ல் சொந்தம் பாராட்டி
கோட்டைக் கர்னல் ஒட்டன் துரையுடன்
கூடி யன்புகள் பேசுவராம்
நாட்டிலே கோட்டைகள் ளென்னவென் றுன்துரை
ராமநாதபுரங் கோட்டை யென்றான்
கையைக் கடித்துக்கை உதறிக்கொண் டான்துரை
காதில் ரகசியம் பேசிக்கொண்டான்
கெக்கே யென்று சிரித்துக்கொண்டான் துரை
கீகீயென் றங்கே பேசிக்கொண்டான்
சுக்கிருக் கினையொடு கமு(மி)ட்டி பேசியே
திக்குத் திசையு மதிர்ந்திடவே

## சாகீசன் பொட்டலரிடம் உரையாடல்

எட்டடி வேங்கைப்போல் சீறுவான் சாகீசன்
பொட்லர் முகம்பார்த்து பாஷைசொல்வான்
கட்டபொம்மு வலு துஷ்டனடா அவனைக்
கண்ணுலே பர்க்க வேறுமாதிரிச்சோ ?
தெற்குச்சீமைக்கொரு கட்டபொம்மு துரை
சின்ன நவாவு(பு) போலேயிருக்கான் !
முக்கியமாய்ப் பிரதானம் பேசி யிங்கே
மூர்க்கங்க ளாக வரலாச்சு
ஏகாந்த மாகவே ஊமைத் துரைதானும்
எக்களிப் பாகவே வாரானே

சாகத் துணிந்தவன் தன்னை மறந்தவன்
சண்டைக்கு வந்தவன் போல்வாரான்
சேனைத் தளங்க ளனேகம தாய்ப்பிர
தானி முறுக்கு விநோதங்களாம்
ஆனைமேல் பேரிகை தான்முழங்க வெகு
சேனை தளங்கள் படைநெருங்க
கும்பினி தந்த வரிச்சென்று வலு
கொள்ளைக்கா ரன்போலே துள்ளிக்கொண்டு
வம்பு குறும்புக ளடிக்கிறான் வலு
மாத்தானைப் போலிவ னிங்குவாரான்
கிஸ்திப் பணமுஞ் செலுத்தாமல் துரை
கேள்விக்கெல் லாம்பதில் சொல்லாமல்
முஸ்தீப்புச் செய்யச் சதுராச்சு கன
மோசங்க ளாக வரலாச்சு !
அத்தரி பாணிச்சோ மாதரிச் சோவென்
றடித்தானே டொப்பியை நாற்காலிமேல்
மித்திர வஞ்சகஞ் செய்தானே கெட்ட
புத்தியால் மோசம் வளத்தானே !
எட்டைய புரங்கொள்ளை யிட்டானே இங்கே
யேகமாய் வந்தெதிர்த் திட்டானே
கட்டபொம்மு துரை துஷ்டனைப் பிடித்து
வாயிதாச் சட்ட திட்டப்படிக்கி
கால்விலங்கு கைக்குத்தோள் விலங்கும் பூட்டிக்
கண்டிப்புச் செய்திட வேணுமென்று
ஆனவெள் ளைக்காரன் சாகீசன் மேஜரும்
அதிக கோபங்கொண் டேதுசொல்வான்
பச்சையாய் ரத்தங் குடித்திடுவான் வலு
பஞ்சமா பாதகன் கட்டபொம்மு
மிச்சமாய் ரத்தங் குடித்திடுவான் தம்பி
மூளை யுருஞ்சுவான் ஊமையனும்
வீரியம் பேசுற காவல் வெள்ளையன்
துச்சமாய் வாரானே தோழிப்பெண்ணே!

## இராமலிங்க விலாசம் பாரு இடல்

பாருவசம் பண்ணிக் கட்டபொம்மைச் சென்னப்
பட்டணஞ் சேரவுஞ் செய்வேனடா
துஷ்டத் தனஞ்செய்யுங் கட்டபொம்மை யெந்தன்
துப்பாக்கி யால்சுட வேணுமென்றான்
மெட்டு களும்ராம லிங்க விலாசமுங்
கெட்டியாய் பாரு நிறுத்தினராம்

கோட்டைவாசல்பாருச் சிப்பாகி நாலு
கொத்த(ா)ள நெட்டுக்குப் பீ(ர)ங்கிவைத்து
நாட்டி வைத்தான்மருந் தூட்டி வைத்தான் பாஞ்சை
நாட்டுத் துரைமீதில் பாருவைத்தான்
குல்லாக்காரன் அவுல்தார் சிமையதார் வலு
கொம்மந்த மாளரையும் வரவழைத்து
கல்லுவெடிக் காரர் சிப்பாகியைப் பார்த்துத்
துல்லிய மாய்க்கமான்(Common) செய்யுமென்ருன்
சோல்சர்கள் மேஜர்க ளாஜ(ச)ரென் ருன்சில
சிப்பாகி மார்கள் வரிசையென்ருன்
பாஷைகள் சொல்லியே சிப்பாகி மார்கள்
பளீர்பளீ ரென்று வெடிமுழக்க
வாரணிச் சிப்பாகி யெல்லோரு மொன்ருய்
வந்துமே கூடி மகிழ்ந்தனராம்
சேர்க்கையாய் நின்று முழங்கினராம் ஒயில்
மார்க்கமாய் வரிசைகள் செய்தனராம்
தம்பூ ரடித்துமே வீதி யெங்குமவன்
கம்பீர மாகவே கும்பினியான்
வம்பு வருமென்று சாகீசன் மேஜருந்
தெம்பு ஆலோசனை யாயிருந்தான்

## கட்டபொம்மன் இராமநாதபுரத்தில் வந்திறங்கும் வர்ணனை

இந்த விரோதங்கள் இந்தக் கவடங்கள்
இந்த வஞ்சங்கள் தெரியாமல்
பந்தியாய்ச் சேனை தளத்துடனே வீர
பாண்டியன் கட்டபொம் மேந்திரதுரை
அலங்கார நல்லூரு விட்டேகி நல்ல
தாகட்டு மென்று மனுவாங்கி
பலவித மாக யோசனை யாகவே
பாதையைக் கூடியே வேகமாய்
அஞ்சல் நடையாகப் பாஞ்சைப் பதித்துரை
அஞ்சாத வேங்கைப் புலிபோலே
மஞ்சுலவுஞ் சோலை ராமநா தபுரம்
வந்துசேர்ந் தான்கட்ட பொம்முதுரை
ஓட்டமும் நடையு மாய்ச்சேனைத்தளம்
ஒருநாழி கையில் ராமநாதபுரம்
கோட்டைக்குத் தென்புறங் கூடா ரங்களுங்
கொலுமுகப்புகள் செய்துகொண்டு

விஸ்தார மேல்கட்டி(ல்) முத்திலங்கப் பஞ்சு
மெத்தையின் மேல்திண்டு தான் துலங்க
உத்தமன் கட்டபொம் மேந்திர துரைராஜ
சித்தன் சிவத்தய்யா ஊமைத்துரை
சிங்கார மாகக் கொலுவிருக்க அங்கே
சேவக ரெல்லோருஞ் சூழ்ந்திருக்க
கங்கை குலாதிபன் பிள்ளைமகன் சித்திரக்
கம்ப(பி)ளி மேல்சபை செய்திருக்க
நாட்டிய மாட ஒயிலாட அங்கே
சேவுக ரெல்லோருஞ் சூழ்ந்திருக்க
தேட்டுக் கதிபதி பாஞ்சைப் பதிநாடு
தீரனென்று கட்டியங் கூறிடவே
காவல்கா ரன்மகன் வெள்ளையன் சிங்கேறு
சாவல்கட்டி விளை யாடுவதும்
சாவ லெடுத்துமே பார்வையிட்டு வெள்ளைச்
சாவலைக் கட்டிக் குறிபோட்டு
சொக்கட்டான் சாறியைத் தான்பரப்பிக் காயை
முற்கட்டும் பிற்கட்டு மாய்நிரப்பி
கல்கட்டு மோதிரந் தானிலங்கக் கையில்
கணையாழி மின்னல் தானிலங்க
எட்டுப் பகடை பனிரெண்டு விழுமென்று
சொல்லிக் கயறுகள் தான்போட்டு
கட்டபொம்மு துரை சேனை தளகர்த்தன்
சொக்கட்டா னுடி மகிழ்ந்திருந்தான்

## கட்டபொம்மனும் ஊமையனும் இருக்கும் காட்சியைக்கண்டு, கும்பினியார் மனம் குமுறல்

இப்படி யாகவே யிருக்கின்ற வேளையில்
ஏறிட்டுப் பார்த்தானே கலெக்கட்டரும்
செப்பமாய் மேல்வீடு தானிருந்து மெள்ளத்
திரும்பிப் பார்த்தானே கலெக்கட்டரும்
கட்டபொம் மேந்திரன் சேனைத்தளத்தையுங்
கண்ணாலே பார்த்தங் கேதுசொல்வான்
எட்டாத கொப்(ம்)பிலிருக்கின்ற தேனென்று
எண்ணு ருனேபல யோசனைகள்
கையை வாயில் வைத்துக் கடித்திட்டானே தொப்பி
கழற்றி(த்தி) நாற்காலிமே லடித்திட்டான்
உக்கிர மாயமாய் வந்த கட்டபொம்மை
ஒருநொடி யில்விலங் கடியாட்டால்

தீனிகளுந் தின்கிறதில்லே யென்ருன் சற்றுஞ்
சென்னி கவிழ்ந்து படுக்கேனென்ருன்
வீரியக் கோப மடங்கேனென்ரு னப்போச்
சீமைச் சாராயங்கள் ஊற்றிக்கொண்டான்
சத்துருபோல் வந்தான் கட்டபொம்ம னவன்
சமத்து பார்த்திட நாஞைச்சு
பத்திரமாய்ப் பாரு நில்லு சிப்பாகி
அத்தரி பாணிச்சோ மாதிரிச்சோ
மூர்க்கவான் கும்பினிச் சாகீசன் மேஜருந்
தாக்கீதைக் காயிதம் எழுதுவராம்
தாஞ பதிப்பிள்ளே ஊமைத் துரையுந்
தாஷ்டீகன் கட்டபொம் மேந்திரனேயும்
கூட்டிவர(வா) மூன்று பேர்களேயு மென்று
கமிட்டிக் காயிதந் தானெழுதி
அவுல்தார் கையில் மிகக்கொடுத்து இப்போ
அடவுட னேகுமென் றுரைத்தான்
காயிதம் வாங்கி அவுல்தாரும் அங்கே
கட்டபொம் மேந்திரன் சமூகபதில்
போய்நின்று தான்கொடுத்துக் கட்ட
பொம்மு துரையே புறப்படென்ருன்
தாக்கீதை யாய்வந்த காயிதச் செய்தியைத்
தானறிந் துபிர தானிப்பிள்ளே
சாகீச மேஜர்செய் வஞ்சக மித்திர
மோசங்க ளெல்லாந் தெரிந்துதென்ருன்
அந்நேரங் கட்டபொம் மேந்திரதுரை ரொம்ப
ஆலோ சனேகளுஞ் செய்தனராம்
என்னென்ன காரிய மாச்சுதென்று துரை
எண்ணிஞ ரேபல யோசனேகள்
ஊமைத் துரையும் வெடுவெடென்று அங்கே
உற்ற சமாசாரஞ் சொல்லுமென்ருன்
நேர்மையுள் ளபிர தானியைச் சன்னேகள்
ஊமைத் துரைக்கு நிசமுரைத்தான்
தாஞ பதியுங்கைச் சன்னேயிட்டு வெகு
தாராள மாகவே சொல்லலுற்ருன்

## பேட்டி தாமதத்தால் ஊமைத்துரையின் கோபம்

ஆஞலும் ஊமைத்துரை தானு மப்போ
அதிக கோபங்கொண் டேதுசொல்வான்
அச்சடிச்சக் காயிதங் கொண்டுவந்த பயல்
ஆரடா ? சேவகன் சிப்பாகி

இச்(ட்) சணம் பேட்டிகள் காண்பதற்கு நாங்கள்
எல்லோரும் வந்தா லென்னையடா ?
எல்லோரும் வந்தால் வருவமடா ? அப்படி
இல்லையானல் வருவ தில்லையடா?
பொல்லாங்கு வந்தால் வரட்டுமடா ? வெங்கள்
பொல்லாப்புக் குப்பய மில்லையடா ?
காரிய மென்ன கவையென்னடா நாங்கள்
கட்டபொம்மு துரைச் சாமியடா
வெற்றிகள் ஊமைத் துரைகளடா வெந்தன்
புத்தியைக் கேளடா சிப்பாகி
புத்தியில் லாதவன் சாகீசன் மேஜரைக்
கத்தியால் வெட்டிப் பிளந்திடுவேன்
இத்தனை தூரம் வரவைத்து இப்போ
சத்துரு மோசங்கள் செய்தானே
ரத்தங் குபீரென் றெழும்பிடவே அவனைக்
கொத்துவே னென்ருனே ஊமைத்துரை
பல்லைக் கடித்துப் பட் பட்டென்று சொல்ல
நல்லதென்று அவுல் தார் திகைத்துச்
சில்லரை செய்தானே பாகியென்ருன் உங்கள்
வல்லமை யெங்கள்முன் நில்லாதே
கோபங்க ளாக உரைத்து அவுல்தார்
கோட்டையை நோக்கி நடந்தனராம்
காவல்கா ரன்மகன் வெள்ளையனும் பூண்
கட்டிய கொம்பா லோங்கிஞன்
கெட்டுங்க ளடாவென்று பொட்டிப் பகடையுங்
கொல்லென் ருன்தடிக் கம்பாலே
சடச டென்று சிலம்பு வரிசையில்
வட்டமிட் டாடிஞன் பாதர்வெள்ளை
அப்போ தவுல்தாரு மெப்படி யோவென்று
அஞ்சியே (ராத) வோடிஞன் மேல்பதறிச்
சிப்பாகி மார்க்குக் கால்நடை யாகவே
திரும்பிப் பார்த்தவ ஞேடுவனும்
சாகீசன் மேஜரைக் கண்டு சலாஞ்சொல்லி
சன்னைசொல் லிப்பாஷை(டை) யென்னசொல்
காயிதந் தன்னைக் கொடுத்துதவு மங்கே [வான்
கட்டபொம் மேந்திரன் மொழிந்ததுவும்
துஷ்டத்தனஞ் செய்யும் சுட்டி ஊமைத்துரை
துடித்துப் பல்லைக் கடித்ததுவும்
பட்டணத் துப்பொலிப் பெருதுபோல் பொட்டிப்
பகடைக் கம்பா லடிக்கவந்தான்

அடிக்கவந் தானே பாதரு வெள்ளையன்
அடிக்கவந் தான்தடிக் கம்பாலே
நொடிக்குள்ளே தம்பி வந்தேனென் றானவன்
படுக்காளி போலே தோணுதென்றான்
சந்திப்புச் செய்யவும் வந்ததில்லை யென்றான்
சபைபெருக்கமாய் வார னென்றான்
மந்திரி தானு பதிப்பிள்ளை யாமப்போ
இயம்புவான் சாகீசன் மேசர்துரை
நன்றாக இருந்தது பார்த்தீர்க ளோநாம்
இந்தச் சீமையை யாண்டதுவும்
வம்புக்கேத்த காலந் தானுச்சு அந்தக்
கம்பளத் தாருங் குறும்பாச்சு
கும்பினி யாரல்ல நாமளுந் தானவன்
குறும்பைப் பார்க்கலா மென்றுசொன்னான்

## கும்பினியாரின்தந்திரங்கள்

ஏழுக டித்தயந் தாமடிந் தோம்நாம்
இங்கிலீசு வெள்ளைக் காரனல்லோ
கொள்ளையென் னளுஞ் சொன்னனே அந்தக்
கொள்ளைக் காரன்கட்ட பொம்முதுரை
கால்விலங்கு மாட்டி இப்போது அங்கே
கமிட்டி மார்க்க மனுப்பாமல்
ஏலவாய்த் தீன்களுந் திண்ணேண் டாநான்
இருந்த விடம்விட்டுப் போகேண்டா
ஆனதி னலினி யோசனைகள் அவிட்
டன்துரை யேநீ சொல்பாகி
சொல் என்று துரைதான் கேட்க என்ன
சொல்லுவான் ரெங்கப்பன் சிப்பாகி
வல்லவன் பாஞ்சைப் பதிதனி லேமுன்னே
மணியம் பார்த்தவன் கோபாலய்யன்
எந்த விதத்துக்கும் தந்திரக்காரன்வலு
எத்துக்கா ரன்மனப் புத்திக்காரன்
தந்திர மாய்ச்சொல்லிக் கட்டபொம்மு தன்னைக்
கணத்தில் கூட்டியே தான்வருவான்
சொந்தம் பாராட்டி யழைப்பாரென்றான் அந்தத்
துப்ப னிப்போவர வேணுமென்றான்
அந்தச்செய்தி கேட்டு சாக்கீசன் மேசரும்
அதிக சந்தோஷ மாகினராம்
சிந்தை மகிழ்ந்திடக் கோபா லய்யனைச்
சீக்கிரமா யழைத் தேதுசொல்வான்

கட்டப்பொம்மு துரை ஊமையன் தன்னையுங்
கங்கைக் குலாதிபன் பிள்ளையையும்
இஷ்டமாய்க் கூட்டிவாரு மய்யரே இப்போ
ஏகமாய்ச் சேவகர் வாராமல்
மூன்றுபேர் தன்னையும் கூட்டிவந் தால்நீ
யாண்டுகொள் எப்பூமி நான்விடுவேன்
வேண்டுந் திரவியந் தான்தருவேன் வெகு
மேன்மையாய் உத்தியோ கந்தருவேன்
கூட்டிவா கம்பளத் தானையிங்கே யென்று
கூறினனே துரை வீரியமாய்

## கும்பினியாரின் ஏவலால் கோபலய்யர் கட்டபொம்மனைக் கண்டு அழைத்தல்

தாஷ்டீ கனுத்தர வாகிடவே அந்த
க்ஷணமே அய்யரு மேகிடவே
கட்டபொம்மு துரை சமூகத்தில் சென்று
கண்டுகொண்டு ஆசீர்வாத மென்று
அட்டாவ தானிபோலக் கோபாலய்யன்
பெட்டுக ளானசதி ரிலேதான்
புண்ணிய வானய்யா வந்திருக்கக் கட்ட
பொம்மு துரையும் பணிந்தனராம்
அப்போது கோபால அய்யருமே அங்கே
அதியோ சனையா யேதுசொல்வார்
உங்கள் மூன்றுபேர் தன்னையும் கூட்டிவரும்படி
மூர்க்கவான் சாக்கீசன் தானுரைத்தான்

## கட்டபொம்மனின் பதில்

சற்பினை யாகவே தோணுதென் றுனப்போ
தளகர்த்தன் கட்டபொம் மேந்திரதுரை
கோபால அய்யரைத் தான்பார்த்து என்ன
கூறுவான் கட்டபொம் மேந்திரதுரை
சாஞ்சுவந் தானென்று எட்டைய புரத்தானுஞ்
சற்றுங் கெணியாமல் சொல்வானே
இத்தனை தூரங்கள் வந்திட்டுப் போனுக்கால்
மெத்த இளப்பங்க ளாகுமென்று
சத்துந் தருகாமல் கட்டபொம் மன்உயிர்
வைத்திரேன் வைத்திரே னென்றுரைந்தான்

## ஊமைத்துரையின் பதில்

வினைமுகத் துக்கு அஞ்சாத ஊமையன்
சினந்து வேகமா யேதுசொல்வான்
பனை மரத்திலே யேறலாமோயேறிப்
பாளை தொடாம லிறங்கலாமோ ?
பார்த்து வந்தோமே இந்தமட் டும்இனிப்
பிந்தி ஆலோசனை செய்யலாமா?
இந்த சாகீசன் துரையைக் கண்டுநாம்
சந்திப்புச் செய்யாமல் போகலாமா?
சங்கு சுட்டாலும் வெண்மைபோமோ பசுந்
தங்கங் கெட்டால்நிறந் தான்போமோ?
ஆயி மனோன்மணி சக்க பொம்மு
அம்மன் கிருபை யதினாலே
காயிதம் போட்டவன் சாகீசன் மேஜரைக்
கண்டு பேட்டி நன்றாக
சந்திப்புத் தந்தாக்கால் பேட்டிசெய்வோமல்லால்
சத்தே ஒருகை பார்ப்போமென்று
எந்தன் சமத்து மவன்சமத் துமினிப்
பந்தயங் கள்வைத்துப் பார்ப்போமென்று
பாஞ்சைப் பதிக்கொரு வேங்கைப்புலி தானும்
பாளையங் கோட்டை மதப்புலிநான்
காஞ்சபால் ரொம்பக் கசக்குமென்றான் ரத்தங்
கண்டால் மனத்திட மாகுமென்றான்
மானுபி மானபர னை துரை
மன்னன் கட்டப்பொம்மு பிம்பியென்றான்
ஆனாலும் ஆகுது போனாலும் போகுது
அடிக்கிறேன் பாரொரு தம்மாசு(ஷு)
வெற்றிப்போர் விட்டு வெகுநா ளாச்சுது
கத்திப்போர் வேடிக்கை பார்ப்போமென்றான்
இப்பவே கோட்டைக்குள் போவோமென்பா னங்கே
மற்போராகப் பேட்டி யெய்யுமென்றான்
தாராள மாகவே கம்பளத் தார்களுந்
தானங்கே சென்று நடந்தனராம்
பாருச்சிப் பாகியைத் தள்ளிவிட் டானங்கே
பரிந்து கோட்டைக்குள் முனைந்திட்டான்
உள்ளாயு தங்கள் பளபளென்ன பாதர்
வெள்ளையன் போறதைப் பாருங்கடி!
துள்ளித்துள் ளி வயன் வீதிசென்று அங்கே
தொங்கலி லேபோனான் பாருங்கடி!

கோணவா சலது தான்கடந்து வெகு
கோலா கலமாக முன்னடந்து
தாணைய மாகவே கோணவா சலிலே
ராணுவத் தார்களும் நில்லுமென்று
ராமலிங்க விலாசஞ் சென்றன ராமங்கே
நாலணி யாய்ச்சன மேல்புறமாய்
ஊமைத்து ரையுடன் சேர்ந்த சனங்களும்
உள்வாச லோரணி யாகநின்றார்
மாறி யடித்தானே பாராக்காரன் அந்த
வாசலுக் கப்புறம் போகாமல்
மேல்வீடு மெத்தைவீ டோரத்தி லேகாவல்
வெள்ளையத் தேவனைத் தானிறுத்திச்

## கட்டபொம்மன் தன் சேனைக்கு உத்தரவு இடல்

சேவுக வீரரைத் தான்பார்த்து ஒரு
சேதிசொல் வான்கட்ட பொம்முதுரை
எச்சரிக் கையாக நிற்பீரென் றானம்மோ
டெதிர்த்த பேரை மடக்குமென்றான்
அச்சமில் லாமல் நிற்கவேணுங் கை
மிச்சமாய் வேட்டைக ளாடவேணும்
சீக்கிர மாயொன்று கூடவேணுஞ் சகச்
சாலஞ் செய்துவெளி யேறவேணும்
என்றல்லோ உத்தரவு தான்கொடுத்து அங்கே
சென்றானே கட்டபொம் மேந்திரதுரை

## தானுபதியும் கட்டபொம்மனும் பேட்டி காணச் செல்லல்

தானு பதியுங் கட்டபொம்மு துரையுந்
தாம்சென் றார்கள்மேல் வீதியிலே
ராணுவங்க ளெல்லாங் கீழ்நிற்க அப்போ
தாஷ்டீகன் கட்டபொம் மேந்திரதுரை
கண்டு சலாஞ்சொல்லிக் கொண்டனரா மங்கே
நின்று ஆலோசனை செய்தனராம்

## கட்டபொம்மனைக் கண்டதும் சாகீசனின் உத்தரவு

வண்டத் தனமாகச் சாக்கீச மேஜருந்
திண்டுமுண் டாகத் தலைகவிழ்ந்து

வாயிலே விரல்வைத் துக்கடித்து துரை
சாகீசன் மேஜர் துடிதுடித்து
முகத்தைப் பார்த்துக் கடுகடுப்பான் துரை
ராயசக் காரரைப் பார்த்துரைப்பான்
கர்னலைக் கூப்பிடு சிப்பாகி அங்கே
யென்னடா ரங்கன் சிப்பாகி
மன்னவன் கட்டப்பொம்மு வந்திருக்கான் அவனை
மடிப்பிடி யாகப் பிடிங்களென்முன்
வெளியே போக விடாதேயென்முன் இந்த
மேல்வீட்டுக் கதவைச் சாத்துமென்முன்
வழிம றித்துப்பி டிங்களென்முன். கத
வடியென் முன்விலங் கடியென்முன்

## தானுபதிப்பிள்ளை சாகீசனின் குறிப்பினை யறிந்து கட்டபொம்மனுக்குக் கூறல்

சாகீசன் சொல்லுஞ் சமாசார மென்று
சாடை யறிந்தானே பிள்ளைமகன்
ஓகோ யிதென்ன கொடுமையென்ரு னிப்போ
ஆகாத பேச்சுப் பிறக்குதென்முன்
என்ன விதியா யிருக்குதய்யோ ! துரை
சன்னைகள் சொல்கிறுன் மோசமய்யோ !
சின்னத் தனமா யிருக்குதய்யோ ! நாம்
செய்யுஞ் சமத்துகள் யெப்படியோ !
தன்னிமை யாக வரவுஞ் சொல்லி இந்தச்
சற்பினை யிப்படித் தானுச்சு
அநியாய மாக இருக்குதென்முன் நாம்
இனிமேல் நிற்கவுங் கூடாதென்முன்

## கட்டபொம்மன் வெளியேற முயற்சித்தல்

இந்தச் சமாச்சாரங் கட்டபொம்மு கேட்டு
அந்த க்ஷணம்விதி யோவெனவே
எந்த விதம் வெளி யேறுவது நாம்
சந்திப்புக்கு வந்த நேரமிது
பொல்லாங்கு மெத்தவும் வந்ததென்முன் கூட
பொம்மு துரையு மனதுநொந்தான்
கல்லல் வருமென்று கோபாலய்யர் கடைக்
கண்ணுல் சிமிட்டியே யேகுமென்முன்

### சாகீசன், மடிபிடித்து நிறுத்தல்

**வேகமாய்க் கட்டபொம் மேந்திரதுரை மெத்த**
**வீடு விட்டுக்கீ ழிறங்கும்போது**
**போகாதே யென்றுசா கீசன்மேஜர் கட்ட**
**பொம்மை மடிபிடித் தேயிழுத்தான்**
**அப்போது கட்டபொம் மேந்திரதுரை அங்கே**
**அதிக கோபங்கொண் டேதுசொல்வான்**

### கட்டபொம்மன், நிறுத்தலுக்குப் பதிலிறுத்தல்

**டப்பை யெழுபத்தி ரண்டு துரைகளுங்**
**கட்டபொம்மு உந்தி தொட்டதில்லை**
**இப்போது கும்பினி சட்டதிட்டந் தப்பி**
**யென்உந்தியைப் பற்றித் தொட்டிழுத்தாய்**
**தப்பிதஞ் செய்யாதே சாகீசன் மேஜரே !**
**சல்லியம் பண்ணுதே விட்டிடென்ருன்**
**உந்தியைப் பற்றி இழுக்காதே பாகி**
**மோசங்கள் வந்து லபிக்குமென்ருன்**

### சாகீசனின் மறுமொழி

**என்ன மோசமடா சொல்லு சொல்லென்று**
**மன்னவன் சாகீசன் தானிழுத்தான்**
**சாகீசன் மேஜரை உதறித் தள்ளியே**
**தாஷ்டீகன் கட்டபொம் மேந்திரதுரை**
**சிங்கம்போ லேகீழி றங்கினராம் அவன்**
**சேவக ருடனே சேர்ந்தனராம்**

### தானுபதிப்பிள்ளை, தனியே மாட்டிக்கொள்ளல்

**கட்டபொம்மு துரை தானிறங்கி அந்தக்**
**கங்கைக் குலாதிபன் பிள்ளையுந்தான்**
**மேல்வீ டதனிலே நின்றுவிட்டா னப்போ**
**முக்கிய வான்பிர தானியுந்தான்**
**கீழிறங் கக்கெதி யில்லாம லப்போ**
**கிடந்தான் மேல்வீ டதனிலேதான்**

### கட்டபொம்மன் உதாசீனத்தைக் கண்டு சாகீசன் துரை கூறுதல்

**அப்போது சாகீசன் மேஜர் துரைக்கு**
**அதிக கோபங்கள் தானுகி**
**தெம்புள்ள சாகீசன் மேஜர் துரையுமே**
**தீர்க்கவா னேது மொழிந்திடுவான்**

வம்புக ளாகவே கம்பளத் தானம்மள்
மறியல் மீறி துராகிருதமாய்
சம்பிர தாயஞ்செய்து போருனே அவன்
கும்பினி யார்பகை செய்தானே
கிஸ்திப் பணமுஞ் செலுத்தாமல் நம்மள்
கேள்விக்கெல் லாம்பதில் சொல்லாமல்
அத்தரி பானிச்சோ மாதரிச்சோ அதோ
போருனே கட்ட பொம்மனுந்தான்
கல்லக்கா ரன்வழிக் கொள்ளைக்கா ரன்நம்மள்
காயிதா தப்பியே போருனே
உல்லாச மாகவே போருனே நம்மள்
கண்ணுலே பார்த்து இருக்கலாமா
மெட்டுள்ள கோட்டைகள் தான்பிடித்தோம் சாதி
வெள்ளைக் காரனென்று பேராளும்
வங்காளங் கொங்கு மலையா ளங்கொச்சி
மக்கதே சம்வயி ருதகேசம்
எங்கெங்குஞ் சீமைகள் பிடித்திட்டோம் நாம்
இங்கிலீ ஷுக்கொடி நாட்டினும்
பார்த்தா லித்தினிப் பாளையக் காரனடா
பாஞ்சைப் பதித்துரை மன்னனடா
மாத்தான் போறதைப் பார்த்தீர்களோ கோட்டை
வாசல் கதவை யடைத்தீர்களோ
வாசல் கதவை யடையுமென்ருன் வலு
மோசக் காரனைப் பிடியுங்களென்ருன்
பாஷைகள் சொல்லிச் சாக்கீசன் துரையுமே,
பாரென்ருன் அவிட்டன் துரையுடனே

## கர்னல் அவிட்டன் துரையின் தடுப்பும் துடுக்கும்

கேள்வி அவிட்டன் துரைகுதித் துக்கொண்டே
கிழக்கு வாசல் கதவடைத்தான்
அப்போது கட்டபொம் மேந்திரதுரை அங்கே
ஆனதோர் சேவகர் தன்னுடனே
எச்சரிக் கையாக நின்ருர்க ளப்போ
தேதுசெய் வான்அவிட்டன் துரையுமேதான்
கட்டப்பொம்மு துரையைத் தான்மறித்தான் அந்தக்
கர்னல் அவிட்டன் துரைதானும்
அவிட்டன் துரையுந் தான்மறிக்க அங்கே
அதிக கோபங்கொண் டேதுசொல்வான்

சந்திப்புச் செய்யவும் வந்ததற்கு எனக்
கிந்த மரியாதை போதுமென்று
இருபேரு மல்கட் டாக அங்கே
இருக்கின்ற செய்தி தனையறிந்து

## பாதர் வெள்ளை குலவையிடல்

வெறிவந் தாப்போலக் குலவையிட்டான் பாதர்
வெள்ளையன் சிங்கேறு தானுமப்போ
குலவைச் சத்தங்க ளானவுடன் ரொம்ப
கூக்குரல் கேட்டானே ஊமையனும்
வலது மீசை படபடென்று அவன்
வல்லையன் கம்புக் கிடுகிடென
திடுதி டென்றுமே தானும்வந் தானப்போ
திறவான் ஊமைத் துரைதானும்
அடர்ந்த பொல்லாங்கு வருமென்று சொல்லி
அமர்த்திக் கட்டப்பொம் மேந்திரதுரை
கோணவா சல்மட்டுந் தான்கடந்து பாதை
கூடிஆ சாரமு கப்பில்வந்தான்
வீருன பொல்லாங்கு வந்ததென்று வயன்
வீதி வெளிதனில் வேகங்கொண்டு
காவல்கா ரன்மகன் வெள்ளையனும் பூண்
கட்டிக் கம்பு தயாராக
வெற்றி வெற்றியென்று முத்தன் பகடையும்
வெற்றிச்சங்கு வாயால் தான்முழக்கி
கத்தி வீசிக்கொண்டு சுத்த வீரருடன்
கட்டப்பொம்மு துரை நின்றனராம்
அப்போது சாகீசர் மேஜர்துரை அங்கே
எப்படிக் கோபங்க ளாகுதய்யோ
தப்பிதஞ் செய்தானே கட்டபொம்மு இப்போ
சமத்துச் செய்துபோ ருனெனவே
கும்பினிப் பட்டாளஞ் சேர்ந்திடவே அங்கே
கம்பளத் தாரை மறித்திடவே
கம்பளத் தாரை மறித்துக்கொண்டார் அடே
கட்டபொம்மு துரை நில்லுமென்றூர்

## அவிட்டன் துரையின் வெகுளிச் செயல்

வாகான கும்பினி மெட்டாகச் சுற்றி
வளைந்து கோட்டைக் கட்டாக
போகாதே போகாதே கட்டபொம்மு வலுப்
பொல்லாங்கு செய்யாதே கட்டபொம்மு

என்று அவிட்டன் துரையுரைக்க அங்கே
நின்றல்லோ கம்பளத் தார்திகைக்க
கட்டபொம்மு மடியைத் தான்பிடித்தான் துரை
மட்டுக் கடங்காத பாகியென்றான்
மட்டுக் கடந்துநீ போனாலிப் போது
துட்டு விலங்கு அடித்திடுவேன்
காயிதாத் தப்பியே போனாக்கால் குட்டை
மாட்டுவே னிப்போது தப்பாமல்
ஞாயம் விசாரணை செய்திடவே உன்னைச்
சாகீசன் மேஜர் வரவுஞ்சொன்னான்
நல்ல மனதாய்த் திரும்புமென்றான் ரொம்பப்
பொல்லாங்கு செய்யாதே பாகியென்றான்
வல்லமை யாகவே அவிட்டன் துரைசொல்லி
மல்லுக்கட் டாகவே தானிழுத்தான்
அப்போது கட்டபொம் மேந்திர துரை
அதிக கோபங்கள் மீறுதலாய்
இனிமே லங்கேவர மாட்டே னென்னை
விட்டிடென் றானங்கே விட்டிடென்றான்

### கவிக்கூற்று

இப்படி யாக இருபேரு மங்கே
கைப்பிடி மல்பிடி யாகவே தானிழுத்தார்
சற்பினை யாகவே சண்டை நடக்குதே
சல்லிய மாகுதே யென்னசொல்வேன் !

### தொடக்கப் போர்

மடிபிடி யாகத் தானிழுக்க அப்போ
மன்னன்கட்ட பொம்மன் தான்துடிக்க
சந்தி வயன்வீதி தூளாக்கி இப்போ
சண்டை வருங்கை விட்டிடென்றான்
உந்தியைப் பற்றி இழுக்காதே பாகி
மோசங்கள் வந்து முடியுமென்றான்
என்ன மோசமடா சொல்லு சொல்லென்று
மன்னன் அவிட்டன்துரை தானிழுக்க
கன்னி சக்கதேவி வீரமல்லு என்று
கட்டபொம்மு குலவை யிட்டானே

### ஊமைத்துரையின் போர் முழக்கம்

கல்லல் வந்ததென்று ஊமைத்துரை தானும்
வல்லையங் கையில் எடுத்தனராம்
கில்லிலி யென்று குலவையிட்டுத் தம்பி
பல்லைக் கடித்தங்கே யேதுசொல்வான்

காகம் பறக்காதே கட்டபொம்ம னென்றால்
காக்கைக் குருவியு மலர்ந்தாதே
யேக மாய்ப்படை குருவிக ளிங்கே
யேகம்போ லச்சுத்தி வளைந்ததென்று
வாய்பேசா ஊமைத் துரைவீர பாண்டியன்
மன்னனுக் குக்கோபம் வந்திடவே
ஆவேசம் வந்தது போல வெகுகோபம்
அங்கே கொடூரமா யேதுசொல்வான்
பிறந்த வன்றைக்கே இறந்தகாயம் இனிப்
பின்னே உயிர்வைத்துப் பார்க்கலாமா ?
வேப்பெண் ணையும்பா லாகிடுமே நம்மள்
காப்(ய்) புக்குக் கம்பளம் பேருசொன்னால்
தீப்பறக் கும்பா ரென்றுசொல்லி யொரு
ஏப்பமிட் டானந்த ஊமையனும்
தண்டுவா முண்டன் நமது தமையனைக்
கண்டார் சிரிக்கவும் நாளாச்சே !
வண்டத் தனமாகச் சோல்சர்வெள் ளைக்காரன்
மடியைப் பிடித் திழுக்கிறானே
மானமழிய உயிர்காவ லென்னடா ? நானும்
ஊமைத் துரைவீர பாண்டியனடா !
ஆனாலு மாகுது போனாலும் போகுது
அடிக்கிறேன் பாரொரு தம்மாஷா
புத்திமதிகள் கைச்சன்னை யிட்டான்தேசம்
புகழுஞ் சிங்காறு குலவையிட்டான்
கத்தி யெடுத்து முருக்கு கிறான்முதல்
கத்திப்பூ சைக்கொன்று துலக்குகிறான்

## வெள்ளையத்தேவன் போர் தொடக்கம்

அலகு ஈட்டியைக் குலுக்கிறான் கர்னல்
அவிட்டனைக் குத்தி மலத்துகிறான்
குலைகுப்புற அவிட்டன் விழுகவே
குலவையிட் டானே பாதர்வெள்ளை
பாதரு வெள்ளையன் தூதரைப் போலவே
பறந்த டிப்பதைப் பாருங்கடி !
பாருக்கார சிப்பாகி பட்டானே தம்பி
பாருக்கார சிப்பாகி பட்டானே
துப்பாகி மட்டு மடிந்தானே கன
சிப்பாகி மார்க ளிறந்தாரே
அப்பாடா அப்பாடா கொல்லுகி றானென்று
முப்பது பேரல்லோ பட்டாச்சு

பாதிப்பட் டாள மழிந்ததுவும் வயன்
வீதிப்பட் டாள முறிந்ததுவும்
துரை யொருத்தனும் பட்டாச்சு அரைக்
கிறண்ட பட்டாளம் பேராச்சு

## கம்பளத்தார் கோட்டைக் கதவு திறந்து வெளியேறுதல்

கரையேறு மென்று கம்பளத்தான் கோட்டைக்
கதவைத் தகர்த்தெறிந் தானேமிஞ்சி
பஞ்சுபோல் கம்பளத் தான்படைகள் கண்ட
பாதை வழியாக வேநடந்து

## வீதியிலே போர் நடத்தல்

மஞ்சள் கொழுப்புச் சரிந்திடவுங் கர்னல்
மாரென்று சொல்லி மருந்திடவும்
பட்டாளஞ் சத்த முழங்கிடவுங் குண்டு
பரிய வும்படை நெறியவும்
கொட்டாப் புளித்துரை தட்டவுங் கடை
நெட்டு வழிச்சென்று முட்டவும்
மின்னல் வெடிகள் விழுந்தாப் போலங்கே
மின்வெட்டி மின்ன லுறுத்தாப்போல்

## அடைப்பக்காரன் இறத்தல்

உன்னி யெழும்பிடக் குண்டுதைத்து அங்கே
ஒரு(த்)தன் கைமேல் பட்டாச்சு
ஆரென்றல் ஊமைத் துரைபுறத்தில் பய்யன்
அடப்பக் காரனும் பட்டாச்சு
மாறிச் சுடச்சொல்லி கட்டப்பொம்மு துரை
வருதிசொன் ஞனே சேவகர்க்கு
அப்போது சேவகர் வெடிமுழக்க அங்கே
எப்படி யேறுது குண்டுகள்தாம்
துப்பாக்கிச் சத்தம் பரிவதை நான்
எப்படிச் சொல்லுவேன் தோழியரே !
கீழ்க்கோட்டை வாசல் கதவுக ளங்கே
கிடுகி டென்னவே சாய்ந்திடுமாம்
வடக்கு மேற்கு கிழக்கு வாசல்தான்
மடம டென்று சாய்ந்திடுமாம்
நேரே யிருந்தகண் டாங்கித் துரைஒரு
நிமிஷத்தி லங்கே பட்டாச்சு

வீரியம் பேசி வெடிமுழக்க அங்கே
வீரன் கட்டபொம்மு தன்படைகள்
கூறிக்கூறி வெடி சுட்டனரா மங்கே
கூட்டங் குலைந்துதே பட்டாளம்
வாலுச் சாவல்கள் போலேயல்லோ அங்கே
நெருங்கி யேறுதே கம்பளமும்
கும்பினிப் படைகளைக் குத்தி மலத்தியே
கூடித் திரண்டுதே கம்பளமும்

## இராமநாதபுரக் கடைவீதி கொள்ளை

சின்னக் கடைவீதி யென்னுந் தெருவிலே
சேர்ந்து திரண்டுதே கம்பளமும்
நன்னய மான கடைவீதி யொரு
நாழிகையின் கொள்ளை கொள்ளையென்றான்
பொன்னும் பணத்தையுங் கொள்ளைகொண்டான் (பிச்சிப்
பூவுங் கொழுந்துங் கொள்ளைகொண்டான்
சன்னக் கம்பிச்சோமன் மடித்திட்டான் நல்ல
சாயச் சீலைகளுங் கொள்ளைகொண்டான்
சட்டம் புனுகுசவ் வாதுடனே நல்ல
சந்தனங் கெந்தப் பொடியுடனே
பட்டுப்பட் டாவெளி தானெடுத்தார் சிலர்
பட்டுக் கயறுகளுங் கொள்ளைகொண்டார்
எதேஷ்ட மாகிய பண்டங்க ளெல்லாம்
எடுத்துக் கட்டினார் சேவுகரும்
கட்டப் பொம்முதுரை சேவுக ருடனே
கலந்து கூடிப் புறப்பட்டார்
வண்ணான் துரைக்கு வந்தார்கள் அந்த
வண்ணானைப் பூசை கொடுத்தார்கள்
எண்ணமல் வண்ணானைக் கட்டிவைத்து தனக்கு
ஏற்ற புடவையுங் கொள்ளையிட்டான்
கிழக்குப் பாதை வழிநோக்கிச் சற்றே
கீழ்ப்புறம் மேல்புறந் தானோக்கி
பழக்க மாகவே கம்பளத் தான்பெரும்
பாதையைக் கூடி நடந்தனராம்

## கம்பளத்தார் இராமநாதபுரத்தை விட்டு வெளியேறுதல்

பட்டணம் விட்டு வெளியேறி மேற்குப்
பாதை கூடியே முன்னேறிக்

கட்டக்கட்ட உச்சி நேரத்திலே பெரிய
கம்பளத் தான்படை சரியவே
முன்னேறிப் பாதை வழிகூடி நேரே
மேல்புற மூலையின் முன்னுக
கன்னிமார் கோயில் பனையடர்ந்த கரையில்
கட்டப்பொம்மு துரை வந்தனராம்
ஊமைத் துரையுடன் சேர்ந்த சனங்களும்
உற்ற சேவுக ரனைவோரும்

## கட்டபொம்மன் ஆலோசனை

தாமதஞ் செய்யாமல் வந்தனராம் அங்கே
தாமும் ஆலோசனை செய்தனராம்
பிள்ளை மகன் பிரதானிப்பிள்ளை யவர்
இன்னம் வரக்காணே மென்றுசொல்லி
ஆவலாகக் கட்டப்பொம் மேந்திரதுரை யப்போ
ஆலோ சனைமிக யேதுசொல்வான்
மேல்வீடு நின்றுனே பிள்ளைகமன்-நம்மை
தாவி வரவில்லை யென்றுரைத்தான்

## இடைவழியில் பாளையக்காரரை கட்டபொம்மன் சரிபார்த்தல்

பாளையக் காரரைச் சேவுகரைச் சுத்திப்
பார்த்தானே கட்டபொம் மேந்திரதுரை
தாழை மலர்முல்லை வாசம் பொருந்திய
தானு பதியையுங் காணேமென்று
கோட்டைக்குள் தானேஅகப் பட்டானே அந்தக்
கோட்டைக்குள் ளேதப்பிப் பட்டானே
ஊமைத் துரைக்கு அடப்பக்கார னவன்
உத்தம னுஞ்சிறு பிள்ளையாண்டான்
காமனுக்கு நெஞ்சில் குண்டுதைத்து உடன்
கைமேல் தானங்கே பட்டாச்சு

## ஊமைத்துரையின் வருத்தமும் விருத்தமும்

மானு பரனை ஊமைத்துரை பாண்டியன்
மன்னனுங் கோபமா யேதுசொல்வேன்
தானு பதியையு மல்லாமல் நம்மள்
பாஞ்சைப் பதியிலெரிப் பாகுமய்யோ
செம்மையா[ய்] நம்மிட தானு பதியையும்
சீக்கிர மாக வரவழைத்து

சாகீசன் மண்டையைத் தானுடைத்து அவன்
வாயைக் கிழித்து ரத்தங்குடித்து
போயிட்டு வாரதே காரியந் தானென்று
புறப்பட்டான் ஊமைத் துரைதானும்

## கோவில் கவுளி சகுனங் கூறல்

கன்னிமார் கோவில் உச்சத்தி லேகெவுளி
கீச்சுக்கீச் சென்று நிமித்தஞ்சொல்ல

## புலிகுத்திநாயக்கன் சோதிடங் கூறல்

தென்னன் புலிகுத்தி நாயக்கன் சோசியம்
சீக்கிரம் பார்த்து மொழியலுற்ருன்
சமத்தன் தாஞ பதிப்பிள்ளை உயிர்
தான்சேத மில்லை·யெனவுரைத்தான்
கண்டிதம் தண்டித மெத்தஉண்டு ரொம்பக்
காயிதாச் செய்வான் கலைக்கட்டரும்
தெண்டனைக் குள்ளாகித் தாஞ பதிப்பிள்ளை
சென்னப் பட்டணம் போய்ச்சேர்ந்து
சென்ரல் துரைகளைக் கண்டுபேட்டி செய்து
வெந்நாளு மேன்மை பொருந்திடலாம்
நன்னய மாகவே தாஞ பதிப்பிள்ளை
நாற்பது நாள்வரச் செல்லுமென்ருன்
நாற்பது நாளைக்குள் பாஞ்சால நாட்டினில்
நன்மையாத் தாஞ பதிவருவன்
தீர்க்க மிதுவென்று சோசியஞ் சொன்ஞனே
தீரன் புலிகுத்தி நாயக்கனும்

## சோதிடங்கேட்டுக் கட்டபொம்மனும் பாளையக் காரர்களும் பாஞ்சைநோக்கிச் செல்லல்

சொல்லவே கேட்டு மனமகிழ்ந்து ஊமைத்
துரையுங் கட்டப்பொம் மேந்திரனும்
நல்லது தானென்று பாதை வழிகூடி
நடந்து சென்ருனே கம்பளத்தான்
சேகர மாகவே போயிறங்கிச் சிக்கின
நாகரீக முள்ள சத்திரத்தில்
தாகமுந் தீர்ந்து இளைப்பாறிச் சிக்கின
சத்திரம் விட்டு வெளியேறி
செழுவநல் லூரு மார்க்க மதாய்அது
சேதுப் பாதைவழி தீர்க்கமதாய்

வளம் பொருந்த நடந்தனராம் மால்தன்
செழுவ நல்லூர் கடந்தனராம்
மெட்டுக ளாகவே யெட்டி நடந்தங்கே
மேல்மாந்தை நகரில் போய்ச்சேர்ந்து
கட்டுள்ள கம்பளத் தார்களுமே அங்கே
இஷ்டங்க ளாக இருந்தனராம்
விருந்து சமைய லாகிடவே அன்ன
மருந்தி பசிக ளாறிடவே
திருச்செந்தூர் பாதை தான்கூடி அங்கே
ஒருச்சா மத்துக்குள் தானடந்தான்
காத்தாடி போல்விசை கொண்டனராம் அங்கே
தூத்துக் குடிநகர் சென்றனராம்

## தூத்துக்குடியில் கொள்ளையிடல்

தூத்துக்குடி வெள்ளைக் காரர்வீட்டில் கொள்ளை
சூறை யடித்திட வேணுமென்று
கும்பினி யாருட பொன்னுடை மைகளை
கொள்ளை யடித்தானே கட்டபொம்மு
வம்புகள் செய்யுரு னென்றுசொல்லி அங்கே
வந்தானே பிராஞ்சுத் துரைமார்கள்

## பிராஞ்சுத் துரைமார் உபதேசம்

அனியாயஞ் செய்யாதே கட்டபொம்மா உனக்
காபத்து வந்திடு மென்றுசொன்னான்
வினையல் லோவெகு கும்பினிப் பொல்லாங்கு
வேண்டாமடா கட்ட பொம்முதுரை
கொள்ளை யடிக்கிருய் ஞாயமில்லை இந்தக்
கூக்குர லாகுதே பொல்லாங்கு

## கட்டபொம்மன், உபதேசத்திற்குப் பதில் அளித்தல்

சன்னை செய்யாதே வெள்ளைக்காரர் சொல்லத்
துள்ளியே கட்டபொம் மேந்திரதுரை
பூண்கட்டிக் கம்பா லடிக்கிறேன் பாரென்று
பொல்லாப்பு வந்தால்நல் லாப்புவைப்பேன்
நாளைப் பயணஞ் சவாரியென்ருன் அங்கே
ராமநாதபுரம் போய்ச்சேர்ந்தோம்
சாகீசன் மேஜர்ரைக் கண்டுபேட்டி செய்து
ஈகீகீ யென்று சிரித்துவந்தோம்

ஆயிரம் பேருக்கும் ஞாய மானபடி
அன்பது பொட்டிப் பணமெடுத்தோம்
சேவுகர் சம்பளஞ் செல்லா மற்படிச்
செலவுக்கில் லாமல் கொள்ளைகொண்டோம்
கூவாதே கூக்குரல் விடாதே அங்கே
கும்பினிக் காயிதம் போடாதே
கொள்ளையிட் டான்கட்டப் பொம்மனென்று சொல்லிக்
கும்பினிக் காயிதம் போட்டாக்கால்
கள்ளத் தனஞ்செய்தால் நானுனக்குப் பொல்லாக்
கால னென்றுமே தானுரைத்தான்
தன்னிக ரில்லாமல் தான்பேசிப் பாஞ்சைத்
தலத்தை நோக்கியே கைவீசி
அனியாய மாகவே கொள்ளையிட் டான்பணம்
அன்பது பொட்டியு முன்னேற்றி

## பாளையக்காரர் பாஞ்சைநகர் அடைதல்

பந்தியாய்ப் பாளையக் காரரு டன்வீர
பாண்டியன் கட்டபொம் மேந்திரதுரை
சிந்தை மகிழ்ந்திடப் பாஞ்சைப் பதிவந்து
சிங்கார மாகக் கொலுவிருந்தான்
கன்னி சக்கதேவி பாதத்தைப் போற்றியே
கட்டப்பொம் மேந்திரன் கொலுவிருந்தான்
இனிமே லுங்கதை சொல்லுகி றேன்வெகு
நன்னய மாகவே கேளுங்கடி !
ராமநா தபுரங் கோட்டையி லேஅங்கே
நடந்த ஞாயத்தைக் கேளுங்கடி!
பூமி யதிறவே கோட்டைக்குள் ளேஅங்கே
போராட்ட மாகுதே கோட்டைக்குள்ளே
கட்டபொம்மு துரை திரும்புகி றானென்று
கலக்க மாச்சுதே பட்டணத்தில்

## அவிட்டன் துரையிடம் சாகீசன் துரை வெம்பிப் பேசுதல்

பட்டுக் கிடந்த அவிட்டன் துரையிடம்
பட்டாள மேஜருங் கிட்டவந்து
பாவி பழிமோசஞ் செய்தா னேயென்று
கோபங்க ளாகவே யேதுசொல்வான்
கண்ணாலே பாருங்கள் நல்லோரே ! இது
காரியமோ ? சொல்லும் நல்லோரே !

கட்டப் பொம்மனிங்கே வந்தவன் தானம்மள்
மட்டுக் கடந்தவன் போகலாமா ?
துஷ்டத் தனங்களுஞ் செய்தானே அவன்
துற்புத்தி யால்மோசம் போனுனே
எண்ணி எட்டுநாளைக் குள்ளாக அவனை
யேலேலத் தூக்கிலே போடாவிட்டால்
என்பேரு சாகீச மேஜரல்ல நான்
எடுத்ததும் பட்டாக் கத்தியல்ல
சம்பிர தாய மினிப்பார்ப் போமென்று
வெம்பி அவிட்டனைத் தானடக்கி
வீரிய மாய்த்துரை மனதிலெண்ணி மன
வேகங்கொண் டான்வயன் வீதியிலே
காரிய மாகவே நாற்காலி மேல்துரை
கலெக்கட்டர் மேஜருந் தானிருந்து

## தானுபதிப்பிள்ளையைச் சித்திரவதை செய்து மானபங்கப் படுத்தல்

தானு பதியை வரவழைத் துத்துரை
தரியா பத்தங்கே செய்யலுற்றான்
மானபங் கம்பண்ணிப் பிள்ளை மகனைத்தான்
வைத்தானே கும்பினிப் பாராவில்
கிஸ்திப் பணங்கட்டச் சொல்லியல் லோகையில்
கிட்டியைப் போட்டு நெருக்குகின்றான்
நெத்தியிலே கல் வைத்தல்லவோ அங்கே
நிறுத்தி னன்வயன் வீதியிலே
துள்ளியே சிப்பாகி மால்தாரும் அவன்
துப்பாக்கிப் புடங்கால் தானிடிப்பான்
பிள்ளை மகன்படும் வாதனை யெங்கும்
மெத்தவர்கள் பார்க்கவே மாட்டார்கள்
துப்பாக்கி நாலஞ்சு சேர்த்துப் பிள்ளைமகன்
தோளில் வைத்தங்கே நிறுத்தினராம்
அப்போது பிள்ளை மகன்தானு மப்போ
எப்படிக் கண்ணைப் பிசைந்துசொல்வான்

## வாதனைபடும் பிள்ளைமகன் கூற்று

கம்பளத் தாருட நாட்டுக்குள் ளேநானுங்
கட்டபொம் மேந்திரன் பிரதானி
கும்பினி யார்க்குநான் பெத்தபிள்ளை யென்று
கூக்குரல் போட்டங்கே யேதுசொல்வான்

புத்திகள் சொன்னாலுங் கேளானே யெங்கள்
பொல்லாத கம்பளத் தார்துரைகள்
கிஸ்திப் பணங்கட்டச் சொன்னு லுஞ்சரி
கேட்கமாட் டேனென்று சொல்லுவானே
கும்பினி யார்பகை யாகாதென்று சொன்னல்
கோபங்கள் செய்வானே கம்பளத்தான்
வம்பு வருமென்று சொன்னு லுமிந்த
மன்னன் ஊமைத்துரை கேளானே
என்னுலே குற்றங்க ளேதுமில்லை யென்று
சொன்னனே பிள்ளை மகன்தானும்
நன்னய மாகவே தந்திர மாய்ப்பின்னும்
ஞாயங்க ளாகவு முரைக்கலுற்றுன்
சேவித்தால் கம்பளந் தானுமுண்டு இப்போ
சேவியா தேபோனு லொன்றுமில்லை
கோபம்வேண் டாமென்று பிள்ளைமகன் சொல்லக்
கும்பினிக் கலைக்கட்ட ரேதுசொல்வான்

## சாகீசன்துரை தானுபதியை பாருவோடு சென்னைப்பட்டணத்துக்கு அனுப்புதல்

வாசம் புகழ்பிர தானிப்பிள்ளை தன்னை
வடக்கே அனுப்பவும் வேணுமென்று
பூசைபண் ணுமலே பிள்ளை மகனுக்குப்
பின்பாரா முன்பாரா தானும்வைத்து
மூடுபல் லாக்கிலே தான்போட்டு அரக்கு
முத்திரை வைத்தல்லே(ா) தான்பூட்டி
கேடுகெ டும்புகள் செய்தா னேயென்று
கெட்டியாய்க் காயிதங் கண்டெழுதி
கொள்ளைக்கா ரன்வலு பிள்ளை மகனென்று
கும்பினிக் காயிதங் கண்டெழுதி
அள்ளி நிதித்தருஞ் சென்ரல் துரைக்கு
அன்பாகக் காயிதம் போட்டனராம்
தீர்க்கவான் பிள்ளை மகனையுந் தானங்கே
சென்னப் புறத்துக் கனுப்பிவைத்தான்
மார்க்கமாய்ப் பிள்ளை மகன் தானுமப்போ
வந்தானே திருச்சிராப் பள்ளிக்குத்தான்
திருச்சிராப் பள்ளிதான் கடந்து அங்கே
சென்னப் பட்டணம் போய்ச்சேர்ந்து

## தானுபதி சென்னைக் கவர்னர் துரையைக் காணுதல்

ஜார்ச்சுத் துரைக ளேயுங் கண்டு
சந்திச்சுக் கொண்டானே பிள்ளைமகன்
சென்னப் புறத்துக் கெவுன்மண் டர்துரை
சென்றலை யுங்கண்டு பேட்டிசெய்து
மன்னவன் பிள்ளை மகன்தானு மவன்
வாக்கு மூலச்செய்தி யேதுரைப்பான்
தாஷ்டீகன் சாக்கீசன் மேஜர் துரையங்கே
தப்பிதஞ் செய்ததைச் சொல்லுகிறேன்

## பிள்ளைமகன் சாகிசன் துரையின் மோசங்களை விவரித்தல்

பேட்டிக ளென்று வரவழைத்து வலு
லூட்டியாய் மோசஞ்செய் தானேயென்ருன்
தேசங்க ளெல்லாம் அலையப்பண் ணித்துரை
மோசஞ்செய் தானே ராமநாதபுரத்தில்
கோபாலையர் இடமாக மூன்று பேரையுங்
கூட்டி வரவேணு மென்றுசொல்லி
அனுப்பி வைத்தார்க ளப்போது அவர்
மனதுமே மிகவும் நொந்து
எங்களிடத் தில்வந்தா ரப்போது நாங்க
ளெல்லோ ரும்நமஸ் காரஞ்செய்தோம்
ஊமைத் துரையுமே தண்டனிட்டு எனக்கு
உத்த சமாசாரஞ் சொல்லுமென்ருன்
சாமிகோ பாலைய னப்போது கைச்
சன்னைகள் கேட்டவ னேதுசொல்வான்
கண்ணைப் பிசைந்து கலங்குவ ராமைய்யர்
கண்ணாலே தண்ணீர் தளும்புவராம்
எண்ணி யழுதொரு கோபாலை யர்சபை
எல்லோ ருங் கேட்கவே யேதுசொல்வார்
கர்னனே கட்டபொம் மேந்திர னேஉன்
அன்னத் துரோகம்நான் செய்வேனோ ?
அன்னத்து ரோகம் செய்வே னோயென்று
ஐயர் மொழிந்திடும் வேளையிலே
போசரா சேந்திரன் கட்டபொம்மு துரை
பூசார மாய்ச்செய்தி யேதுசொல்வான்
வாச மிகுந்திடுங் கோபாலையரே இப்போ
வந்த வகைகளைச் சொல்லுமென்ருன்

அழுதகண் ணீரும் தானமர்த்தி வெகு
ஆதர வாகவே முன்னிறுத்தி
புனுகு சந்தன பொட்டுமிட் டுத்தங்கப்
பூணா லவர்க்குத் தான்போட்டு

## கோபாலய்யர் தான் வந்த செய்தி கூறல்

நடந்த செய்திகள் சொல்லுமையா வென்று
இடைந்த கட்டப்பொம்மு தான்கேட்க
இடைந் துடைந்து மனதுநொந்து சற்றே
தொடர்ந்து செய்திகள் சொல்லுவராம்
மூர்க்கவான் சாகீசன் மேஜருந் தான்உங்கள்
மூன்றுபேர் தன்னையும் வரவுஞ்சொன்னான்
கர்ன லவிட்டன் துரையுட னேபேசி
கமிட்டி மார்க்கங்கள் செய்கின்றானே
மின்னல் பறக்குதே கோட்டைக்குள் ளேவஞ்ச
வினைகள் செய்கிறான் கோட்டைக்குள்ளே
மூலைக்கு மூலை கொத்தளத் தில்வெகு
மூர்க்கமாய்ப் பீரங்கி வைத்திருக்கான்
காலனைப் போலவே சாக்கீசன் மேஜரும்
ஆலோ சனையாகத் தானிருக்கான்
சிப்பாகி மார்கள் எல்லோ ரும்வந்து
சேர்ந்து கவாத்து முறைகள்செய்தார்
தப்பிப் பிழைக்கவே யோசனைகள் தாமுந்
தனித்த ளப்புகள் செய்யுமென்றான்
உத்த சமாசாரங் கோபாலை யன்வெகு
உண்மையாய்ச் சொல்லி உரைத்தனராம்
முத்தணி மார்களுங் கட்டபொம்மு துரை
சித்த மகிழ்ந்தங்கே யேதுசொல்வான்
தானு பதியுட னுன்வா ரேனென்று
சாகீசன் மேஜர்க்குச் சொல்லுமென்றான்
மேனுடு காவல னிதோவாரா னென்று
வீரிய மாய்த்துரைக்குச் சொல்லுமென்றான்
சந்தேக மில்லாமல் கோபாலைய்ய னப்போ
சாகீசன் மேஜர்க்குச் சலாமுஞ் செய்து
சொந்தமா கச்செய்தி சொல்லிவிட வேதுரை
சந்துஷ்டி யென்று மகிழ்ந்தனராம்
மெய்யென்று கும்பினிச் சாகீசன் மேஜரும்
ஓய்யார மாக இருந்தனராம்
அய்யர் போனபின்பு கட்டபொம்மு துரை
மெய்யெல்லாம் வெம்பி மனதுநொந்து

தம்பியுந் தானு பதியுடனே மெத்தக்
கம்பளத் தாருமே யேதுசொல்வான்
வம்புக ளாக வரவழைத்தான் துரை
மன்னவன் சந்திப்புச் செய்யாமல்
பாஞ்சைப் பதிநோக்கிப் போவோமென்ருல் டப்பைப்
பாளையக் காரர் சிரிப்பார்கள்
இப்படிப் பேசியே நாங்களெல் லோரும்
ஏகியே சென்ருேங் கோட்டைக்குள்ளே
ராசிய தாக வரவழைத்தான் கட்ட
பொம்மு துரையை மடிபிடித்தான்
வல்லமை யாகவே சாகீசன் மேஜரு
மானபங் கஞ்செய்தா னென்றுரைத்தான்
கம்பளத் தாரை மடிபிடித் ததில்
கல்லல்செய்த ஞாயம் நிசமென்ருன்

## கவர்னர் துரைகள் தானுபதிப் பேச்சுக்கு மதிப்புக்கொடுத்து சாகீசன் துரைக்கு தண்டனை நியமித்தல்

அன்பாகப் பிள்ளை மகனுரைக்கும் வெகு
ஆலோச னைத்துரை தான்கேட்டு
நடந்த செய்தியைக் கேளாமல் கவர்னர்
ஞாயத்தா ருத்தர வில்லாமல்
அடங்கள் செய்தான் சாகீச மேஜரும்
அனியாய மாகவே சீமையிலே
வர்மங்கள் செய்தவன் சாகீசன் மேஜர்க்கு
வரவல் அபராதங் கொடுமென்ருன்
தர்மத் துரைகளும் ஞாயங்கள் பார்த்தல்லோ
சாகீசன் மேஜர்மேல் குற்றமென்ருன்
அந்தக்ஷணமே கவர்னர் துரைகளும்
ஆலோசனை செய்து அந்நேரம்
சந்தனந் தாம்பூலந் தானெடுத்து அந்தத்
தானு பதிகையில் தான்கொடுத்து
ஜார்ச்சுத் துரைகள் மனமகிழ்ந்து பிர
தானி முகம்பார்த் தேதுசொல்வான்
இக்ஷணம் உம்முடைக் கட்டபொம் மேந்திரனை
இஷ்டமாய் இங்கே வரவழைத்தால்
கட்டாயமாய்ப் பேட்டிகள் செய்திடலாம் வெகு
சந்துஷ்டி யாய்மொழி பேசிடலாம்

எட்டுநா ளைக்குள் தருவியென்று வெகு
திட்டமாய்த் துரைகள் செப்பிடவே
நல்லதென்று சொல்லிப் பிள்ளைமகன் வெகு
உல்லாச மாகவே தான்திரும்பி
சீக்கிரம் பயணஞ் சொல்லிக்கொண்டார் தெற்குச்
சீமையை நோக்கி வரவுஞ் சென்றான்

## பிள்ளைமகன் பாஞ்சைநகர் வந்தடைதல்

பாக்கிய வான்தம்பிப் பிள்ளைமகன் பாஞ்சைப்
பதியில் வந்தல்லோ சேர்ந்தனராம்
கட்டபொம் மேந்திரனைக் கண்டனராம் வெகு
மெட்டுக ளாய்ச்செய்தி விண்டனராம்
திட்டமுள்ள சென்ரல் மெட்டுக் கவர்னர்கள்
சீமையில் தர்மத் துரைகளென்றான்
நன்னய மாகவே சென்ரல்துரை சொன்ன
ஞாயங்க ளெல்லாம் மொழியலுற்றான்
மன்னிப்புச் சன்னிப்புத் தான்கொடுத்தார் உம்மை
மார்க்கமாய்க் கூட்டி வரவுஞ்சொன்னார்
என்றுசொன் னானந்தப் பிள்ளைமகனு மப்போ
வென்னசொல் வான்கட்ட பொம்முதுரை
நன்றுகாண் பிள்ளை மகனே உம்மைநான்
கண்டதே நன்மைக ளாச்சு தென்றான்

## கட்டபொம்மு செய்தியறிந்து சென்னை செல்லல்

இனிமேல் யோசனை யென்னவென்று னங்கே
சென்னப்பட்டணம் சவாரி யென்றான்
கன்னிசக்க தேவியைத் துதித்துத் தான்நல்ல
வானப்பரிகள் சவாரி யென்றான்
பரிவுட னேதுரை வீர பாண்டியன்
பார்த்தீபன் கட்டபொம் மேந்திரதுரை
நவுரி பேரிகை தான்முழங்க மக
ராசன் சிவிகையின் மேலேறி
ஊமைத் துரையொரு சேகரமாய்ச் சீரு
சேமத்து டன்வெகு உல்லாசமாய்
பூமன் சிவத்தையா முத்தையா வெள்ளையா
பொதிந்த கம்பளச் சேருவையும்
வில்லுங்கை வங்கியும் வல்லயமும் ஈட்டி
மிகுந்த கம்பளச் சேருவைதான்

வல்லமை யாகவே தானடைந்து வெகு
சொல்லுறு திக்கார ரெல்லோரும்
சிங்கேறு போல்வெளியே நின்ருரா மங்கே
சென்னைபுறஞ் சவாரி வைத்தனராம்
வங்கர் கலிங்கர் குலிங்கர் திரண்டிடும்
வல்லவன் கட்டபொம் மேந்திரதுரை
தங்க மிலங்கியபொன் தண்டிகை யேறிய
தாஷ்டீகன் வாரதைப் பாருங்கடி !
இங்கிதச் சங்கீதம் படிக்கவே பராக்
கெச்சரிக் கையென்று முடிக்கவே
கங்கைக்கு லாதிபன் தானு பதிப்பிள்ளை
கர்னல்போல் முன்னே வழிநடக்க
எங்கும் வலம்புரிச் சங்கம் முழங்கவே
சிங்கார மாய்ச்சபை நெருங்கவே
மாடகூ டமகா மேடைக ளாம்புது
மண்டபஞ் சேர்வைகை மாநதியாம்
நாடெல்லாம் போற்றிய தென்மது ராபுரி
நாட்டில் வந்தான்கட்ட பொம்முதுரை
மதுரை நகரில் போய்ச்சேர்ந்து துரை
மனனவன் கர்னலைப் பேட்டிசெய்து

## கட்டபொம்முதுரை சொக்கலிங்கர் மீனுட்சியைத் தரிசனஞ் செய்தல்

சதுருள்ள கூடார வாசலில் சென்றுஅங்கே
தானே சலித்து இறங்கினராம்
சம்போ சதாசிவா சொக்கலிங்கா எங்கள்
தாயே பரஞ்சோதி மீனுட்சி
நம்பின பேரையுங் காத்து ரட்சியென்று
நாற்பது பொன்னங்கே தான்கொடுத்துப்
பூசைநெய் வேத்தியந் தான்பார்த் துத்துரை
பூசைகள் போசனஞ் செய்துகொண்டு
பேசுந் தெய்வமது மீனுட்சி யென்று
பேரணி யாகவே தானடந்தான்

## மதுரையைவிட்டு வெளியேறுதலும் கர்னல் சாகீசன் துரை அதைப் பார்த்தலும்

கட்டபொம் மேந்திரன் சேனைத் தளத்தையும்
கம்பளத் தார்சம்பிர தாயத்தையும்
மெட்டான கர்னலும் சாகீசன் துரையும்
விஸ்தார மாய்நின்று பார்த்திடவே

மதுரை விட்டு வெளியே றித்துரை
மன்னவன் தான்பரி தானேறி
விதுரன் போலவே கட்டபொம்மு துரை
மேலூர்ப் பாதை வழிநடந்து

### திருச்சிராப்பள்ளி ஏகுதலும் வங்காளத் துரைமார்களைக் காணலும்

சேனைத் தளத்துடன் தானே விலாசமாய்த்
திருச்சி ராப்பள்ளி சேர்ந்தனராம்
ஆனையேறி வீதி சுத்தினரா மங்கே
தானே சலிய விறங்கினராம்
அங்கே துரைமார்கள் வங்காள மேஸ்திரேட்
டாபீசு வெள்ளைக் காரர்களும்
சங்கையுடன் பேட்டி செய்தனராம் வெகு
இங்கித மாக நடந்தனராம்

### சென்னைப்பட்டணம் ஏகி, கொலுவிருந்து, துரைமார்களைப் பேட்டி காணல்

திருச்சி ராப்பள்ளி தான்கடந்து அங்கே
சென்னப் பட்டணமும் போய்ச்சேர்ந்து
மருமலர் வாசன் கட்டபொம்மு துரை
பிரபல மாகக் கொலுவிருக்க
விஸ்தாரக் கூடாரம் வேடிக்கை யாய்ச்செய்து
வீரன் கொலுவினில் வீற்றிருக்க
கஸ்தூரி வாசம் கமகமென அங்கே
கம்பளத் தார்வந்து சூழ்ந்திருக்க
மெட்டுகளுங் கோட்டைத் திட்டுகளும் சென்னப்
பட்டணம் பாருக்கள் மெட்டுக்களும்
எட்டுத் திசையும் சிறந்திடவே அங்கே
எழும்பும் பீரங்கிச் சத்தங்களும்
கோட்டையைச் சுத்தி அகழ்கிடங்கு மதில்
கோவிலும் வாசலும் மேடைகளும்
நாட்டை ஒடுக்குந் துரைமார்கள் அவன்
ஈட்டிச் சாரிகள் கண்டனராம்

### தனியே, தானுபதிப்பிள்ளை பேட்டிகண்டு வந்து கூறல்

அந்நேரம் சென்ரல் துரையிடத் தில்நான்
தனிமை யாகவே போய்வாரேன்
அந்நேரந் தானு பதிப்பிள்ளை யங்கே
என்னென்ன யோசனை சொல்லலுற்றுன்

சற்றுத் துரைகளைக் கண்டுபேசிக்கொண்டு
இக்ஷணம் வாரே னெனவுரைத்தான்
கச்சித முள்ள பிரதானிப் பிள்ளை
ஜார்ச்சுக் கவர்னரைக் கண்டனராம்
சென்ரலுக் கேசலாம் சொல்லினராம் வெகு
தீர்க்கமாய்ச் செய்தி மொழிந்தனராம்
முன்னாலே துரைக ளுத்தர வின்படி
பாஞ்சைப் பதித்துரை இப்போது
மார்க்கமாய் வந்தி ருப்பதி னாலிப்போ
பேட்டிகள் செய்யவும் வேணுமென்றார்
சேர்க்கையுள்ள துரைமார்க ளிந்த
வாக்குமூலச் செய்தி தான்கேட்டு
அப்படி யேவெகு மேன்மைசெய் வோம்நல்
தாகட்டும் நாளைக்குப் பேட்டிசெய்வோம்
செப்பமுள்ள துரை மாருரைக்க அப்போ
சீச்கிரம் பிள்ளை மகன்திரும்பி
கட்டப் பொம்முதுரை சமுகத்தில் வந்து
இஷ்டமாய்ச் செய்தி மொழிந்திடவே

## கவர்னர் துரை பேட்டிகொடுக்க ஆயத்த மாகுதல்

அஷ்ட லக்ஷிமி விலாசம் பொருந்தவே
அதிக சந்துஷ்டி யாகிடவே
மறுநா ளுதைய காலத்தி லேதுரை
மார்கள் ஆலோசனை யேதுசொல்வார்
திர்சுடனே வெகு துருசென்றான் அங்கே
சென்னப் பட்டணம்சிங் காரமென்றான்
மங்கள மாய்த்துரை இங்கித மாகிய
பங்களா மேல்வீடு வாசல்களாம்
எங்கெங்கும் வாழைகள் தானட்டிச் சபை
இலங்கு மேசைகள் தான்போட்டு
மேசைப் பலகை விலாசம் வைத்துஅதில்
மேலேயுந் தீனிக ளெடுத்துவைத்துக்
கோதும்பை ரொட்டி குமித்து வைத்துநெய்க்
குடங்கள் தன்னை யெடுத்துவைத்துச்
சாதங் கறிகளுந் தேன்கனி வர்க்கமும்
போதர வாகக்கொண் டாந்துவைத்து
எள்ளுப் போட இடமில்லாமல்அங்கே
வகைவகை யாகத் தானிறுத்தி

அய்யா யிரந்து ருப்புக் குதிரையும்
அணிஅணி யாகவே தானிறுத்தி
ஒய்யார மாகவே சோல்சர் வெள்ளைக்காரர்
எண்பதி னாயிரந் தானிறுத்தி
வரிசை யாகவே தம்பூருக் காரனை
வகைவகை யாகத் தானிறுத்திக்
கருணை யாகவே அஞ்ஞூறு பீரங்கி
கலந்து வைத்தங்கே பாளையத்தில்
எல்லாந் தயார்பண்ணப் பாஷைசொல்லிச் சோல்சர்
மல்லர்கள் சேர வரிசையென்று
உல்லாச மாகவே கவர்னர் துரைமார்கள்
உகந்து யோசனை யேதுசால்வான்
சென்றல் சமூகத்தில் முன்னேதான் பாஞ்சைச்
செல்வன் கட்டபொம் மேந்திரன்தான்
தன்னிமை யாக அழைத்துவரச் சொல்லித்
தர்மத் துரைகள் மொழிந்தனராம்
துரைக ளுத்தர வின்படி யேவொரு
சோல்சர் வந்தானே கடூரமதாய்
வரவே வெள்ளித் தடிக்கார னங்கே
வந்தானே கட்டப்பொம் மேந்திரனிடம்
வெள்ளித் தடிக்காரன் வந்துநின்று வெகு
வீரப்ப ருஞ்சேதி யேதுசொல்வான்
தெள்ளிமை யாகவே பேட்டிசெய்து நீங்கள்
சீக்கிரம் வாருங்க ளென்றுரைத்தான்

## கட்டபொம்மு பேட்டிகாணச் செல்லல்

உத்தர வாக மொழிகேட்டு நல்ல
உத்தமன் கட்டபொம் மேந்திரதுரை
சித்த மகிழவே சேனைத் தளத்துடன்
சென்றானே சேவகர் தன்னுடனே
வர்ணச் சிவிகையும் விட்டிறங்கி மக
ராசன் வரிசையாய்த் தம்பியுடன்
தென்னவன் பாஞ்சைத் துரைவீர பாண்டியன்
செனரலுக் காயிரம் பொன்னும்வைத்து
செனரல் துரை பேட்டி செய்தானுஞ்
செய்தங்கே சித்த மகிழ்ந்தாராம்
அந்நேரம் செனரல் துரைகள் கெவுனரும்
ஆயிரம்பேர் வெள்ளைக் காரர்களும்

## வெள்ளைத்துரைகள் கட்டபொம்மனைப் பார்த்துக் கேள்விகள் கேட்டல்

கட்டபொம்மு துரை மெட்டான பாண்டியனைக்
கண்ணாலே பார்த்தங்கே யேதுசொல்வான்
அட்டான தேசமுங் கண்டதில்லைப் பாகி
ஆளி லழக னெனவுரைத்தான்
அன்புள்ள கட்டபொம் மேந்திரனைப் பார்த்தங்கே
ஆலோசனைத் துரை யேதுசொல்வான்
வம்பு குறும்பு அழிவுசெயதா யென்ன
வர்மமடா வலுமோசஞ் செய்தாய்
கண்டிப்பாய் மேஸ்திரட் டாபீசு வலு
கனம்பொ ருந்துந் துரைமார்கள்
மண்டலம் புகழுஞ் சௌரல் துரையவர்
மார்க்கமாய் ஞாயமாய் விளங்கினரராம்
செந்நெல் விளை நல்ல ராம நாதபுரஞ்
சிங்கார மாயவர் கோட்டையிலே
கர்னலும் அவிட்டன் துரையைக் குத்தியங்கே
கல்லல் செய்ததென்ன பாகியென்றான்
கும்பினி யார்கள் ஒழுக்கந் தப்பியங்கே
கொள்ளை யடித்தீரே நீங்களுந்தான்
கம்பளத் தாரென்று பேரெடுத்து ரொம்பக்
கல்லல் செய்தாய்பதில் சொல்லுமென்றார்
ஒழுங்குத் தப்பிதஞ் செய்தாயே பதில்
உரையென்று துரைமார் கேழ்க்கவே
களங்கம் உன்மேல் இருக்குதடா பாகி
கட்டபொம்மு நீதான் சொல்லுமென்றான்

## கட்டபொம்மன், கேள்விக்கேற்ற பதில் கூறுதல்

இப்படி யாகத் துரைமார்கள் சொல்ல
என்னசொல் வான்கட்ட பொம்முதுரை
தப்பித மாகவே சாகீசன் மேஜருஞ்
சல்லியஞ் செய்ததைச் சொல்லுவராம்
அன்புகள் பேட்டிகள் தாரோமென்று சொல்லி
அனியாயஞ் செய்ததை விள்ளுவராம்
நம்புத லாக வரவழைத்து ரொம்ப
வம்புகள் செய்ய அளப்பெடுத்து
தேசங்க ளெங்கும் அலையப்பண்ணித் துரை
மோசங்கள் செய்ததை யென்னசொல்வேன்

ராசிக ளாக வரவழைத் தானங்கே
ராமநா தபுரம் பேட்டியென்ருன்
பேட்டிக ளாக வரவழைத் தான்மடி
பிடித்தல்லோ மானபங்கஞ் செய்தான்
கோட்டைக் கதவை யடைத்துக்கொண் டான்சுத்திக்
கும்பினிப் பட்டாளஞ் சூழ்ந்திடவே
வேட்டை ரணவேட்டை யாச்சுதென்று சொல்லி
வேட்டை விளையாட்டுச் செய்தேனென்ருன்
தாட்டிகை யாகவே கட்டபொம்மு துரை
சலாஞ்செய்து செய்தி சொன்னபின்பு

## கட்டபொம்மனிடத்தில் தூத்துக்குடிக் கொள்ளையைப்பற்றிக் கேட்டல்

பார்த்தார்கள் ஞாயத்தைக் கும்பினி யார்களும்
பாஞ்சைத் துரையைப்பார்த் தேதுசொல்வார்
தூத்துக்குடி வெள்ளைக் காரர்வீட்டி லங்கே
தொண்ணூறு சாக்குப் பணமெடுத்தாய்?
மார்க்கமோ கும்பினிப் பொல்லாங்கு செய்தாய்பதில்
சொல்லென்று தானு மொழியலுற்ருர்
தீர்க்கமாய்க் கட்டபொம் மேந்திரதுரை பதில்
செய்திக ளேது மொழியலுற்ருன்
சேவுகர் சம்பளம் செல்லா மல்படிச்
செலவுக் கில்லாமல் முட்டாச்சு
பாவங்கள் வந்தால் வரட்டுமென்று நானும்
பண்பாய்க் கொள்ளை யடித்தேனென்ருன்
அந்தநல் வேளையில் கவர்னர் துரைகளும்
ஆகட்டும் சொல்கிறேன் பாகியென்ருன்

## துரைகள், எட்டையாபுரத்து ஜமீனைக் கொள்ளை யடித்ததுபற்றிக் கேட்டல்

இந்த நல்லகுற்றம் இருக்கட்டும் பாகி
இன்ன மொருகுத்த மிருக்குதென்ருன்
மட்டுக் கடங்காத் துட்டத் தனங்களாய்
வண்டத் தனங்களாய்த் திண்டு முண்டாய்
எட்டையாபுரந்துரை ஜமீந்தாருட சீமையில்
ஏகமாய்க் கொள்ளை யடித்ததேன் ?
பட்டப் பகலிலே தீயைவைத்துப் பாகி
யெட்டு வணிகமுங் கொள்ளைகொண்டாய் ?
எண்ணைக்கு முண்டான காட்டு நாயக்கனூர்
எல்லைச் சதிரிலே மேய்ந்தமாட்டை

எண்ணூறு மாட்டையுங் கொள்ளைகொண் டாயிது
என்ன ஞாயமடா? பாகியென்ருன்
அருங்குளத்திலே கம்பஞ் சோலையிலே
அஞ்ஞூறு கட்டுக் கதிரெடுத்து
வர்மங்க ளாகவே கொள்ளை யடித்தாயே
மார்க்கமோ? கும்பினி யோக்கியமோ?
சத்துரு மோசங்கள் செய்தாயே அங்கே
தட்டைப் படப்பிலே தீப்போட்டாயே?
குத்தங் குறைகள் மெத்தச் செய்தாய் வலு
கும்பினிக் காயிதாத் தப்பிடுமோ?
ஞாயத் தாழ்வுகள் செய்யலாமோ? இது
ராச நீதிக்கு ஒழுங்காமோ?
காயிதாத் தப்பி நடக்கலாமோ? பாகி
கன்னக் களவுகள் செய்யலாமோ?
என்று துரைமார்கள் தான்கேழ்க்க அங்கே
நின்று கட்டபொம்மு ஏதுசொல்வான்

## துரைமார்களின் கேள்வி யனைத்துக்கும் கட்டபொம்மனின் வீரப்பதில்

நன்ருக நானுஞ் செய்யும்பயிர் களிலவன்
கன்றுக ளாட்சியை விட்டழித்தான்
அழிவு சேதங்க ளானதினு லய்யா
களவு கன்னங்கள் செய்யவில்லை
உழவுக் காட்டிலே வந்துதென்று மாட்டை
ஓட்டி உழுதே னெனவுரைத்தான்
காட்டு நாயக்கனூர் எல்லைச்சதிரி லேயென்
காட்டில் சேர்ந்த தட்டைப்படைப்பிலே
பூட்டக மாய்நெருப் பிட்டதவ னல்லால்
பொல்லாங்கு நான்செய்த தில்லையென்ருன்
அருங்கு ளத்திலே கம்பஞ் சோலைக்கதிர்
அஞ்நூறு கட்டு எடுக்கலாமோ?
ஒருகதி ராகிலும் நானெடுக்க வில்லை
உன்னுணை தப்பித மில்லையென்ருன்
அந்நேரஞ் செனரல் துரைமாரு மங்கே
அதிக கோபங்கொண் டேதுசொல்வான்

## துரைமார்கள் கட்டபொம்மனிடத்தில் ஏழு வருஷத்திய பாக்கியைக் கேட்டலும் அதற்கவன் பதிலிறுத்தலும்

இன்னொரு குற்ற மிருக்குதடா பாகி
யேழு வருஷத்துத் தோப்பருப்பணம்

வாழுங் கெவர்ன்மெண்டர் கேழ்க்க அந்த
மன்னன் கட்டபொம்மு ஏதுசொல்வான்
மழையுந் தண்ணியு மில்லாமல் குடி
வடக்கே தான் நாடிப் போச்சுதென்றான்
விளைவு மில்லைத் தழைவுமில்லைக் காடு
வீண்பாடாய்ப் போச்சுதென வுரைத்தான்
ஏழு வருஷமாய் மழையில்லாமல் காட்டில்
இட்ட விதையு முளையாமல்
தாளவாய்ப் போச்சுதே வெள்ளாண்மை குடி
தாவந்தஞ் சொல்ல முடியாது
வானஞ் செய்தக் கொடுமையி னலிந்த
மட்டும் விரோதங்கள் வந்துதென்றான்
ஆனதி னலிப்போக் கும்பினி யாரென்னை
ஆதரிக்க வேணு மென்றுரைத்தான்
கட்ட பொம்முதுரை வாக்கு மூலங்களைக்
கெட்டிக் காரத்துரை தான்கேட்டு
சட்ட திட்டமாய்ப் பார்த்துத் துரைகள்
சகல ஞாயமுந் தான்பார்த்து

## துரைமார்கள் கட்டபொம்மனை மன்னித்து விட்டு, பின்பு புகழ்ந்து பரிசுகள் கொடுத்தனுப்புதல்

கட்டப்பொம்மு துரை கெட்டிக் காரனுங்
கண்டதில்லை பாகி யென்றுரைத்தான்
மட்டுக் கடங்காத துஷ்டத்தனஞ் செய்தாய்
வரவ லபராத மாப்பென்றான்
இந்தத் தடவை மாப்புத்தந்தோம் பாகி
யென்றார் கெவுனர் மண்டர்துரை
சிந்தை மகிழ்ந்திடக் கட்டபொம்மு துரை
செய்திக ளேது மொழியலுற்றான்
பாஞ்சை நகரில் போய்ச்சேர்ந்து கிஸ்திப்
பணங்கள் தன்னை யனுப்புகிறேன்
வாஞ்சையா யுத்தர வாகவேணு மென்று
மார்க்கமாய்ச் செய்தி மொழிந்திடவே
பார்புகழ் செனரலும் மேஜரும் கர்னலும்
பாண்டியன் றன்னைப் புகழ்ந்துசொல்வான்
யாருந் துரைக்கு உனைப்போ லேசுத்த
வீரரு மெங்கு மிருக்கிறனோ ?
பரிக்கு நகுலன் துரைக்குச் சிரோமணி
பாண்டிய னீயென்று பேர்கொடுத்து

வரிசைப் பணிகளுந் தான்கொடுத்தார் முல்லை
மருமலர் வாசங் கமகமென

## கட்டபொம்மனைத் துரைச்சாணி புகழ்தல்

செனரல் பெண்சாதி துரைச்சாணி அதி
சீக்கிரம் முத்து மாலைபோட்டாள்
கர்னலைப் போலிருந்தப் பாஞ்சைப் பதிமன்னன்
கர்ண னுக்குநிக ராகுமென்றாள்
சம்பிரதாயஞ் செய்யுங் கட்டபொம்மு துரை
சமத்த னென்றாள் துரைச்சாணி
கும்பினி யார்க்கெல்லாம் பெற்றபிள்ளை யென்று
கோலா கலத்துரைச் சாணிசொல்ல

## சென்னையை விட்டுக் கட்டபொம்மு மீளுதல்

தங்கச் சிவிகை மேலேறித் துரைச்
சாமியுஞ் சேனைத் தளத்துடனே
சென்னப் பட்டணம் விட்டகன்று அங்கே
திருச்சி ராப்பள்ளி தான்கடந்து
மன்னன் புகழவே தொண்டைமான் பூமியில்
மார்க்கமாய்க் கூடி வழிநடந்து
அம்புவி யோர்கள் கம்பளத்தா னல்லஅங்கே
தானைய மாகத் தானிறங்கி
அம்புசெய்யும் பேரைத் தானெடுக்கித் துரை
அன்பா யிருக்கின்ற வேளையிலே
மன்னவன் பாஞ்சைப் பதியில் வந்தான்
கும்பினியாருட பேட்டி பெற்று
சம்பிரதாய மாக வந்திருக்கக் கதைச்
சமத்துங் கேளுங்கள் நல்லோரே!
அஷ்ட திசையும் புகழ்ந்திடவே துரை
அன்பா யிருக்கின்ற வேளையிலே
மெட்டுள்ள பாஞ்சைப் பதிதனக் குவந்த
விதியைச் சொல்கிறேன் கேளுங்கடி!

## கலியாண நிகழ்ச்சி

கட்டபொம்மு துரை தானுபதி அந்தக்
கங்கைக் குலாதிபன் பிள்ளைமகன்
சட்டஞ் செலுத்தும் பிரதானி நல்ல
தர்மவான் சுப்பிரமணி யப்பிள்ளை
தேசம் புகழ்மெய்க்கப் பூசைபண் ணும்நல்ல
தீரனுங் குமாரனும் பிள்ளைமகன்

வாசம் புகழ்மெத்த மால்தன் புத்திரன்
மன்னனுக் கேகலி யாணமென்று
பார்த்திபன் கட்டபொம் மேந்திரன் சமூகத்தில்
பாக்குவைத் தானந்தப் பிள்ளைமகன்
சாஸ்திர விதிப்படி தப்பாம லப்போ
தாட்டீகன் ஊமைத் துரைச்சாமி
என்னென்று மெத்தக் கேழ்க்கலுற் றான்மெள்ள
எடுத்தானே யந்தப் பிள்ளைமகன்
பிள்ளை மகன்பிர தானிப்பிள்ளை மகன்
யுத்திக்கா ரன்மனப் புத்திக்காரன்
சன்னைக்கை களாகவே சொல்லலுற் றான்கைச்
சன்னைகள் போட்டு மொழியலுற்றான்
என்மகன் செல்வக் குமாரனுக் குச்செய்யும்
இஷ்ட முகூர்த்தம் வைத்திடவே
தென்பாஞ் சைப்பதி தென்தேச மிந்தச்
சீமைக்கெல் லாம்பாக்கு வைத்திடவே

## ஊமைத்துரை திருநெல்வேலியில் கொள்ளையடித்தல்

நல்ல முகூர்த்தம் வைப்பதற் குக்கூலி
நாலாயிரம் பொன்னும் வேணுமென்றான்
செல்வக் கலியாணஞ் செய்வதற்கு இப்போச்
சீரகச் சம்பாநெல் வேணுமென்றான்
அப்போது ஊமைத் துரைக்கல் லோ
அதிக சந்தோஷ மாச்சு தென்று
முப்பது நாப்பது வண்டி தயார்தயார்
முன்னூறு நானூறு மாடுதயார்
எருமை மாடுகள் எத்தனையோ பொதி
யேத்துங் கோணி யெத்தனையோ
காரியக் காரர் பிள்ளைம கனுக்குக்
கன்னிக் கலியாணஞ் செய்வதற்குச்
சேஷக வீரரைச் சேகரித் தான்சுவாமி
செல்வன் ஊமைத்துரைக் கேயுரைத்தான்
தேவமார் சேருவைக் காரருட னங்கே
சேர்ந்தார் திருநெல் வேலிநகர்
திருநெல் வேலிச் சில்லா நகரிலதைச்
சேர்ந்த கருசக் கொட்டாரத்திலே
கருசக் கொட்டாரக் காவல்காரன் குப்பினிக்
காவல்காரன் சம்பிர தாயக்காரன்

தாவள மாகிய காவல்கா ரன்நல்ல
தலைமைக் காரனவன் நிலைமைக்காரன்
காவல்கா ரச்சங்கு தேவனையும் பூண்
கட்டிய கம்பா லடித்துக்கொன்றான்
கொட்டாரந் தன்னிலே கட்டி யிருந்திடுங்
கும்பினி யார்சீமை நெல்லையெல்லாம்
பட்டப் பகலிலே கொள்ளைகொண் டான்வெளிப்
பட்டரை நெல்லையுங் கொள்ளைகொண்டான்
ஆயிரத் தைஞ்னூறு கோட்டைநெல்லை அரை
நாழிகையில் வாரிக் கொள்ளைகொண்டான்

## ஊமைத்துரை, கும்பினிக்கு வரிகொடாமல் இருந்ததற்குக் காரணம் கூறல்

பாயும் புலிபோல ஊமைத் துரைவீர
பாண்டியன் சமத்துக் கேதுசொல்வேன்
வானம் பொழிந்தது பூமி விளைந்தது
மன்னவன் கும்பினிக் கேன்கொடுப்பேன் ?
சீனிச்சம் பாநெல் லேன்கொடுப் பேன்னல்ல
சீரகச் சம்பாநெல் லேன்கொடுப்பேன் ?
தானிய தவசமும் ஏன்கொடுப் பேன்நம்மள்
சாமியே ராச தம்பிரானே ?
நானும் உழுது விரைக்கும் போதுஅவன்
தானும் உழவுக்கு வந்தானே ?
உழவு துரைக்கு வந்தானே நம்மள்
உழவெ ருதுகள் மேய்த்தானே ?
களைமுளை களெடுத் தானே ? இப்போ
கஞ்சித் தண்ணிக்குக் கொடுத்தானே ?
சனமோ ? சாதியோ ? கும்பினி யான்நம்மள்
சம்மந்தக் காரனே ? கும்பினியான்
மனது போல நடப்பானே நம்மள்
மச்சானே ? தம்பி கிச்சானே ?
என்னைப்போல் வெள்ளாண்மை யிட்டதாரு ? துரை
என்ன உபகாரஞ் செய்திருக்கான் ?
மன்னவன் கும்பினி வந்தாக்கால் கிஸ்தி
வாள்முனை யில்பணந் தாரனென்றான்
குலவைச் சத்தங்க ளிடுமென்றான் நெல்லைக்
கோணிச் சாக்கிலே பிடியென்றான்
செலவுக்கு நெல்பத் தாது அதி
சீக்கிரம் வண்டியி லேத்துமென்றான்

சம்பா நெல்லைச் சரிபார்த் தானல்ல
 தானியத் தவசமும் பொதிபிடித்தான்
செம்பாதி ராத்திரி செல்லுமட்டும் பெரும்
 நெல்லைச் சேருவழி கொள்ளையிட்டான்
சீரகச் சம்பாநெல் செறுவில் கட்டிய
 சித்திரக் காலிநெல் பொத்தவெள்ளை
வாரிவாரி நெல்லைக் கொள்ளையிட்டு அந்த
 மன்னன் ஊமைத்துரை யென்னசொல்வான்
இன்னஞ் செலவுக்குப் பத்தாது நெல்லு
 எங்கே இருக்குது இப்போது ?
கன்னிக் கலியாணஞ் செய்வதற்கு நெல்லைக்
 கண்ட விடமெல்லாங் கொள்ளைகொண்டு

## ஊமைத்துரை தூத்துக்குடியில் கொள்ளை கொள்ளல்

தூத்துக் குடிநெல்லு கொள்ளை வெடி
 தோட்ட மருந்துகள் கொள்ளைகொண்டு
காத்தி ருந்திடுங் கும்பினி யார்காவல்
 காரனையும் பூசை தான்கொடுத்து
கும்பினி யார்சீமை நெல்லையெல் லாஞ்சரி
 கொண்டா னந்தக் கம்பளத்தான்

## பிற்கட்டு மேஜர் சென்னைக்குச் சென்று கூக்குரலிடல்

கும்பினி யார்பேரி லாணையிட்டா னந்த
 கொள்ளை யடித்திடும் பிற்கட்டரும்
கும்பினி யானை தலைக்குமே லேயென்று
 கொள்ளைகொண் டானந்தக் கம்பளத்தான்
கும்பினி யாருட பிற்கட்டு மேஜரும்
 கூக்குரல் போட்டானே பட்டணத்தில்
பட்டணத் துக்குப் போய்ச்சேர்ந் துதுரை
 பாங்கான வெள்ளைக் காரருடன்
சட்டம தாகக் கெவுனர் முன்பாகச்
 சந்திச்சுக் கொண்டானே பிற்கட்டருந்
தொப்பி கழற்றிச் சலாமுஞ் சொல்லி வர்மஞ்
 சொல்வானே தர்மத் துரைகளிடம்
எப்படி ராச்சிய மாளவந் தீரிப்போ
 எங்கெங்குங் கொள்ளையாய்ப் போச்சுதென்றான்

தென்பாஞ் சைப்பதி கம்பளத் தார்நம்மள்
கும்பினி யார்நெல்லைக் கொள்ளைகொண்டார்
வம்புக ளாகவே கொள்ளைகொண் டான்பாகி
மட்டுக் கடங்காத் துஷ்டனென்றான்
கொள்ளைக்காரன் வலுக் கம்பளத்தான் நம்மள்
கும்பினி ஆணையு மில்லையென்றான்
பிள்ளை மகனாக வேவந்த கொள்ளையென்று
பிற்கட்டு மேஜ ருரைத்திடவே
வல்லமை யாகவே ஜெனரல் துரையுமே
மார்க்கமாய்ச் சேதிகள் தான்கேட்டு

## சென்னை-ஜெனரல் துரையவர்களின் கோபம்

நல்லது நல்லது பாகியென் றான்பல்லை
நறநறென்று கடித்துச் சொல்வான்
கட்டப் பொம்மனுட துஷ்டத் தனங்களைக்
கண்ணாலே பார்க்கவேணு மாதரிச்சோ
கட்டாய மிராசுக்கோல் சன்னபிற் பீச்சென்று
கட்டபொம்மு வலு துஷ்டனாச்சு
எட்டு நாளைக்குள் விசாரணையை வைத்துத்
துஷ்ட்டு விலங்கி லடித்திடுவேன்
சிந்தை கலங்காமல் கம்பளத் தான்நம்மள்
சீமையில் கொள்ளை யடித்ததினால்

## ஜெனரல் துரை கட்டபொம்மனுக்கு விரைவுக் கடிதம் அனுப்புதல்

இந்த விசாரணைக்கு வரச்சடுதியில்
எழுதிப் போட்டானே காயிதமும்
காயிதம் வந்துதே பாஞ்சைப் பதிதுரை
கட்டபொம் முபிர தானியிடம்
தாக்கீதை யாய்வந்த கும்பினிக் காயிதம்
தள்ளிவைத் தானந்தக் கட்டபொம்மு
ஊமைத் துரைவீர பாண்டியனும் நெல்லை
ஒருமிக்க வாரிக் கொள்ளைகொண்டு
தாமதஞ் செய்யாமல் பாஞ்சைப் பதிவந்து
சாவல் கட்டிவிளை யாடுவராம்
சீரு சந்தனப் பூச்சுக்க ளுந்தம்பி
கச்சித மானகை வீச்சுகளும்
ஊருக்கு மேற்கே எந்தப் புளியிலே
ஊமைத் துரையுட காவல்கட்டும்

வில்லுங் கையுமாய் திரிவதுவும் வரி
வேங்கைப் புலிபோல் வருவதுவும்
மல்லிகை முல்லே முடிப்பதுவும் ஒரு
வரிசையாய் கும்மி யடிப்பதுவும்
வேடிக்கை யாய்க்கொலு விருப்பதுவும் சபை
விஸ்தார மாய்ப்பதம் படிப்பதுவும்
ஆடி ஆவணி மாதத்தையில் சபை
கூடி ஊமைத்துரை சமூகத்தில்
நமக்கெதிரிக ளில்லே யென்று பாஞ்சை
நாட்டரசன் கொலு வீத்திருந்தான்
கமிட்டி மார்க்கமாய் கும்பினிக் காயிதங்
கண்டு ஏதுக்குக் கெவர்மெண்டர்
என்னென்ன யோசனே செய்யலுற் ருரங்கே
என்னென்ன கோப மெடுத்துரைத்தார்
சின்னத் தனஞ்செய்தான் கம்பளத் தானவன்
சொன்னசொல் தப்பினுன் மாதிரிச்சோ
புத்தியில் லாமலே கொள்ளேயிட் டான்கட்ட
பொம்முதுரை யிங்கே வரும்படியாய்
எத்தனே நாளாச்சு காயிதங்கள் போட்டு
இன்னம் வரக்காண மாதரிச்சோ
சத்துரு வானுனே கம்பளத்தா னவன்
சமத்து ஞலே நிராகரித்தான்

## கும்பினிப்பட்டாளம் ஒன்றுகூடுதல்

அத்தரிப் பானிச்சோ மாதரிச்சோ லவண்டி
ஆகட்டும் ஆகட்டும் இருக்கட்டும்
கத்தி வெடிகளும் கட்டாரி ஈட்டிகள்
கையி லெடுத்துத் தயார்செய்யு மென்ருன்
பத்தி யெழும்புஞ் சவாரியென் ருன ந்தப்
பாஞ்சைப் பதியிலே தீரனென்ருன்
எந்தெந்தத் தேசங்கள் எந்தெந்தக் கெடிக்கி
எழுதிப் போட்டானே காயிதமும்
அந்தந்தக் கெடிக்கி கும்பினிப் பட்டாளம்
ஆச ராகவந்து கூடியதே
கிண்ணிப் பட்டாளம் வருகுதே வரு
திரண்டப் பட்டாளம் பெருகுதே
எண்ணத் தொலேயாத பட்டாள மங்கே
ஏகமாய் வருகுதே மெட்டாக
மின்வெட்டி மின்னலர்ந் தாப்போல் வலு
மேகசஞ் சாரங்கள் கூடிஞப்போல்

விண்ணில் மழைகள் பொழிந்தாப் போலங்கே
மேன்மேலும் வெள்ளங்கள் வந்தாப்போல்
சென்றல் கெவுனர்கள் யோசனை யால்துரை
சொன்ன மொழிப்படி தப்பாமல்
சின்னப் பிரப்பனும் பெரிய பிரப்பனுஞ்
செம்புக் கத்திக்கள்ளன் பொட்டிலானும்
மக்கா ளித்துரை பட்டனுஞ் சாமி
மக்கா ளித்துரை வறட்டனும்
எக்களிப் பாகவே நெருக்குகிருன் ஒரு
மிக்கச் சவாரிகள் புறப்பட்டான்
சாதி வெள்ளைக் காரர் மாதரிக்காரர்
சட்டைக்காரர் சோல்சர் கெட்டிக்காரர்
பூத கணம்போல சோல்சர் வெள்ளைக்காரர்
போதை லாகிறிகள் நடத்திக்கொண்டு

## வெள்ளையர்கள் தோற்ற வருணனை

மலைக்காடு போல தலைங்களாம் பனை
மரங்கள் போலவே கைகளாம்
கலைக் கொம்புபோ லுதடுகளாம் பருங்
கத்தரிக் காய்போல விழிகளாம்
விழிகள் பூனை விழிகளாம் அவர்
மூஞ்சி முகஞ்சுத்த வெள்ளைகளாம்
குழிதாளி போல வயறுகளாம் பருங்
குண்டு மலைபோல புயங்களாம்
சாராய வெறிக் குணங்களாஞ் சுத்துக்
காராயிரம் பேரும் சோல்சர்களாம்
சூராதி சூரர்கள் வீரர்களாம் ஒரு
சொல்லுக் கடங்காத கோபிகளாம்
பறட்டைச் செம்பட்டை மயிர்களாம் வலு
பருபருத்திடுங் கோபிகளாம்
உருட்டி விழித்துப் பார்த்திட்டார் வலு
முரட்டுச் சோல்சர் புறப்பட்டார்
மல்லர்கள் சோல்சர்கள் எல்லோரும் ஒரு
மாதரியாய் சாதிக் காரர்களும்
அல்லாப் பாதந் துணையெனவே அசல்
பட்டாணி மார்க ளனைவோரும்
கல்லுவெடிக ளெடுத்துக் கொண்டா ரவர்
காலிலே பாப்பாசு மாட்டிக்கொண்டார்
சொல்லுக் கடங்காத சோல்சர்கள் மேஜர்கள்
புல்லாங் குழல்காரர் வல்லவர்கள்

காடு தாங்கிகளுந் தொட்டுக்கொண் டார்நல்ல
காங்கு சட்டைகளும் போட்டுக்கொண்டார்
சோடுசோ டாகவே சேர்ந்துகொண் டார்நல்ல
சோடு தாரிகளு மாட்டிக்கொண்டார்
உச்சியில் குல்லா வைத்துக்கொண்டார் வெகு
உச்சாய மாகவே தானணிந்தார்
பச்சைத் தலைப்பாகைக் கட்டிக்கொண் டார்தம்பி
பாஞ்சால நாடு சவாரியென்றார்
குதிரைப் படையும் நெருங்கவே யிரண்டு
கூளைவா லானைய வலங்கவே
கருநீலப் பரிசீனி வைத்தான் வறக்
காலன் துரையுமே பயணம்வைத்தான்
காங்குக் கூடாரம் பாங்குடன் பச்சைக்
கருத்தக் கூடாரஞ் சிறப்புடன்
வாங்காச் சத்தமுங் கூவெனவே வெகு
வரிசைத் தம்பூ ரடித்திடவே
மேசைப் பலகைகள் தூக்கவே தினம்
மேன்மேலுஞ் சீமைகள் சேர்க்கவே
சீசாப் பொட்டிகள் தூக்கவே நல்ல
சீனிச் சாராயம் பெருக்கவே
கோதும்பை ரொட்டிகள் கனக்கவே நெய்க்
குடங்கள் தன்னையு மெடுக்கவே
வாது சொல்லி வெளி யேறிவிட்டார் வலு
பூதங்கள் போலவே புறப்பட்டார்
வையகத் தார்சீனர் கோலப்ப ருடன்
வங்களர் சிங்களர் கொங்கணரும்
வாலத் துரைமாரும் வர்த்தகரும் ஒயில்
வண்டியி லேறி நடந்தனராம்
நாற்பது நாளைக்குள் பாஞ்சைப் பதியிலே
நாட்டுகிறேன் திசைக் கம்பமென்றான்
ராமபாண மென்ற பீரங்கி தன்னை
நாடி யெடுத்து நடந்தனராம்
பாசுபத மென்ற பீரங்கி தன்னைப்
பத்துப் பதினைந்து பேரிழுத்தார்
வாசித மென்றொரு பீரங்கி அங்கே
வருகுதே கட்டபொம் மேந்திரன்மேல்
கூளை யானையு முச்சிதமாய் வழி
கூடி நடக்கவே முக்கியமாய்
பாளைத் தம்பூரு முழங்கவே நல்ல
வேழு துரைமாருந் துலங்கவே

பாளையம் வரதைப் பார்த்தனராம் அங்கே
பாயும் புலிபோல சீறினராம்
அந்நேரம் கட்டபொம் மேந்திர துரை அங்கே
என்னென்ன யோசனை சொல்லுவராம்
மின்வெட்டி போலவே தோணுதென்றார் அங்கே
மேன்மேலும் பாளையம் வருகுதென்றான்
கிழக்கே பார்த்தாலும் பட்டாளம் இப்போ
கீழ்க்கடல் பொங்குதே பட்டாளம்
தெற்கே பார்த்தாலும் பட்டாளம் இப்போ
தென்கடல் பொங்குதே பட்டாளம்
வடக்கே மேற்கே பார்த்தாலுஞ் சுத்தி
வளைந்து கொண்டுதே பட்டாளம்

## கட்டபொம்மன் கும்பினிப்பட்டாளத்தைக் கண்டு ஆலோசித்தல்

கடல்வெள்ளம் போலே தோன்றுதென்றான் தம்பி
கண்கொள்ளாச் சேனை வருகுதென்றான்
கோட்டையி லேசன மில்லையென்று வீரியங்
கூறினனே கட்ட பொம்முதுரை
வேட்டை ரணவேட்டை யாடலா மப்போ
வேந்தன் சிவத்தையா தானுரைத்தான்
சக்தி வளர்சக்க தேவியம் மாளுக்குத்
தான்பலி யாகக் கொடுத்திடலாம்
என்று சிவத்தையா சொல்லிடவே சபா
சென்று கட்டபொம்மு ராசதுரை
இன்று மலைபோல் கொலுவிருக்கச் சபை
கூடிஆ லோசனை செய்திருக்க
கும்பினிப் பட்டாளம் மேஜரும் சோல்சருங்
கும்பு கும்பாக வெடிபிடித்து
கம்பளத் தான்கோட்டை யெங்கேயென்று அவன்
கும்புக ளாகவே தான்திரண்டு
மொட்டைப் பரும்பிலே தானேறி அங்கே
முன்னூறு குதிரைகள் தான்வரவே
பட்டாள மேஜரும் மெட்டாகத் தானும்
பாளையம் வந்து இறங்கினர்ராம்
கா(ஹா)லன்துரை வந்து சேர்ந்திடவே அதைக்
கம்பளத் தாரு மறிந்திடவே

## ஒருங்கே கும்பினிப்பட்டாளத்தை, கம்பளத் தார்கூட்டம் வேட்டையாட எழும்புதல்

ஞாலம் புகழ்சித்ர மேடையிலே அசல்
நாட்டரசன் சபை கூடினராம்
சக்கதேவி கோவில் முன்பாக அங்கே
சகல பேர்களும் அன்பாக
உத்த சிவத்தையா கட்டபொம்மு துரை
ஊமைத் துரையுங் கொலுவிருக்க
சின்னத் தளவாய் பெரியத் தளவாயுஞ்
செல்வன் சிவத்தையா முத்தையாவும்
மன்னன் குமாரு தளவாயும் நல்ல
மாப்பிள்ளை நாயக்கர் மாருடனே
வில்லுறுதிக் காரர் வீரர்களும் நல்ல
வேடப் பட்டித்துரை மன்னர்களும்
சொல்லுறுதிக் காரர் சேவகரும் நல்ல
சுத்த வீரர்க ளனைவோரும்
செல்லத் துரைமக்கள் நல்லத் துரைமக்கள்
சில்லவார் தேர்க்குல வார்க்குலமும்
வல்லமைக் கார(ர)னைவோரும் ஒரு
வரிசை யாகவே வந்தனராம்
ஒன்றுபோ லேசோமன் கட்டினராம் உறு
மாலுங்கட்டிச் சுங்கு விட்டனராம்
புனுகு சந்தனப் பொட்டணிந்தான் கடைக்
கண்ணுக்கு மையிட்டுத் தான்மகிழ்ந்தான்
அந்தக் கடையங்கள் முன்கை முதாரி
அணிந்தார் தங்க முருகுடனே
மெட்டுக ளாகவே கட்டபொம்மு துரை
விஸ்தார மாகக் கொலுவிருக்க
பட்டாளம் வந்ததைப் பாருமென்றார் கொள்ளைப்
படை குருவிபோல் தோணுதென்பார்
சேவுகர் சேரத் தயாரென்றான் அதி
சீக்கிரம் வேட்டைக் கெழும்பு மென்றான்
காவல் காரன்மகன் வெள்ளையன் தான்வரக்
காணமே யென்ன தாமதந்தான்
என்னதா மிதமென்று சொல்லித் துரை
மன்னன் கட்டபொம்மு தான்கேழ்க்க
அந்நேரஞ் சுந்தர லிங்கமுந் தானங்கே
அதிக சடுதியில் தானோடி
வேக முடனே நடந்தானே பாதர்
வெள்ளையன் வீட்டிலில் சென்றானே

போகவேணும் பாதர்வெள்ளையன் தான்தலை
முழுகி நித்திரை போனானே
காவல்கா ரன்மகன் நித்திரையை நம்மள்
கைகொண் டெழுப்பவுங் கூடாது
கோபங்க ளாக வெழும்பிடுவான் ஒரு
குத்தினாலே குத்திக் கொன்றிடுவான்
கத்தி தலைமாட்டி லிருக்குதென்று னிந்தக்
காவல்காரன் வெகு கோபியென்றான்
புத்தி கெட்டுப்போய் வந்ததென் றான்கட்ட
பொம்மு துரைக்கேது சொல்வேனென்றான்
கிட்டவே நின்று வெழுப்பக்கூ டாதென்று
வெட்டாத அட்டத்தில் நின்றுகொண்டு
மட்டுக் கடங்காக் காளையைத்தான் சோளத்
தட்டையினால் தட்டி யெழுப்பினான்
காவல்கா ரன்மகன் எழும்பவே இரு
கண்கள் ரெண்டும் பொறிபறக்கவே
சேவக சுந்தர லிங்கமே! வந்து
செய்தியைச் சொல்லடா சிங்கமே !
சிங்கமே சொல்லென்று கேழ்க்கவுஞ் சுந்தர
லிங்கமுஞ் செய்திக ளுரைக்கவே

## வெள்ளையத்தேவன் மனைவி, அவனுக்குச் சோறு போடுதல்

பொங்க முடனந்தப் பாதரு வெள்ளையன்
மங்கையைச் சாதங்கொண் டாருமென்றான்
காவல்கா ரன்மகன் வெள்ளையன் பெண்சாதி
பூவிலு மெல்லிய கற்புடையாள்
சீவுகும் பாலினில் சோறுக ளாங்கறி
சீருட னேகோழிச் சாறுகளாம்
சர்க்கரை சீனிகற் கண்டுகளுங் கனி
வர்க்க வகைபல காரங்களும்
வர்க்க வகைகள் வெகுபொறி கறியும்கது
வாலி உடுப்பு பொறிக்கறியும்
முப்பாலுஞ் சர்க்கரை தேனமுதும் நல்ல
கற்புள்ள மங்கை படைத்தனளாம்
வஸ்துக்க ளாஞ்சத்திப் பூசைக ளாமது
மாமிச வான்கோழி முட்டைகளாம்
சித்த மகிழ்ந்து படைத்தனளா மவள்
சீக்கிரம் சாப்பிட் டெழும்பினராம்

பட்டுக் கரைச்சோமன் கட்டலுற் றுனல்ல
பாகு தலைப்பாகு வைக்கலுற்றுன்
சட்டம் புனுகு சவாதணிந் தான்வெகு
திட்டமாய்த் திலத மை யணிந்தான்
கீறு சந்தனம் பூசின ராம்எங்கும்
பேர்பெற்ற பாதரு வெள்ளையன்தான்
மார்பில் பதக்கம் புனைந்தனரா மப்போ
மாயன்கோ தண்டவில் லெடுத்தனராம்
கண்டி காப்பணி துலங்கவே தம்பி
கைதனில் வில்லுக ளிலங்கவே
கொண்டைக்குப் பிச்சிப்பூ முடிக்கின்றுன் மரிக்
கொழுந்து காதினி லிடுகின்றுன்
வெள்ளிப் பிடித்த சமுதாடும் வெகு
விஸ்தார முள்ள வளைதடியும்
உள்ளாயு தங்கைதனி லெடுக்கிறுன் வெகு
உச்சித மாகவே நடக்கிறுன்
கச்சை யிறுக்கியே கட்டுகிறுன் கிடை
கட்டுகிறுன் தொடை தட்டுகிறுன்
கெர்ச்சிதஞ் செய்தல்லோ புறப்பட்டான் வெள்ளை
கில்லிலி யென்றே குலவையிட்டான்
கட்டாதக் காளை புறப்படவே அப்போ
கண்டபேர் பின்னுக்குத் தான்விலக
மெட்டுள்ள வெள்ளை புறப்படவே காளை
மீசை படபடென் றுடிடவே

## காகம் குறுக்கிடுதல்

காவல்கா ரன்மகன் வெள்ளை புறப்பட்டான்
காகமுங் கட்டிக் குறுக்கிட்டதே
குடித்த செம்புந்தான் தவறுதே நல்ல
மாதேவி தானு மறிந்திடவே

## வெள்ளையத்தேவன் மனைவி சகுனங்கண்டு, போகாதே யென்று தடுத்தல்

காவல்கா ரன்மகன் வெள்ளையன் பெண்சாதி
பூவிலு மெல்லிய கற்புடையாள்
வண்டணி பூங்குழல் மாதரசி யவள்
கண்ட சகுன விரோதங்கள்

சண்டைக்குப் போகவுங் கூடாது நான்
கண்ட சகுனங்கள் பொல்லாது
இன்றைக்கு உன்னை யிழந்தே னென்ருள் நான்
என்றைக்குக் காண்பேனே வென்றழுதாள்
என்றவள் கையை நெறித்தனளாம் மங்கை
நின்று நெடுமூச்சுக் கொண்டனளாம்
வல்லவன் வெள்ளையன் பெண்சாதி மன
முருகிச் செய்திக ளேதுசொல்வாள்
பொல்லாத சொற்பனங் கண்டேனென்ரு ளிப்போ
போகாதே யென்று பின்தொடர்ந்தாள்
வழக்குச் சொல்ல மனந்துணிந்தாள் மண
வாளன் மடியைப் பிடித்திழுத்தாள்
குளிக்க மஞ்ச ளரைத்தேனென்ரு ளது
கொம்பானைக் கரிபோ லாச்சுதென்ருள்
நரிக்கொம்பு உமக் கிருக்குதோ இப்போ
சுருக்குட னேநீர் போகாதீர்
வாழைத் தோப்பு மழியக்கண்டேன் அய்யோ !
மல்லிகைப் பூவுங் கருகக் கண்டேன்
பாழு ராகவே போகக்கண்டே னிந்தப்
பாஞ்சை நகரு மழியக்கண்டேன்
கூந்தல் அவிழ்ந்து அலையக்கண்டேன் அப்போ
கொண்டையில் பூவுங் குலையக்கண்டேன்
ஆந்தை அலறி விழிக்கக்கண்டேன் ஒரு
அநியாயக் கூகை குளறக் கண்டேன்
இஞ்சிக் கிணறு இடியக்கண்டேன் நம்மள்
எலுமிச்சந் தோப்பு மழியக்கண்டேன்
மஞ்சள் கிணறு மழியக் கண்டே னம்மள்
மாமரத் தோப்பு மழியக்கண்டேன்
கோட்டைச் சிதறவுங் கொம்மை தகரவுங்
கொத்தான நெட்டு இடிந்திடவும்
நாட்டிலே மண்மாரி பெய்யக்கண்டேன் இந்த
நாடுவிட் டொருபெண் போகக் கண்டேன்
கீழ்க்கோட்டை வாச லோரத்திலே அரைக்
கீரைப் பாத்தியானத் தோட்டத்திலே
வேளையி லேகுண்டு தக(ர்)க்கக்கண்டே னங்கே
விழுக உன்தலை போகக்கண்டேன்
நயமுள்ள நம்மள் தானு பதியையும்
நாகலா புரத்திலே தூக்கக்கண்டேன்
கயத் தாத்திலே கட்டப் புளியிலே
கருத்தய்யா தலை தூக்கக்கண்டேன்

பட்டத் தானைமட்டும் போயிடவு மிந்தப்
பாஞ்சை நகரு மழிந்திடவும்
பிட்டுக்கு மண்சுமந் தாரறிய நானும்
பொல்லாத சொற்பனங் கண்டே னென்ருன்
காகங் கருகுதே யென்கணவா ! கரிக்
குருவி கட்டுதே யென்கணவா !
போகாதே போகாதே யென்சாமி ! நானும்
பொல்லாத சொற்பனங் கண்டே னென்ருள்
என்றந்தக் கன்னி யுரைத்திடவே அய்யோ
என்றவள் கையை நெறித்திடவே
இன்றைக்கு உன்னை யிழந்தேனென்ரு ளப்போ
என்னசொல்வான் பாதர் வெள்ளையனும்

## மனைவி தடையினுல், பாதர்வெள்ளையின் சபலமும் உறுதியும்

என்புத்தி கேட்பாரே கோடிலக்ஷம் நான்
பெண்புத்தி கேட்பேனே பாதர்வெள்ளை
அன்புடன் அன்னங் கொடுப்பவர்க்கு இப்போ
ஆபத்து வேளைக் குதவுதற்கு
போகவேண் டாமென்று சொன்னதினு லிந்த
லோகத்துக் கேற்குமோ பெண்ணரசே !
ஆகாத காலங்கள் வந்தாக்கா லிப்போச்
சாகாமல் தப்பவுங் கூடாது
சுத்தவீர னென்று பேரெடுத்து நம்மள்
கர்த்தனைக் காட்டிக் கொடுக்கலாமா ?
உயுத்த களத்துக்குப் போகாக்கால் நானுஞ்
சுத்த வீரனென்று பேரேது
போடிநீ யப்புறம் போடியென்ருன் வந்த
பொல்லாங்குக் கேபய மில்லையென்ருன்
கோடிப் பாம்புபோல் நின்ருடினுன் வலு
கொடிய வேங்கைபோலச் சீறினுன்
நல்லவள் சொல்வார்த்தைக் கேளாம லவளை
நில்லென்று சொல்லி நடந்தானே
வல்லமை யான புயங்கள் தட்டிஅங்கே
வந்தானே கட்டபொம் மேந்திரனிடம்
கட்டபொம் மேந்திரனைக் கண்டுகொண்டா னங்கே
கம்பளத் தாருடன் வந்துநின்ருன்
எட்டுத் திசையு மதிரும்படி புயந்
தட்டிச் சிலம்ப வரிசைசெய்தான்

மட்டுக் கடங்காத பாதரு வெள்ளையன்
கொட்டுக் கொட்டென்று குதிபோட்டான்
பட்டாளஞ் செய்தியைக் கேளுமையா அந்த
பாஞ்சை நகருத்து எல்லையிலே
நீரா விக்கரை மேடையிலே அங்கே
நிறுத்திப் பீரங்கிப் போடையிலே
வீரு வீருட பீரென்று வலு
மேகசஞ் சாரம் பொழிந்தாப்போல்
கோடை யிடிபோல் முழங்கிடுமாங் கோட்டை
கொத்தள மூலை தகர்ந்திடுமாம்
மாட கூடமணி மேடையிலே அங்கே
மதிலில் குண்டுகள் தைத்திடுமாம்
வாசல்கொத் தளத்தில் குண்டுகள் தைத்துச்சன்னல்
வழிகள் போலத் தெரிந்திடுமாம்
ஆசார வாச லசைந்திடுமாங் கோட்டை
வாசல் படிகள் தகர்ந்திடுமாம்
பக்கா ளித்துரை புத்திர னாகிய
கக்கிஷக் காரனுங் காலன்துரை
லெக்கை கெட்டியேற வேணுமென்று துரை
லக்கமா ரென்று வரும்போது
கோட்டைக்குள் நின்று கம்பளத்தார் சத்தே
குலவை யிட்டவர் சுட்டனராம்
கோட்டைக் கதவு தெரித்திடவே அங்கே
கூவென்று வந்துதே பட்டாளம்
பாளையம் வாரதைப் பார்த்து ஊமைத்துரை
பல்லை நறுநறென் றேகடித்தான்
வேளைக் குதவிய காவல்காரன் மகன்
வெள்ளையன் முன்னோடி யேகுதித்தான்
கம்பளத் தானொரு கும்பாக வலு
காரர்களும் ஒரு தெம்பாக
கும்பினி பாளயத் தூடேதான் வெள்ளை
கில்லிலி யென்றுகை போடலுற்றான்

## வெள்ளையத்தேவன் சண்டை

மறவர் குலத்தில் பிறந்த வெள்ளையன்
வயிரி போலப் பறந்தடிக்கிறான்
பாருபா ரென்றுகை முருக்குகி றானவன்
பல்லுக் கடித்தல்லோ நெருக்கிறான்
குடுகுடென் றல்லோ பாயுகிறான் ஈரல்
குலையிலே குத்திச் சாய்க்கிறான்

வானி லிடிபோல மழுக்குகிருன் சண்டை
வளக்கிருன் குத்திக் குவிக்கிருன்
ஏனோதா னிவன்செய்யும் சமத்துக்க ளதை
என்னென்று சொல்லுவேன் கன்னியரே!
பாணுத் தடிக ளெடுக்கிருன் தலே
மண்டை சிதறவே நொருக்குகிருன்
பாணி யென்று விழுவாருஞ் சிலர்
பட்டாளஞ் சேதமாய்ப் புரளுதே
எட்டியே குத்தி யிழுத்திடுவான் மணி
ஈரல் குலேயைச் சரித்திடுவான்
மட்டுக் கடங்காப் பாதரு வெள்ளேயன்
வட்டமிட் டாடுருன் கெட்டிகெட்டி
அப்போது கும்பினிப் பட்டாள மங்கே
யெப்படித் துப்பாக்கி சுட்டனராம்
துப்பாக்கிச் சத்தம் பரியவைத் தா(ன்)நா
னெப்படிச் சொல்லுவேன் தோழியரே!
தெற்குக் கோட்டைவாசல் கதவுகள் தானங்கே
திடுதி டெனவே சாய்ந்திடுமாம்
கிழக்கு மேற்கு வடக்கு வாசலங்கே
கிடுகி டெனவே சாய்ந்திடுமாம்
திக்கு விசையன் சிவத்தையா முத்தையா
சேர்ந்த அனேவோரும் அப்போது
உக்கிர மான புலிகுத்தி நாயக்கன்
உகந்த கம்பளச் சேருவையும்
கொக்குத் திரளிலே ராஜாளி பாய்ந்தாப்போல்
நொக்கு நொக்காகவே நொருக்குகிருன்
ஒக்கப்பன் கைதனே முருக்குகிருன் அங்கே
வாரபே ரைக்குத்தி மழுக்குகிருன்
தருகாமல் குத்தி முடுக்குகிரு னல்ல
சாதித் துரைகளேத் தகர்க்கிருன்
முறை(ர)ப் பறியே தகர்க்கிருன் தலே
மூளே சிதறவே நொருக்குகிருன்
மாட்டு மாட்டென்று பாஞ்சைப் பதிக்கோட்டை
அப்புறம் விரட்டு விரட்டுகிருன்
திடுதி டென்று அடிபோட்டு அடி
வேங்கைபோல் பாய்ந்தங்கே யுழைப்புகிருன்
ஊமைத்துரை கையைக் கடிக்கிருன் ஒரு
குத்துக்கு நால்பேரைக் குத்துகிருன்
வீமனேப் போல்தொடை தட்டுகிருன் படை
வெட்டுகிருன் தொடை தட்டுகிருன்

குதிரை மேலேறிக் கொள்ளுகிருன் குத்திக்
கொல்லுகிருன் தாவித் துள்ளுகிருன்
மதிய மாகுதே பொழுதென்ருன் படை
வருகு தென்ருன்கை விரசென்ருன்
எதிர வார வெதிரியைக் குத்தி
யிழுக்கிருன் வெடி முழக்குகிருன்
கதிரு முருக்கி விட்டாப்போ லங்கே
காலன் துரையுமே ஓடிவந்தான்
மின்ன லிடிகள் விழுந்தாப்போ லங்கே
மேகசஞ் சாரம் பொழிந்தாப்போல்
முன்னேறிக் கும்பினிப் பட்டாள மங்கே
சன்னல் மின்னல்வெடி முழங்கவே
புகைக்காடு மண்டி யெழும்பவே பொழு
தஸ்தமன மாகப் போகவே
திக்குத் திசையுந் தெரியாமல் துரை
தீன்தீ னென்ருனே கோட்டையின்மேல்
கோட்டையுங் கைவச மாச்சுதென்று சொல்லிக்
குலவை யிட்டானே காலன்துரை
தாட்டீகன் கும்பினி ஹாட்டன்துரை அங்கே
கோட்டைக்குள் வந்ததே காலன்துரை

## (ஹா)காலன்துரை குத்துண்டு மாளுதல்

காலன் துரைவார கக்கிஷத்தைக் கண்டு
காவல் காரன்மகன் வெள்ளையன்தான்
கட்ட மதிலை அணவுவைத் துத்துரை
காலனையுங் குத்திக் கொன்ருனே
சட்டமாய்க் காலன் துரையும்பட் டானென்று
சாய்ந்து முறிந்துதே பட்டாளம்
கிட்ட இருந்தக் குமரையா சின்னையா
கில்லிலி யென்று குலவையிட்டார்
நெட்டைவிட் டோடியே பட்டாள மங்கே
நெருங்கிச் செத்துதே பட்டாளம்

## ஹாக்கித் துரையால் வெள்ளையத்தேவன் குண்டுண்டு மாளுதல்

அந்தச் சமயத்திலே கண்டாங்கித் துரைக்கு
அதிக கோபங்கள் தானெழும்பி
முறிந்த பட்டாளந் தான்திருப்பி அங்கே
முன்னேறி வந்தானே துரையவனும்

முன்னேறி வந்தகண் டாக்கித் துரை
மூர்க்கமாய் குண்டு எழுப்பினராம்
காவல்கா ரன்மகன் நெத்தியைப் பார்த்தல்லோ
கண்டாங்கித் துரை சுட்டானே
கண்டத்தி லேநேரே குண்டுதைத்து அவன்
கைமேல் தானங்கே பட்டாச்சு
காலன் துரையுமே அங்கே பட்டானல்ல
காவல்கா ரன்மக னிங்கே பட்டான்
காலன் துரைபட்ட செய்திகண்டு அங்கே
கலங்கிப் போச்சுதே பட்டாளம்
எத்தனை சோல்சர்கள் பட்டாச்சு கன
சுத்த வீரர்கள் மடியலாச்சு
புத்தினில் ஈசலைப் போல்வந்தப் பட்டாளம்
பதறி அப்பாலே தான்போச்சு
பிரபல முடிவானக் கதையை நாங்கள்
மெல்லியரே! சொல்லக் கேளுங்களடி!
கருமுகில் போல மறவனுந் தம்பி
காவல்கா ரன்மகன் வெள்ளையனும்
காவல்கா ரன்மகன் பட்ட சம்பிரதாயங்
காரணஞ் சொல்கிறோங் கேளுங்கடி!
சாவு கேடுகள் வந்ததென்று சாதி
காவற் குணங்கி விழுந்தாப்போல்
மண்டி போட்டு உட்கார்ந்தானே யந்த
வாக்குள்ள வெள்ளையத் தேவனுந்தான்
கொண்டையில் பூவுங் குலைந்தனராம் தம்பி
குத்துக்கால் வைத்தங்கே சாய்ந்தனராம்
முழித்த முழித்தாப் போல்மேல் மீசை
முறுக்கியே விட்டாப் போல்
பழிகள் மோசங்கள் வந்துதென்று அந்தப்
பார்த்திபன் மண்டிதான் போட்டதுந்தான்
கத்தி வெடியும் பிடித்தாப்போல் பல்லைக்
கடித்து தட்டை மடித்தாப்போல்
செத்துஞ் சாகாதவன் போலேயல்லோ பாதர்
சிங்கம்போல் மண்டி போட்டிருந்தான்
அப்போது கும்பினிப் பட்டாளங் கிட்ட
அடுத்து வரவுந்தான் மாட்டாமல்
சிப்பாகி மார்களுஞ் சேரத் திரண்டவன்
சேவுகத் தன்மையைப் பார்த்தனராம்
காவல்கா ரன்மகன் வெள்ளை யிருப்பதைக்
கண்ணாலே பார்த்தங்கே யேதுசொல்வான்

பாவி பழிமோசஞ் செய்வானென்று சொல்லிப்
பட்டாளங் கிட்ட வரப்பயந்தார்

## ஊமைத்துரை, வெள்ளையத்தேவன் உடலை மார்போடணைத்து அலறியழுதல்

அப்போது ஊமைத் துரைதானு மங்கே
அதிக கோபங்கொண் டோடிவந்து
இப்படி வெள்ளையும் மோசம்போ னானென்று
எடுத்து மார்போடே தானணைத்து
கண்ணீர் தளும்பிக் கதறி யழுதவன்
கட்டபொம் மேந்திர னிடத்தில்வந்தான்

## கட்டபொம்மனும் அலறியழுதல்

மண்ணு முருக மனமுருக அவர்
வாய்விட் டலறி மனதுநொந்தார்
சீமைகள் பூமி யிழந்தாலும் நம்மள்
பாஞ்சை நகர மழிந்தாலும்
காமனைப் போலிந்த வெள்ளையத் தேவனை
கண்ணாலே யென்றைக்குக் காண்பேனோ !
வீரசூர னிந்த வெள்ளையத் தேவனை
வேட்டைக ளென்றைக்குக் காண்பேனோ !
கத்தி வெடிகளுங் கட்டாரி யீட்டிகள்
கையி லெடுத்துப் பிடித்தாக்கால்
சுத்தவீர சூர வெள்ளையத் தேவனும்
சொல்லிச் சபத முடிப்பானே
உயிர்த்துணை யான பாதரு வெள்ளையன்
உயுத்த களத்தில் மடிந்தானே
வயித்தைப் பற்றி யெரியுதென்றான் துரை
மன்னன் கட்டபொம்மு ராசனுந்தான்
நற்புள்ள பாதரு வெள்ளையனைத் தான்நான்
எப்போது காணவே போரேனென்றான்

## வெள்ளையத்தேவன் மரணத்துக்குச் சிவத்தையா முதலானோர் வருத்தம்

விற்பன முள்ள சிவத்தையா முத்தையா
வெள்ளையா சேர மனதுநொந்தார்
சேவுகத்தில் சுத்த வீரனடா வெங்குந்
தேடக் கிடையாத சூரனடா
காவல்கா ரன்மகன் பட்டுப்போனா னென்று
கம்பள மெல்லாங் கண்டுநொந்தார்

## வெள்ளையத்தேவன் மரணங்கேட்டு அவன் மனைவி யுத்தகளத்திற்கு ஏகுதல்

காவல்கா ரன்மகன் பட்ட செய்தியைக்
காதாரக் கேட்டு அவன்தேவி
வாயிலும் வயிற்றிலும் அறைந்துகொண்டு அவள்
மார்க்கா யுத்த களத்தில்வந்தாள்

## வெள்ளையத்தேவன் மனைவி அலறியழுதல்

தோகை மயில்போலே வாய்திறந்து அவள்
சொல்லி யழுவாளே யப்போது
நாயகன் மேலே யடித்து விழுந்தவள்
தாதன் செயலென்று தானறைந்து
என்ன செய்வேன்! பாவி யுன்னை நான் பிரிந்து
எப்படி பூமியில் நானிருப்பேன்!
முன்னாள் விதியின் படியிதுவோ! நம்மள்
முற்றிலுங் கூடியே வாழாமல்
பாதிநாளி லென்னை விட்டுப் பிரிந்துநீ
பரகதி சேரவு மென்விதியோ!
ஆதி அயன் எழுத்திதுவோ! நம்மள்
அனியாய முன்செய்த தீவினையோ!
அஞ்சன மையிட்டுச் செந்தூரப் பொட்டிட்டு
அழகில் மிகுந்தவ ளாயிருந்தேன்!
கொஞ்சிய வென்சாமி தன்னை யிழந்துநான்
கூகைபோ லாகவும் நாளாச்சே!
மஞ்ச ளிழந்தேன்! மணமிழந்தேன்! எந்தன்
மன்னவர் தன்னையும் தானிழந்தேன்!
பூவு மிழந்தேன்! புகழிழந்தேன்! எந்தன்
புண்ணியர் தன்னையுந் தானிழந்தேன்!
வாலைப் பிராயத்து மன்னரல்லோ!
வையகத்தில் சுத்த வீரரல்லோ! இந்த
ஆலைக் கரும்புபோல் நானுனே னய்யோ!
ஆதி சிவனுட கற்பனையோ!
கன்னப் பரிசையைத் தான்பார்ப்பாள் முன்
கலந்த வின்பத்தைத் தானினைப்பாள்
என்னசெய் வேனென்று மண்ணி லடித்து
ஏங்கியழுவாள்! பரதவிப்பாள்!
முகத்தோடு முகம் வைத்துக்கொண்டு அவள்
முத்த மிடுவாள்! மயங்கிடுவாள்!
பா(ய்)மரத்தில் காகம் போலானேன்! நான்
பாவிபெண் பிறந்த நேரபலன்!

எந்தச் சென்மத்தில் உந்தனைப் போலவே
　　என்றைக் காண்பேனோ ! என்சாமி !
வந்தனை செய்வாள் வயித்திலடிப்பாள் என்ன
　　மாயமோ! என்று சுழன்றிடுவாள் !
கையை யெடுத்து முகத்தில் வைப்பாள் என்
　　கண்ணான சாமியே! யென்றழுவாள் !
மெய்யெல்லாம் பதறுதே என்சாமி என
　　வேதனை பாராயோ ! யென்சாமி!
வாய் திறந்தோர் வார்த்தை சொல்லாயோ ! என்
　　வாடிய முகத்தைப் பாராயோ !
சொற்பனங் கண்டதைச் சொன்னதற்கு என்னைத்
　　தூரப்போ வென்று விரட்டினிரே!
விற்பனரே! யென்னைத் தனியே விட்டு நீர்
　　மீளாமல் போகவோ என்சாமி!

## வெள்ளையத்தேவன் மனைவிக்கு, கட்டபொம்மன் ஆதரவுமொழி கூறி அமர்த்துதல்.

என்றவள் தானு மழுதுகொண்டு அப்போ
　　ஏகியே கட்டபொம் மேந்திரனிடம்
நின்றவள் காலில் விழுந்தழுது அப்போ
　　நெடுமூச் செறிந்தாளே மங்கையரும்
அப்போது கட்டபொம் மேந்திர துரையுமே
　　ஆதர வாய்ச்செய்தி யேதுசொல்வார்
அழுத கண்ணீருந் தானமர்த்தித் துரை
　　யன்பான செய்திக ளேதுரைப்பார்
ஒன்றுக்கு மஞ்சாதே மங்கையரே! உன்
　　ஊழி விதிப்படி தானச்சு!
அய னெழுத்தையுந் தான்விலக்க இப்போ
　　யாராலும் ஆகாது பெண்ணரசே!
சங்கரன் அய்ய மெடுத்துண்டா னதைத்
　　தாரணி தன்னில்நீ கேளாயோ !
மங்கை யுடன்காடு சென்ருரே ! ராகவர்
　　மாதே யதைநீ யறியாயோ !
வேண்டும் நிதிகளும் தான்கொடுப்பேன் உமக்கு
　　மேன்மையாய்ச் செல்வமும் நான்தருவேன்
என்று அமர்த்தியே கட்டபொம்மு துரை
　　யேக மனதாகக் கொலுவிருந்தார்
அப்போது கற்புள்ள மங்கையரும்
　　அதிக விம்மல் பொருமலுடன்

சோர்ந்து மயங்கியே தானிருந்தாள்
சரீரச் சுறணை தெரியாமல்
மங்கை துயரத்தைச் சொல்வதற்கு எந்த
மன்னவ ராலு முடியாது!
ஆயிரம் நாவுள்ள ஆதிசேஷ ஞலும்
அறிந்து ரைக்கவுங் கூடாது!
விற்பன கன்னி மறுமுகம் பாராமல்
மேவி யிருந்த ததனுலும்
அன்றிலும் பேடும்போல் சோடுபிரி யாமல்
அவர்க ளிருந்த நிறையாலும்
சந்திர மதியைப்போல் வாய்திறந்து அப்போத்
தானழு தாளந்த மங்கையரும்
மண்ணு மலையு முருகிடவே அவள்
வாய்விட் டலறி மனதுநொந்தாள்
கம்பளத் தார்களுந் தானிடைந்தா ரவர்
அவர் விதிகளை நொந்துகொண்டார்

## யுத்தகளத்தில் இறந்தவர்களை இருமுனையரும் அடக்கஞ் செய்தல்

தப்பாமல் சண்டை முனையில் சென்னபேரைத்
தானடக்கஞ் செய்ய வேணுமென்ருன்
கும்பினி யார்களுங் கம்பளத் தார்களுங்
கூவென்று வெள்ளைகள் வீசிக்கொண்டு
நம்புத லாகவே பேசிக்கொண்டார் ஒரு
நாழிகைக்கு மன ராசியென்ருர்
அவரவர் பிணம் அவரவர் தானே
அன்புடன் வாரிச் சுமந்தனராம்
பலவித மாய்சில பிணங்களை அங்கே
பாழுங் கிணற்றில் போட்டு மேவினுர்கள்
தந்திரக் காரனும் பாதரு வெள்ளையைச்
சந்தனக் கட்டைமேல் வைத்தடுக்கி
செந்தணல் மூட்டிக் கொளுத்தினுர்க ளது
வெந்து நீராகவே போனபின்பு
கம்பளத் தார்களுங் கும்பாகக் கூடியே
கலந்து பேசிக்கொண்டே யிருந்தார்

## ஹாலன் துரை இறந்ததைக் கவர்னருக்குத் தெரிவித்தல்

கும்பினிப் பட்டாளம் பில்கட்டு மேஜரும்
கூடி யாலோசனை யாயிருந்தார்

வாலைப் பிராயத்துத் துரைமகன் ருனந்த
மன்ன னெருத்திக் கொருமகன்ருன்
காலன் துரைபட்ட செய்திக்கல்லோ அங்கே
காயிதம் போட்டானே பில்கட்டரும்

## கவர்னர், காயிதங்கண்டு கோபம்

செனரல் கெவுனர் சமூகத்திலே அதி
சீக்கிரங் காயிதஞ் சென்றிடவே
அன்றங்கே காயிதந் தான்பார்த்துக் கெவுனர்
அதிகக் கோபங்கள் தானெழும்பி
கையை யுதறிக் கடித்தார்கள் தொப்பிக்
கழற்றிக் கணீரென் றடித்தார்கள்
வையக மெங்கும் நடுங்கிடவே துரை
மார்களும் கோபம் படபடெனவே
என்ன யோசனைக ளின்னமென் பாரந்த
மன்னன் கட்டபொம்மு சகுனியென்பார்
சொன்ன வார்த்தைகேளாச் சுட்டி யென்பார்
சின்ன மனுஷன் வலு துட்டனென்பார்
பஞ்சபூமி யந்தப் பாஞ்சைப்பதி சொற்பப்
பாளையக் காரண்டா பாகியென்ருர்
கொஞ்சப் புத்திக்கார வஞ்சனென்பா ரவன்
கூட்டங் குலையநா ளாச்சுதென்பார்
தெற்குச் சீமைக்கொரு கட்டபொம்மு அவன்
சின்ன நவாபுபோல் தானுச்சு
சர்க்கோட் டுத்துரை நாமல்லவோ! நல்ல
சாதி வெள்ளைக்காரர் தானல்லவோ!
கருப்பு மனுஷன் கம்பளத் தானடா!
கட்டபொம்மு வலு துஷ்டனடா!
சொற்ப பாளையக் காரனுக்கு நாமள்
தோத்துப் போனதாயும் பேராச்சே!
மேசைப் பலகையி லிருக்கலாமா! அதன்
மேலேயுந் தீனிவைத்துத் திங்கலாமா!
காசி தேசமுத லாளலாமா நம்மள்
காலிலே பாப்பாசு போடலாமா!
திருச்சி னுபுரஞ் சென்ரல்புர மிந்தச்
சீமைகள் கட்டியே ஆளலாமா!
வர்மங்கள் செய்தானே கம்பளத் தானவன்
பெருமையாய் வம்பு தான்வளர்த்தான்!
கூக்குரல் சத்தங்கள் செய்தானே! ரொம்பக்
கும்பினிக்குப் பொல்லாங்கு செய்தானே!

தோக்குல வார்குலத் தொட்டியன் தான்வலு
துன்மார்க்கஞ் செய்தானே ! கம்பளத்தான்
சாதிவெள் ளைக்கார ராகலாமா ! நம்மள்
தலையில் டொப்பியை வைக்கலாமா !
மாதிரிச்சோ அவன் பாஞ்சை நகரத்தில்
வல்லமையைப் பார்ப்போ மென்றுசொல்லி

## சென்னையிலிருந்து அக்கினீசுத் துரை பாஞ்சைப் பதிக்குப் பட்டாளத்துடன் எழும்புதல்

வந்தபொல் லாங்குக்கு அக்கினி மேஜர்தான்
சிந்தை மகிழ்ந்து எழும்புமென்றான்
சுந்தர முள்ள துரைமார்க ளங்கே
சொன்ன மொழிப்படி தப்பாமல்
ஆயிரங் கும்பினிக் கோர்துரை மார்வலு
அக்கினி மேஜர் பயணம்வைத்தார்
ஆயிர மேஜரும் ஆயிரஞ் சோல்சரும்
ஆயிரங் கும்பினி மனுஷருடன்
கொண்டல் காதுப்போல் வீசிக்கொண்டு பாஞ்சைக்
கோட்டைக்குப் போகப் பயணமென்று
மண்டல மெங்கும் புகழ்ந்திடவே ஒயில்
வண்டியி லேறி நடந்திடவே
வாள்வீசு போலீசு மேலீசுத் துரைகள்
வைபோசி மட்டத்தில் சீனிவைத்துக்
காலிலே பாப்பாசு மாட்டிக்கொண்டார் வலு
கருப்புச் சட்டைகள் போட்டுக்கொண்டார்
கருப்புச் சட்டைகள் சிறப்பட்டார் வலு
காடு தாங்கிகள் முருக்கிட்டார்
துருப்புக் குதிரை சீனிவைத்தார் வலு
சோல்சர் துரைகள் சவாரிவைத்தார்
காங்குக் கூடாரந் தானெடுத்தார் பச்சைக்
கருத்தக் கூடாரந் தானெடுத்தார்
மூங்கில் கூடாரந் தானெடுத்தார் வெள்ளி
முருக்குக் கூடாரந் தானெடுத்தார்
மருந்துப் பத்தாயந் தானெடுத்தார் ஒயில்
வண்டியி லேற்றி நடக்கலுற்றார்
இருந்துப் பரிய மிருப்புக் குண்டுக
ளீயக் குண்டுகள் சேகரித்தார்

மேசைப் பலகைகள் யெடுக்கிறார்
சீசாப் பெட்டிகள் தூக்குகிறார்
தேசுகி வாசுகி கோட்டைக்கு முன்னுகச்
சீமைச் சாராயங் குடிக்கிறார்
காலன் துரையுமே கொன்றானே அந்தக்
கம்பளத்தான் வம்பு பார்ப்போமென்று
கோலகால மானக் கும்பினிப் பாளையம்
மேலூர்ப் பாதை வழிக்கூடி
எட்டு நாளைக்குள் பாஞ்சை நகரத்தில்
கோட்டை பரப்பிட வேணுமென்று

## பாஞ்சைக்கு கும்பினிப் பட்டாளம் அணிவகுத்துச் செல்லல்

கட்டாய மிருசுக்கோல் மட்டுக் கடங்காத
கட்டபொம்மு கோட்டை யெங்கேயென்று
பட்டாக் கத்திகள் வீசிக்கொண்டு அசல்
பட்டாளம் வருகுதே மெட்டாகக்
கட்டுள்ள பட்டாணி மாவுத்தமார் படை
வெட்டுத் துரைமக்கள் மாவுத்தமார்
விந்தைய தாய்க்குல்லா வைத்துக் கொண்டார்வெகு
வேடிக்கைப் பாப்பாசு மாட்டிக்கொண்டார்
பந்தயஞ் சொல்லி வெடியெடுத்து நல்ல
பட்டாணி மார்கள் நெருங்கிவந்தார்
கிண்ணிப் பட்டாளங் கிரண்டப் பட்டாளம்
கெர்ச்சித மாகவே முன்னடத்தி
கண்ணுக் கினிய துரைமார்க ளங்கே
முன்னேறி முன்னேறி வாரான்பார்
சோல்தார் அவுல்தார் மால்தாருந் நல்ல
சிப்பாகி மார்க ளனைவோரும்
மால்தார் நாயக்க மார்களு மங்கே
மாங்கிஷ மீன்களைத் தின்றனராம்
பாஞ்சை நகரத்தைப் பார்ப்போமென்று சொல்லிச்
சாஞ்சு வருகுதே பட்டாளம்
மூஞ்சியைப்பாரு வெள்ளை முகத்தைப்பாரு அவர்
மோடியைப் பாருங்கள் தோழியரே!
பாசு பதமென்ற பீரங்கி அதைப்
பார்த்தாலுங் கெர்ப்பங் கலங்கிடுமே
வாசித மென்றொரு பீரங்கி அங்கே
வருகுதே கட்டபொம் மேந்திரன்மேல்
பகை முடித்திட வேணுமென்று அங்கே
வகைவகை யாகவே பட்டாளம்

## முதலில், கும்பினியார் மதுரையின் வைகைக் கரையில் கூடாரமடித்தல்

தேசம் புகழ்கின்ற மதுரையில் பாளையம்
சென்று நெருங்கினர் வந்துநின்றார்
கூளப் பாளைய மாதரிச்சோ அங்கே
கும்பினிப் பாளையம் மாதரிச்சோ
வாழை பழுத்துக் கனிந்தோடு மந்த
வைகைக் கரைதனில் கூடாரம்
மதுரையில் பாளையஞ் செய்தனராம் துரை
மார்கள் சலிய விறங்கினராம்
சதுராகக் கூடாரந் தானடித்தா ரதில்
தானையமாத் துரை தீனியெடுத்தார்
மறுநா ளுதைய காலத்திலே துரை
மதுரை விட்டு வெளியேறி
பெரும்பாதை கூடிப் புறப்பட் டெங்கும்
பேர்பெற்ற அக்கினி மேஜர்துரை
தெற்குத் திசையிலே பாஞ்சால நாடென்று
தேடி வருகுதே பட்டாளம்
மேற்குத் திசையிலே பாஞ்சால நாடென்று
மேன்மேலும் வருகுதே பட்டாளம்

## இரண்டாவது கும்பினிப் பட்டாளம் கயத்தாறு, ஒட்டப்பிடாரம் வந்து கூடாரமடித்தல்

செயத்துடன் படைதான் துலங்கி அங்கே
கயத் தாற்றிலே வந்திறங்கி
கயத்தாறு விட்டு வெளியேறி அந்தக்
கட்டபொம்மன் கோட்டை யெங்கேயென்று
ஒட்டப் பிடாரத்தில் வந்திறங்கி அங்கே
ஒழுகு கூடாரந் தானடித்து
ஒன்பது கூடாரந் தானடித்து அங்கே
கும்பினிப் பாளையஞ் செய்திருந்தார்
அன்பான பாஞ்சைப் பதிக்கோட்டை அங்கே
கும்பினி மார்களுங் கண்டனராம்

## அக்கினீசுத் துரை, யுத்தம் நடந்ததும் காலன் பட்டதும் விவரமறிதல்

முன்னாலே தானைய மாயிருந்த துரை
மன்னவன் பில்கட்டு மேஜர்துரை
தன்னிமை யாகவே அக்கினி மேஜரைத்
தான்கண்டு அப்பால் சலாமுஞ்சொல்லி

எச்சரிக்கை யாக பில்கட்டு மேஜரும்
எடுத்துச் செய்திக ளேதுரைப்பான்
கடைசியாய்ப் பட்டாள முன்னடத்திக் கொண்டு
காலன் துரைவந்த செய்திகளும்
பாஞ்சைப் பதியிலே சண்டை செய்ததும்
பட்டாள மேஜ ரிறந்ததுவும்
மாஞ்சு மடிந்தும் பட்டாள மங்கே
வார்ப்பணித் துப்பாக்கிச் சுட்டதுவும்
மாட கூடமணி மேடையி லேமது
வாக்குள்ள தென்பாஞ்சைக் கோட்டையிலே
கோடை யிடிபோலே முழங்கும் பீரங்கி
குபீரென் றங்கே சுட்டதுவும்
குண்டு உதைத்து எழுந்ததுவு மதில்
கோடை யிடியா திருந்ததுவும்
சண்டைச் சமத்துக்கள் வந்ததுவும் படை
ஒன்றுக்கொன்று மல்லுக் கட்டியதும்
லெக்கை கட்டியங்கே யேறினதும் படை
நின்று சண்டைகள் செய்ததுவும்
கக்கிஷக் காரன் மக்களுடை யெட்டுத்துரை
காலன்துரை பட்ட செய்திகளும்
கம்பளத் தாருட வம்பு நடத்தையுங்
காவல்கா ரன்பட்டுப் போனதுவும்
சம்பிரதாய மாய்ச்சண்டை செய்ததெல் லாம்அந்தச்
சாதிவெள் ளைக்காரன் முன்பாக

## அக்கினீசுத் துரை, விவரமறிந்து வீரமொழி கூறுதல்

சொல்லி மொழிந்தானே பில்கட்டு மேஜரும்
சூரவா னேழு துரையுடனும்
நல்லதென்று சொல்லி அக்கினீசு மேஜரும்
பல்லைக் கடிந்தவ னேதுசொல்வான்
கேட்டீர்க ளோகட்ட பொம்முதுரை கெட்ட
நடத்தைக ளென்று சொல்லாதே
வீட்டிமை செய்தானே கம்பளத் தானவன்
கோட்டையில் பீரங்கி மாட்டுகிறேன்
ஆத்தரிச்சோ பானிச்சோ மாதரிச்சோ நாளை
ஆகட்டும் ஆகட்டும் இருக்கட்டும்
சத்த மேகம்போல் பொழிந்திடலா மவன்
சுத்த வீரத்தனம் பார்த்திடலாம்

பாஞ்சைப் பதிவிட்டுப் போனாலும் நாளை
நாட்டுகிறேன் பாஞ்சையில் கம்பமென்றான்

## பட்டாளத்தை அணிவகுத்து நிறுத்தல்

பாங்கான பாஞ்சைப் பதிக் கோட்டை
பரப்பியே நெட்டு மிடியாமல்
தீனிகளுந் தின்கின்ற தில்லையென்றான் சற்றுஞ்
சென்னி கவிழ்ந்து படுக்கே னென்றான்
வீரிய கோப மடங்கேனென் றனவன்
சீமைச் சாராயங்கள் ஊத்திக்கொண்டான்
பூராய மாகவே கஞ்சா அவனுடை
போதை லாகிறிகள் நடத்திக் கொண்டான்
அஸ்தமிச்ச வேளை யாச்சுதென்று துரை
அக்கினி மேஜர் ஆலோசனையாய்
விஸ்தார மாகவே கும்பினிப் பாளையம்
மெட்டுமெட் டாகவே தானிறுத்திக்
கும்பினி யாருட திட்ட வட்டங்களைக்
கோதையரே ! சொல்லக் கேளுங்கடி !
கம்பத் தார்களும் வம்புக் காரரென்று
கும்பினிப் பாராவுந் தானிறுத்திக்
கோட்டைக் கட்டுப்போலே சோல்சர் பட்டாளத்தைக்
கோலாகல மாகத் தானிறுத்தி
கட்டுமட் டாகவே பில்கட்டு மேஜரைக்
காட்டுப் பாருவாக முன்னிறுத்தி
நெட்டுக்கு நெட்டங்கே வட்டமிட் டாப்போலே
நெருங்கப் பட்டாளத்தைத் தானிறுத்தி
குதிரைக் கூட்டத்தை முன்னிறுத்தி நூறு
கும்பினிச் சனத்தைப் பின்னிறுத்திச்
சதுருட னேபல் லாயிரம் பேரையும்
தம்புருக் காரனை முன்னிறுத்திக்
கோடை யிடிபோலே குமுறும் பீரங்கி
மேடைக ளாகவே தானிறுத்தி
ஆடுகள் மாடுகள் தேடிய கோழிகள்
சோடு சோடாகவே தானமர்த்தி
அணிஅணி யாகவே சோல்சர்வெள் ளைக்காரர்
ஆயிரம் பேருஞ் சூழ்ந்திருக்கக்
கணிச மாகவே சாதி வெள்ளைக்காரர்
காங்குக் கூடாரத்தில் வீற்றிருக்க
பார்த்தீப அக்கினி மேஜர்துரை வலு
பட்டாள மேஜரைத் தான்பார்த்து

ராத்திரிக் காலங்க ளாச்சுதடா வென்று
சாஸ்திர வேதங்கள் தான்பார்த்து
நாலா ஆலோசனை பேசியல்லோ அங்கே
லாந்தர் விளக்குகள் தான்போட்டுக்
கோலா கலமாகச் கூடாரத் துக்குள்ளே
குத்து விளக்குகள் சுத்தி வைத்தார்
சுத்துக்குக் காத வழித்தூரம் யெங்குஞ்
சூழவே யேக வெளிச்சம் வைத்தார்
கெட்டிக் காரத்துரை அக்கினி மேஜருங்
கெர்ச்சித மாய்ச்சபை உச்சிதமாய்
மேஜைப் பலகைகள் தூக்கிவைப் பாரதன்
மேலேயுந் தீனிக ளெடுத்துவைப்பார்
சீசாப் பெட்டி யெடுத்துவைப்பார் அந்தச்
சீமைச் சாராய மெடுத்துவைப்பார்
கோதும்பை ரொட்டி குமித்துவைப்பார் நெய்க்
குடங்கள் வேண தெடுத்துவைத்தார்
சாதங் கறிகளும் போதவைத்தார் நல்ல
தவலைத் தண்ணீ ரெடுத்துவைப்பார்
சர்க்கரை சீனிகற் கண்டுகளும் ரச
வர்க்கப் பலகார முருக்குடனே
முக்கிய மான பதார்த்தங்களுங் கனி
வர்க்க வகைகளும் ரொம்பவைத்தார்
மாங்கனி தேங்கனி வாழைக் கனியுடன்
பாங்குள்ள ஆவின்பால் சீனியுடன்
தீனிக ளுண்ணுந் துரைமார்க ளங்கே
சீனிக் கண்ணுடியும் பார்த்தார்கள்
சீனிக் கண்ணுடித் தெளிவிலே தானிந்தச்
சீமைக ளெங்குந் தெரியுதென்ருன்
நானில மெங்குந் தெரியுதென்ருன் இந்த
நாடெல்லா மேக வெளிச்சமென்ருன்
ஏக வெளிச்சமா யிருக்குதென்ருன் கோட்டை
யிந்தாபார் கிட்டத் தெரியுதென்ருன்
காகம் போகாதக் கோட்டையி லேதிசைக்
கம்பங்கள் நாட்டலாந் தெம்பாகப்
பாருக்காரர் உஷாராய் நில்லு மெட்டுப்
பட்டாளமேஜர் உஷாராய் நில்லு
சாராய வெறி யேருமல் உஷார்
தப்பிதஞ் செய்யாமல் நேரே நில்லு
பாதிச் சாமங்க ளாச்சுதடா இன்னும்
பாதி நேரங்க ளிருக்குதடா

சூதுக் காரண்டா கம்பளத்தான் வலு
துஷ்டனடா கட்ட பொம்மனடா
மோசங்கள் செய்தாலுஞ் செய்வானே வலு
மோசக் காரனடா கம்பளத்தான்
வாசி நாயக்கன் அவுல்தார் சிமையதார்
நம்புத லாகவே நில்லுமென்றான்
கருப்புக் கண்டால் சுடுங்களென்றான் வெட்டிக்
கண்டதுண்டஞ் செய்து போடுமென்றான்
நெருப்பேறி யப்போ பொரிபறக்க வெடி
நெரித்துப் பீரங்கி தீருமென்றான்
எச்சரிக் கையாக நில்லுமென்ற அந்த
வேழு ஆலோசனை மால்துரைகள்
பச்சைத் தலைப்பாகை கட்டினபேர் சிலர்
பட்டாணி மார்களெல்லாம் பாஷைசொன்னார்
வம்பு வருமென்று அக்கினி மேஜரு
மன்னன் ஆலோசனை யாயிருந்தான்
கம்பளத் தான்சம்பிர தாயஞ்செய்யும் அந்தக்
கதையைக் கேளுங்கள் தோழியரே !
பண்பான கும்பினி வந்திருக்குதென்று
பயமும் அணுச்சற்று மில்லாமல்
சொக்கட்டான் சாரிகள் போடுவதும் வெற்றி
சொல்லி யேவிளை யாடுவதும்
வில்லுக ளெடுத்துத் தெரிப்பதுவுங் கல்லு
வெடிக ளெடுத்து நெரிப்பதுவும்
கொலுச் சிங்காரங்கள் செய்வோருங் கட்ட
பொம்மு துரையைத் தொழுவோரும்

## கட்டபொம்மன், பட்டாளம் படையெடுத்து வருவதை அறிதல்

அந்தநல் வேளையில் சுந்தர லிங்கமும்
அதிவீர மல்லு சேருவையுங்
கந்தன் பகடையும் வந்தானே துரை
கட்டபொம் மேந்திரனைக் கண்டானே
என்னென்று செய்தி சொல்லுகிறான் தம்பி
எக்களிப் பாய்ச்செய்தி விள்ளுகிறான்
சென்னப் பட்டணம் படைகுருவி யெல்லாஞ்
சேரத் திரண்டிங்கே வந்துதென்றான்
கணக்கில் லாப்படை குருவிக ளிங்கே
கம்மங் காட்டிலே விழுகுதென்றான்

இணக்க மில்லாதப் படைகுருவி நம்மள்
எல்லைப் புஞ்சையிலே விழுகுதென்றான்
கர்த்தனே! உத்தர வாகவேணும் நாங்கள்
சீக்கிரம் வேட்டைக ளாடவேணும்
படை குருவியைப் பாராமல் நம்மள்
பாஞ்சைப் பதியிலே இருக்கலாமோ?
விடை கொடுத்திட வேணுமையா! எங்கள்
மெய்யுறுதி தப்பிப் போகுதையோ!
வேட்டைக ளாடியே வாரமென்று சொல்லி
மெத்த வெகுமதி வாங்கிக்கொண்டார்

## பாளையக்காரர் கும்பினிப்படையை எதிர்க்கச் செல்லுதல்

ஈட்டிச் சமுதாடு தானெடுத்தார் பாஞ்சை
நாட்டையும் விட்டு வெளிநடந்தார்
கோட்டையும் விட்டு வெளியேறிப் பாதை
கூடி நடந்தானே மூணுபேரும்
பாட்டைச் சாரிகள் தானடந்தா ரங்கே
பட்டாளம் நிற்பதைக் கண்டனராம்
சுந்தர லிங்கமுங் கந்தன் பகடையும்
வீரமல்லு சேருவையுந் தான்கூடி
கால்தான் வைத்து நடந்தனராம் மெள்ளக்
குனிந்து குனிந்தங்கே போயினரா்ம்
பட்டாளம் நிற்பதைக் கண்டனராம் பாரா
மெட்டுகள் நிற்பதைக் கண்டனராம்

## பாளையக்காரர் கும்பினிப்படையைப் பார்த்துப் பேசிக்கொள்ளுதல்

பட்டப் பகல்போல் இருக்குதென்றான் அங்கே
பகல்வெத்தியைப் போலத் தோணுதென்றான்
கட்டுங் காவலா யிருக்குதென்றான் பாரா
மெட்டுமெட் டாகவே நிற்குதென்றான்
கிட்டவே போனால் சுடுவானே! ஒரு
வெட்டாகக் கத்தியால் வெட்டுவானே!
நின்று நெடுமூச்சுக் கொண்டனராம் அங்கே
நீட்டி நிமிர்ந்து படுத்தனராம்
அவரைச் செடிகளை அணைவுவைத் தார்தலை
அண்ணாந்துப் பார்த்துக்கொண் டேயிருந்தார்
தாவுகள் தானும் பரித்துக்கொண் டாரங்கே
தாவள மாகப் படுத்திருந்தார்

புலிகள் போலே படுத்துக்கொண் டார்மூணு
பேரும் புடவிலே தானிருந்தார்
எலிகள் போலே புடைத்தாலும் அங்கே
என்ன விதமாகப் போறதென்ருர்
நேராக நேராக மூன்றுபேருந் தப்பி
நீட்டி நிமிர்ந்தங்கே போனாலும்
பாராக் காரர் தடுப்பாரே! அந்தப்
பட்டாள மேஜர் சுடுவானே!
துரைக ளெல்லாம் விழித்திருக்கார் சோல்சர்
வெள்ளைக் காரர் சூழ்ந்திருக்கார்
திரைகடல் போல பட்டாள மிங்கே
சேரத் திரண்டல்லோ! வந்திருக்கான்
என்ன விதமாக நிற்கிருண்டா பாகி
யெச்சரிக் கையாக நிற்கிருண்டா
சின்னத் தனமா யிருக்குதடா நம்மள்
சேவுகத் தன்மைகள் என்ன?போடா
கம்பளத் தாரெல்லாஞ் சூழ்ந்திருக்க வங்கே
கட்டபொம்மு துரை சமூகத்தில்
சம்பிரதாயப் பேச்சுச் சொன்னமடா நம்மள்
சமத்துச் சொல்லியே வந்தமடா
சொல்லிய வீறு செலுத்தாமல் பாஞ்சைத்
துரை யிடத்திலே போகலாமோ?
வில்லெடுத்து வெளி யேறலாமோ? இந்த
வினை முகத்துக்கு அஞ்சலாமோ?
சண்டை சமத்துகள் செய்யாமல் நம்மள்
சற்றே ஒருகை பாராமல்
பெண்டுகள் சிரிக்கப் பாஞ்சைப் பதியிலே
பேசாமல் கூசாமல் போகலாமோ?
என்ன தையிரிய வான்களென்று அங்கே
எண்ணுரு னேபல யோசனைகள்
அந்நேர மக்கினி மேஜர்துரை யங்கே
ஆக்கினைச் சக்கரப் படியாலே
மின்ன லிடிபோல பீரங்கிச் சத்தம்
விட்டானே முன்னூறு நானூறு
சீனிக்கண் ணுடித் தெளிவிலே தான்செடி
சேரக் கறுப்பா யிருக்குதென்று
மான மிடிந்து விழுந்தாப் போலப்போ
மன்னவன் சுந்தர லிங்கமுந்தான்
சாக விதியென்று கந்தன் பகடையுந்
தலை கவிழ்ந்து படுத்திருந்தான்

நாலு திக்கிலும் பீரங்கிச் சத்தம்
டமடமென் ரேசை தான்முழங்க
விடி. வெள்ளிகள் முளைத்ததென் ருன்தலை
வெள்ளைக் கோழிச்சத்தங் கூவுதென்ருன்

## இரவில் விழித்திருந்தக் கும்பினிப்படையார் பகலில் தூங்குதல்

விடியற் காலங்க ளாச்சுதென்று அசல்
வேந்தனும் அக்கினி மேஜர்துரை
படுத்து நித்திரை செய்திடவே அங்கே
பட்டாள மேஜருந் தூங்கிடவே
துடித்த சோல்சர்கள் படுத்தனராம் அங்கே
படுத்த பேரெல்லா முறங்கினராங்
கத்தி வெடிகளைத் தான்சாத்தி அவன்
கல்லு வெடிகளைத் தானிறுத்திச்
சுத்த வீரர்க ளுறங்கிடவே குட
வர்த்தன ரெல்லாம் படுத்திடவே
பாராக் காரருந் தூங்கினராம் அசல்
பட்டாணி மார்க ளுறங்கினராஞ்
சாராய வெறி தீராம லவன்
சலிந்து நித்திரை போனுனே
ராத்திரி காலம் விடிந்ததென்று சொல்லி
ராணுவத் தார்க ளுறங்கினுர்கள்
மாற்ருன் வஞ்சகந் தோற்ருமல் மதி
மயங்கி நித்திரை செய்திடவே

## கும்பினித் தூக்கம் பாளையக்காரர் லாபம்

அந்தநல் வேளையில் சுந்தர லிங்கமும்
அதிவீர மல்லு சேருவையுங்
கந்தன் பகடையும் வேகங்கொண் டானங்கே
கையைக் கடித்தவ னேதுசொல்வான்
சக்தி சடாட்சரி வீரமல்லு பொம்மு
சக்கதேவி துணை யென்றுசொல்லி
புத்தியா லோசனை செய்துகொண் டானினிப்
போனுல் வேட்டைகள் சாயுமென்ருன்
அதிர்ஷ்டம் நமக்கு வாச்சுதென்ருன் வேட்டை
யாடலாம் வேட்டைகள் வாச்சுதென்ருன்
இதம்பத மாக வெழும்பென்ருன் மெள்ள
வெழும்பியே வெளிக் கிளம்பென்ருன்

குத்துக்கால் வைத்தங்கே நடந்தான் சற்றே
குனிந்து மெள்ளவே கவிழ்ந்தான்
சந்தோஷ வேட்டைக ளாச்சுதென்ருன் நெஞ்சால்
தவழ்ந்து போருனே வேகங்கொண்டு
வண்டிக் காலில் நுழைந்தானே அவன்
மண்டி போட்டு உட்கார்ந்தானே
மண்டிபோட் டங்கே வீரமல்லு சேர்வை
வாகுள்ள சுந்தர லிங்கமுந்தான்
கண்டகோ டாலிதான் கந்தன் பகடையுங்
கைகலந்து சண்டை செய்வோமென்ருன்
துண்டரீக மாக தண்டுவா முண்டர்கள்
ஒன்றுக்கொன்று பேசிக் கொண்டனராம்

## பாளையக்காரர் கும்பினிப்பட்டாளத்துடன் சண்டை செய்தல்

பாராக் காரரைக் குத்தினுனே அந்தப்
பார்த்தீப சுந்தர லிங்கமுந்தான்
கூடா ரத்திலே போய்நுழைந் தானங்கே
குத்து விளக்கெல்லாந் தானணைத்தான்
பாடுகள் கேடுகள் செய்யுரு னங்கே
பட்டாள மேஜரைக் குத்துகிருன்
படுத்த சாய்ப்பிலே சாத்துகிருன் அசல்
பட்டாணி மார்களை வெட்டுகிருன்
விடியக்கா லம்வேளை யிருட்டி லங்கே
வேட்டை முழுவேட்டை வாச்சுதென்ருன்
நொடி நொடிக்குமுன் னேரத்திலே அங்கே
நூறுசனம் போலே பட்டாச்சு
எத்தனை சோல்சரைக் குத்துகிருன் தம்பி
கத்தியினுல் வெட்டி யிழுக்கிருன்
ரத்தங் குபீரென் றெழும்பிடவே கன
சுத்த வீரர்கள் மடிவாச்சு
மால்தார் அவுல்தார் சீமைய தாரங்கே
மன்னவன் கும்பினிப் பட்டாளம்
கால்கள் பதறிடக் கைகள் பதறிடக்
கடுங்கோ பங்கொண் டெழும்பினராம்

## அக்கினித் துரையின் பீரங்கிச் சண்டை

அத்தரி பானிச்சோ மாதரிச்சோ வென்று
அக்கினி மேஜ ரெழும்பினராம்
நித்திரை யால்மோசம் போச்சுதென்று துரை
கத்தி வெடிகள் யெடுத்தனராம்

பல்லைக் கடித்தல்லோ நெரித்திட் டாரங்கே
பட்டாக் கத்தியுரை நெகிழ்த்திட்டார்
கொல்லென்று சத்தங்கள் கேழ்க்குதென்றூர் வலு
கூக்குரல் சத்தங்க ளாச்சுதென்றூர்
மாத்தானும் வந்து விழுந்திட்டான் என்ன
மாயமென்று சண்டை நடத்திட்டான்
தீர்த்தானே பீரங்கி முன்னூறு நானூறு
தீரன் பிற்கட்டு மேஜர்துரை
மின்னல் வெட்டிமின்ன லறுத்தாப் போலங்கே
மின்ன லிடிகள் விழுந்தாப்போல்
முன்னேறி குண்டுப் பரிந்திடவே துரை
மன்னரெல் லாரு மயங்கிடவே
சாராய வெறி யேறிடவே அங்கே
தன்படை மாற்ருனுந் தெரியாமல்
வீரிய மாகவே ஒன்றுக்கு சுட்டு
வெடிகள் போட்டு மடியுதய்யோ !

## போர்க்களக் காட்சி

ஒன்றுக்கொன்று தானே வெட்டிக் குத்திகிட்டு
உருண்டு போகுதே பட்டாளம்
மண்ணும் விண்ணும் செந்தூள் பறக்கவேவெடி
வார்ப்பண்ணிச் சம்வாத முழக்கவே
முடவ ஞகவே விழுவோருந் தலை
மூளை சிதறி விழுவோரும்
குடல் கனத்து விழுவோரு மீரக்
கொலை தெரித்து விழுவோரும்
முடி சிதறி விழுவோரும் வெகு
மோசம் வந்துதென்று சொல்வோரும்
தொடை நொருங்கி விழுவோரு மாரும்
சோல்சர் துடித்து விழுவோரும்
அக்கினி மேஜ ரதட்டுகிருன் வலு
அனியாய மோசங்கள் வந்ததென்ருன்

## கந்தன்பகடை இறப்பு

மக்கா ளித்துரைத் தானுமப்போ கந்தன்
பகடையைச் சுட்டுக் கொன்ருனே
கந்தன் பகடை மடிந்திடவே கதை
இந்த விதமாய் முடிந்திடவே
வந்த விதிவந்து தானுக் காலினி
வளைந்தாட வேணு மென்றுசொல்லி

## சுந்தரலிங்கமும் வீரமல்லும் தப்பியோட ஆலோசனை

மாதரிக் காரன் வீரமல்லு சேர்வை
மன்னவன் சுந்தர லிங்கமுந்தான்
தப்பிப் பிழைத்தங்கே போவதற்கு நம்மள்
எப்படி தான்வெளி யேறுவது
எப்படித் தானம்மள் போவமடா படை
யெள்ளுப் போட இட மில்லையடா
தனித்து ஆலோசனை பேசினார்கள் மனத்
தையிரியமாய்ச் சற்றே நின்றார்கள்

## சுந்தரலிங்கமும் வீரமல்லும் தப்புதல்

நின்றவர்கள் தானுங் கீழே விழுந்து
நீட்டி நிமிர்ந்தங்கே தான்படுத்து
பிணத்தோட பிணமா யுருண்டு தப்பிப்
பேசாமல் போறானே வேஷங்கொண்டு
எத்தனை தூர மிருக்குதென்று நெஞ்சா
லெப்படித் தவழ்ந்து போவோமென்று
செத்தபே ருடுப்பைத் தானுரிந்தான் தம்பி
சிப்பாகி மார்போல் வேஷங்கொண்டான்
சுந்தர லிங்கமும் வீரமல்லு சேர்வையும்
தந்திர மாய்ப்பாரு முத்தூருக்கு
விந்தை யாக நடந்தானே தலை
மேலேயும் டொப்பியை வைத்தானே
வேலெடுத்தான் கையில் வெடியெடுத்தான் தோளில்
வேடிக்கை யாகவே வைத்துக்கொண்டான்
மால்தார் வேஷங்கள் போட்டனரா மெள்ள
வாரதற்கு வழி பார்த்தனராம்
பட்டா ளத்தை விலக்கிக்கொண்டு கூளை
பாளையத் தூடே நடந்துசென்று

## கம்பளத்தார் பாஞ்சை நகரடைதல்

கட்டபொம்மு துரை தான்வளர்த்த ரெண்டு
காளை வருவதைப் பாருங்கடி!
பாராக் காரரைத் தள்ளியல்லோ அங்குப்
பட்டாள மேஜரைப் பாராமல்

பீரங்கி மேஜர்க்கு ஒடுங்கியல்லோ மெள்ளப்
பேசாமல் போறதைப் பாருங்கடி!
பழிகள் மோசங்கள் வருமென்று சற்றும்
பயங்கள் தானுமே இல்லாமல்
வெளியே பார்த்து வெளியேறி ரெண்டு
வேங்கைபோல் வாரதைப் பாருங்கடி!
கந்தன் பகடையைத் தோற்றோமென் றுனவன்
கண்ணைப் பிசைந்து அழுதுகொண்டான்
சுந்தர லிங்கமும் வீரமல்லு சேர்வையும்
தொங்கலி லேபோருன் பாருங்கடி!
விடிந்து போச்சுது நடவென்று னிலம்
வெளுத்து உதைய மாச்சுதென்றுன்
கடுநடை யாகவே வருகவே
கண்டபேர் பின்னுக்கு விலகவே
பாஞ்சை நகரில் வந்துசேர்ந்து அந்தப்
பார்த்தீபன் கட்டபொம் மேந்திரனிடம்

## சுந்தரலிங்கமும் வீரமல்லும் சண்டைக்குப் போய்வந்த செய்திகளைக் கூறல்

போய்வந்த செய்தி தனைத்தானு மங்கே
பூராய மாக உரைத்தார்கள்
நாடி நடந்தங்கே சென்றதுவும் வழி
கூடி நெஞ்சாலே தவழ்ந்ததுவும்
சட்டமாய்த் தாவு பரித்ததுவும் அங்கே
தானே பதியி லிருந்ததுவும்
பாட்டை விதியாகப் போனதுவும் அங்கே
பட்டாளந் தன்னையுங் கண்டதுவும்
விடியக் காலத்தில் வெள்ளி முளைத்தபின்
வேந்தனும் அக்கினி மேஜர்துரை
படுத்து நித்திரை செய்கையிலே அந்தப்
பட்டாள மேஜருந் தூங்கையிலே
கூடாரந் தன்னில் நுழைந்ததுவும் அங்கே
குத்து விளக்கை யமர்த்தியதும்
காடுகளைத் தங்கே வேட்டைகள் செய்ததும்
கைகலந்து சண்டை நடத்தியதும்
கந்தன் பகடை பட்டு மடிந்ததும்
கண்ணைப் பிசைந்து உரைத்தார்கள்
மெய்யாகச் சொல்லி விளம்பினராம் வெகு
விதமாய்ச் செய்தி மொழிந்தனராம்

## கந்தன் பகடை இறப்புக் கேட்டு, கட்ட பொம்மனின் கலக்கம்

கந்தன் பகடை மடிந்த சமாச்சாரங்
　　கட்டபொம்மு துரை தான்கேட்டுச்
சிந்தை கலங்கி மனதுநொந்தான் அய்யோ!
　　சொந்தம் பாராட்டி வளர்த்தானென்ருன்
தன்னிமை யாகவே வளர்த்தேனே வெகு
　　சமத்துக் காரப் பகடையென்ருன்
அநியாய மாகவே முடிந்தானே அவன்
　　சொன்ன சபத முடிப்பானே
எதிரிகள் வந்து யெதிர்த்து விட்டால்அதற்
　　கேத்தக் கத்திகள் சுத்திவிட்டால்
எதிரிச் சாவலுஞ் சாய்ந்திடுமே நான்
　　எடுத்த சாவல் கெலித்திடுமே
கந்தன் பகடையைத் தோற்ருேமென்ருன் இனிக்
　　கண்ணுலே யென்றைக்குக் காண்போமென்ருன்
இந்த விதமாகக் கம்பளத்தா னங்கே
　　சிந்தை கலங்கி மனதுநொந்தான்
ஆங்கால மெய்வருந்த வேண்டா மருங்
　　கோப்பு இளநீர்போல் தான்சேறும்
போங்கால மாச்சுதே! வென்றிடைந்தான் கட்ட
　　பொம்மு துரையு மனதுநொந்தான்
மனது நொந்து கொலுவிருந்தான் இனி
　　வந்த விதிக்கென்ன செய்வோமென்ருன்
தனது கம்பளங் கும்பாக அங்கே
　　சகலப் பேர்களும் வந்திருந்தார்

## கம்பளத்தார் வெற்றிமுழக்கமிட்டவர்களுக்குப் பரிசு வழங்குதல்

வெற்றியாய் வந்தவன் சுந்தரலிங்கம் பார்
　　வீரமல்லு சேர்வைக் காரனுக்குப்
பத்து வராகன் பெறும்படியாய் ரெண்டு
　　பதக்க மெடுத்துப் போட்டனராம்
முத்துப் பதித்த கடுக்கனிட்டார் முத்து
　　மோகன மாலேயுந் தான்போட்டார்
அஸ்த கடகங்கள் முன்கை முதாரிகள்
　　விஸ்தார மாகவே தான்கொடுத்தார்
கந்தன் பகடைதன் மைந்தனேயும் அங்கே
　　சொந்தம் பாராட்டி வளர்த்தார்கள்

## கம்பளத்தார் ஒன்றுகூடி, மறுவாலோசனை நடத்தல்

விந்தைய தாகவே கம்பளத்தா ரங்கே
மேலான யோசனை யாயிருந்தார்
கும்பினி யாருட செய்திகளைச் சொல்ல
அன்பாகக் கேளடி மீனாட்சி !
வம்புக ளாகவே ஒன்றுக்கு வெட்டி
மடிந்து போச்சுதே பட்டாளம்

## அக்கினி மேஜர் வருத்தமும் விருத்தமும்

விடிந்து உதய மானபின்பு துரை
வேந்தனும் அக்கினி மேஜருந்தான்
படுக ளத்தினில் வந்தனராம் அங்கே
பட்டாளத்தைச் சுத்திப் பார்த்தனராம்
பட்டாளத்துச் சனம் பட்டதையும் அந்தப்
பாராக்காரர் சனம் பட்டதையுங்
கெட்டியாய்ப் பார்த்துக் கிலேசமுற்றார் துரை
மட்டுக் கடங்காத கோபஞ் சொல்வார்
எந்தன் சமத்துகள் பாராமல் என்னோடு
எதிர்த்துச் சண்டைகள் செய்யாமல்
வந்து களவுகள் செய்தானே இந்த
வஞ்சகஞ் செய்தானே கம்பளத்தான்
கட்டபொம்மு துரை சேவுகன் தானொரு
கட்டையன் பட்டுக் கிடக்கிறாண்டா
பட்டா ளத்திலே நூறு சனம்வழிப்
பாராக் காரரி லன்பதுபேர்
ஏழு துரைமார்க ளிறந்திட்டார் வலு
எத்தனை சோல்சர்கள் மடிந்திட்டார்
கூளைப் பாளையங் குலைந்திட்டார் பொதிக்
காளைபோல் தம்பூருக் காரன்பட்டான்
மாற்றான் எத்தனை பேருவந்தான் என்ன
மாயமோ ! என்று மனதுநொந்தான்
பார்த்தா னித்தினிப் போலிருக்கான் ஒரு
பையண்டா பட்டுக் கிடக்கிறாண்டா
எத்தனை பேரை யொருத்தன்கொல் வானென்று
எண்ணுறானே பல யோசனைகள்
அத்தரிப் பாணிச்சோ மாதரிச்சோ லவண்டி
தொத்தப் பயலிவன் போலிருக்கான்

கண்டிகாப் பணியைப் பார்த்தானே அவன்
கன்னக் குடும்(மி)பியைத் தான்பார்த்தான்
சுண்டு வில்லுங்கையுந் தான்பார்த்தான் வலு
லண்டன் எமகால னென்றுரைத்தான்
கத்தி வெடிகளைப் பாருமென் றுனிவன்
கக்கிஷக் காரனடா பாகியென்றான்
சித்தாள் போலே இருந்தாலுஞ் சிங்கேறு!
சேவுகத்தில் சுத்த வீரனென்றான்
தூங்கலைப் போலவே இருந்தாலும் இது
தோக்குல வார்குலம் பொல்லாது
தேங்கி னதுபோ லிருந்தாலு மிது
சில்வார் குலம் பொல்லாது
ஏழு கெடித்தலந் தானடித்தோம் நல்ல
இங்கிலீசு வெள்ளைக் காரனல்லோ!
தூள்தூ ளாக்குறேன் பாஞ்சை நகரத்தில்
தொட்டியான் சமர்த்துப் பார்ப்போமென்றான்

## அக்கினீசுப் பட்டாளம் பாஞ்சை நகர் நோக்கிச் செல்லல்

பட்டாளத்தைப் பார்த்துப் பாஷைசொன் னுந்தப்
பாஞ்சைப் பதியிலே தீரனென்றான்
மெட்டாகப் பாளையம் புறப்பட்டுக் கன
வெள்ளம்போ லங்கே வருகுதடா
கணிச மாகவே பிற்கட்டு மேஜரும்
இச்சணந் தாமச மில்லாமல்
அணியணி யாகவே பட்டாள மங்கே
ஆரணி யாகவே மெட்டாக

## கட்டபொம்மன், கும்பினியார் படையெடுத்து வருவதைப் பார்த்தல்

பார்த்து இருந்தானே கட்டபொம்மு துரை
மன்னன் தானபதிப் பிள்ளையுடன்
தீரன் கும்பினிப் பட்டாள மிங்கே
சேரத் திரண்டல்லோ வருகுதென்றான்
எள்ளுப் போட இடமில்லாமல் இங்கே
ஏகமாய்க் கும்பினி வருகுதென்றான்
முள்ளுக் கட்டு முத்துவீரையன் லெக்கையன்
முப்பது பேருடன் தானெழுந்தான்

கட்டபொம் மேந்திரனைத் தெண்டனிட்டான் படை
சிட்டுக் குருவிபோல் வருகுதென்றான்
வேட்டைக ளாடியே வாரமென்று சொல்லி
வெத்திலை பாக்குமே வாங்கிக்கொண்டான்
கோட்டையும் விட்டு வெளியேறி வெகு
கோலா கலமாக முன்னேறி

## மூன்றாவது கம்பளத்தார் கும்பினியாரை எதிர்த்தல்

வில்லெடுத் துக்கையில் வெடியெடுத்து ரண
வேட்டைக ளாடவே போறமென்றான்
கல்லுங் கவணு மெடுத்துக்கொண்டு தம்பி
வல்லமை யாக வெளியேறிப்
பாட்டை மார்க்கத்தில் மேல்புற மாகவே
நீட்டி நிமிர்ந்தங்கே போகாமல்
கூட்டங் குமிசலாய்த் தோணமல்
ஒண்ணும் ரெண்டுமாகப் போறானே
ஆத்து ஓடைவழி யாகத் தானுமப்போ
நிண்ணுநிண்ணு மெள்ளப் போறானே
உப்பாறு ஓடையில் தான்பதுங்கி மெள்ள
ஒளிந்து போறானே கம்பளத்தான்
முப்பதுபேரும் பதுங்கி யிருந்தா னய்யோ !
முன்னேறிப் பட்டாளம் போகுதென்றான்
பட்டாளந் தன்னை முன்னேவிட்டு இந்தப்
பார்த்திபர் முப்பது பேர்களுந்தான்
வார்பண்ணி துப்பாக்கி சுட்டனராம் அந்த
மன்னவன் கும்பினி பட்டாளத்தில்
நாற்பது பேரல்லோ பட்டாச்சு ஒரு
வாசி நாயக்கனும் பட்டாச்சு
சோல்சர் பட்டாளம் நெளிவாச்சு துரை
மேஜர்கள் நாலுபேர் பட்டாச்சு

## கும்பினியார் கம்பளத்தாரை எதிர்த்தல்

பாஷை சொல்லித்துரை திரும்புமென்றா னங்கே
பட்டாள மேஜர் தயாரென்றான்
சத்துராதி மித்திரம் பார்த்தீர்களோ வென்று
மத்தியான வெயில் நேரத்திலே
கத்திகளும் புடை புடைக்கவே அங்கே
சுத்த வீரர்களுந் திரும்பவே

பட்டாளஞ் சேரக் குமிந்திடவே அங்கே
வட்டமிட் டாப்போல் வளைந்திடவே
நெட்டுக்கு நெட்டாங்கே பீரங்கிச் சத்தம்
விட்டானே முன்னூறு நானூறு
மாத்தான் வஞ்சகம் பார்த்தீர்க ளோவென்று
மருகிப் பட்டாள மேஜர் துரை
தீர்த்தானே பீரங்கி டபீரென்று அங்கே
செந்தூள் பறக்கவே திடீரென்று
ஆத்தாடி யென்று விழுகவே அவன்
சூதான படையு முறியவே
பார்த்தத் திசையெல்லாம் பளீரென்று ஆடிக்
காத்துகள் போலவே வீசிடவே
நடுவே வந்தவன் பிற்கட்டு மேஜரும்
நாலஞ்சு பீரங்கி தீர்ந்திடவே

## முப்பது கம்பளத்தார் இறந்து விடுதல்

கடுங்கோப மாகப் பட்டாள மேஜருங்
கல்லு வெடிகளை நெரித்திடவே
குபீரென்று சத்தம் எழும்பிடவே அங்கே
கோடை யிடிபோல் முழங்கிடவே
விபரீதச் சண்டைகள் நடக்கவே கல்லு
வெடிச் சத்தங்கள் முழங்கிடவே
செப்புத் தரையாகப் போச்சுதே கம்பளச்
சேருவை முப்பது பேர்களுந்தான்
முப்பது பேர்களும் பட்டாச்சே அங்கே
செல்லுவீடு போலே தூளாச்சே
வெந்துநீ றுகவே தான்போச்சே அப்போ
மொட்டப் பரும்பெல்லாந் தூளாச்சே

## கும்பினிப்பட்டாளம் பாஞ்சாலங்குறிச்சிக்குச் செல்லுதல்

பந்தி பந்தியாகக் கும்பினிப் பாளையம்
பாஞ்சால நாட்டுக்குச் சென்றனராம்
ச(ஜ)லோ மாரென்று பட்டாள மேஜருஞ்
சலசல வென்றங்கே புறப்பட்டு
ஆலோசனை யாகப் பிற்கட்டு மேஜரும்
அக்கினி மேஜருந் துருசென்று
கரிக ளுஞ்சில பரிகளும் ஒட்ட
கங்களும் சோல்சர் படைகளும்

நெருநொன் றங்கே பாஞ்சால நாட்டினிலே
நெருங்கி வந்துதே பட்டாளம்
பாளையம் வந்து இறங்கினராம் அந்தப்
பாஞ்சை நகரத்தைப் பார்த்தனராம்
வாளை யெடுத்துறை விட்டனராந் துரை
மார்களும் பல்லைக் கடித்தனராம்

## கும்பினியார், பாஞ்சைநகர்க்கோட்டைக்குத் தென்புறம் முகாமடித்தலும், போர்க்கோல மாகுதலும்

கோட்டைக்குத் தென்புறங் கூடாரம் பச்சைக்
கூடா ரங்களுந் தானடித்து
காட்டுப் பாராக்களுந் தானிருத்தி அங்கே
கோட்டைக் கட்டுப்போலே மால்பாத்து
பார்த்தீபன் கும்பினிப் பாளையத்தைச் சுத்திப்
பாராக் காரரைத் தானிறுத்தி
சாஸ்திர வேதப் படியாக வெகு
நேர்த்தியாய்க் கும்பினிப் பட்டாளம்
பட்டாளமேஜ ரொருபுறமாஞ் சில
பட்டாணி மார்க ளொருபுறமாம்
வெட்டுந் துரைமார்கள் ஒருபுறமாய்ச் சோல்சர்
மெட்டுமெட் டாகவே தானிறுத்திக்
குதிரைக் கூட்டத்தை முன்னிறுத்தி ரெண்டு
கூளைவா லானையைப் பின்னிறுத்தி
சதுராய்ப் பாளையம் மால்பார்த்து நல்ல
தம்பூருக் காரனை முன்னிறுத்தி
முகமி லங்கவே பணியணிந் திடும்
முன்னூறு குதிரை உன்னிதமாய்
வகைவகை யாகத் தானிறுத்தி நல்ல
வர்ணப் பட்டாள மணிவகுத்தார்
மல்லுகள் வல்லுகள் சண்டையுமாய்க் கல்லு
வெடிக் காரரை முன்னிறுத்தி
சொல்லுக் கடங்காத சோல்சர்கள் மல்லர்கள்
புல்லாங் குழல்கார ரெல்லோரும்
மாதரி யாகவே சோல்சர்வெள் ளைக்காரர்
வங்கிகள் தன்னை யெடுத்துக் கொண்டு
போதர வாகவே சாதிவெள் ளைக்காரர்
போதை லாகிரிகள் நடத்திக் கொண்டார்

அக்கினி மேஜர்தன் சொல்படியே அங்கே
அணியணி யாகவே பட்டாளம்
திக்குத் திசைக ளதிரும்படி ஒரு
சேகர மாகவே பீரங்கி
வைத்தல்லோ மீரங்கி நிறுத்தினுர் கரு
மருந்து போட்டல்லோ நிறுத்தினுர்

## பாஞ்சாலங் கோட்டைமீது பீரங்கிச் சுடுதல்

எத்தனை குண்டுக ளிடித்திட்டார் வெடி
வைத்து வாயில்நெருப் பிடித்திட்டார்
பாசு பதமென்ற பீரங்கி ரொம்பப்
பத்தி யெழும்புதே பீரங்கி
வாசித மென்ருெரு பீரங்கி அங்கே
மண்டி மண்டிச்சத்தம் விளங்கவே
கோடையிடி போலவே குமுறுதே
கோட்டை மதிலெல்லாஞ் சிதறுதே
ஆடிக்காற் றுப்போலே விசைகொண்டு அந்த
நாடெங்கும் பறக்குதே செந்தூளு
பளீர் பளீரென்று வெடிக்குதே அங்கே
திடீர்திடீ ரென்றுதான் முழங்குதே
நொடி நொடிக்குமுன் னேரத்திலே கல்
வெடிச்சங் கொண்டு அடிக்கவே
எள்ளுப் பொறியுதே பாஞ்சைக் கோட்டையில்
ஏகமாக் குண்டு முழங்கிடவே

## பட்டப்பகலில் பாஞ்சைக் கோட்டை பற்றி யெரிதல்

புள்ளுப் புருக்களுந் தண்ணீர் குடியாமல்
பொசுங்கிச் சேர மடியுதையோ !
மத்தியான வெயில் நேரத்திலே சண்டை
மாட்டுகிருன் தீயை மூட்டுகிருன்
பத்தி யெரியுதே பாஞ்சைப் பதியிலே
பட்டப் பகலுச்சி நேரத்திலே
கரிகளுஞ் சில பரிகளும் வெம்பிக்
கதறுதே கனைத் துறுமுதே
நரிகளும் ஓடி வருகுதே பேய்
நாய்களும் வந்து உறுமுதே
காகம் பறக்காதக் கோட்டையிலே அங்கே
ஏகமாய்ச் சண்டை நடந்திடவே

## கும்பினிப் படைக்கு தாகவரட்சி உண்டாதலும் தணிதலும்

தாகஞ் சகியாமல் சோல்சர்வெள் ளேக்காரர்
தேகம் படபடென் ருடிடவே
தண்ணீர் தண்ணீரென்று புலம்பவே கண்ணீர்
தளும்பியே மனங் கலங்கவே
புண்ணாக்குத் தின்ன வுண்ணாக்குப் போலிப்போத்
தாகங்க ளாகுதே யென்றுரைத்தேன்
அப்போது கும்பினி அக்கினி மேஜரு
மன்பான யோசனே செய்தனராம்
கொப்பரையி லுள்ள சீமைச்சா ராயத்தைச்
சிப்பாகி மாருக்குக் கொடுத்தனராம்
கள்ளுச் சாராயங் கலந்தல்லோ சோல்சர்
எல்லோருந் தீனிகளேத் தின்றனராம்
துள்ளித் துள்ளிகுதி போடுவராஞ் சோல்சர்
மல்லுக் கட்டிவிளே யாடுவராம்
தாகந் தீர்ந்து இளேப்பாறிச் சுக்குத்
தண்ணீர் குடித்துத் தகையாறி

## கும்பினிப்படை தாகந்தீர்ந்து போரிடுதல்

வேங்கைபோல் வீறிட்டு முழக்கினர் அதி
வேகமாய்க் கவாத்துச் செய்தனராம்
தம்பூருக் காரன் பம்பமென்று சத்தம்
மேகங்கள் போல முழக்கினர்கள்
கும்பினிப் பாளேயம் கெம்பீர மாகவே
சம்பிரதாயச் சண்டை செய்தனராம்
மூஞ்சு முகங்கள் கடுகடுத் தாரங்கே
பாஞ்சு பாஞ்சுவெடி சுட்டனராம்
பாஞ்சாலங் கோட்டையில் பளீரென்று குண்டு
பாசு பதமுந் திடீரென்று
ஆகாசம் பூமி அதிரவே இடி
யதிர(ற)வே மதிள் சிதறவே
வேகமாய்ச் சத்தம் பரியுதே மதிள்
இடியுதே பொம்மை யுடையுதே
மாலே நேரப் பொழு தாச்சுதே மழை
மாரி இடிபோல் முழுங்குதே
மூலேக் கொத்தளமுந் தகருதே குண்டு
முன்னூறு நானூறு பரியுதே

## போரை நிறுத்தும்படி அக்கினி மேஜரின் உத்தரவு

அஸ்தமிச்ச வேளை ஆச்சுதென்று துரை
அக்கினி மேஜர்வா லோசனையாய்
சித்த மகிழ்ந்திடக் கும்பினிப் பாளையஞ்
சிப்பாகி மார்களைத் தான்பார்த்து
நிற்கட்டுஞ் சண்டை நிறுத்துமென்ரு னிப்போ
நியமித்தப் பாராக்கள் நில்லுமென்ருன்
வேளைக்கு வேளை திரசுடனே பாரா
மெட்டாகப் பட்டாளம் நின்றனராம்
நாளைக்கல் லோகன மோடிகளாய்ச் சண்டை
நடத்து மென்று தானுரைத்தார்
ராத்திரி பாராக்கள் தானும்நின்று அங்கே
நாகரீக முள்ளப் பட்டாளம்

## கும்பினியின் இரண்டாம்நாள் சண்டை

மறுநா ளுதய காலத்தில் குண்டு
மழைமாரி போல்தானும் பொழிந்தனராம்
இப்படி யெத்தனை நாளாச்சு தம்பி
ஏழெட்டுநாள் சண்டை தானுச்சு
முப்பதுநாள் சண்டை செய்தாலும் வெகு
மூர்க்கமாய்ப் பீரங்கி சுட்டாலும்

## கும்பினிப் படையெடுப்பை கட்டபொம்மன் உதாசீனப் படுத்துதல்

பாஞ்சைப் பதியிலே கட்டபொம்மு துரை
பசுவுடன் கொலு விருப்பதுவும்
நாஞ்சில் நாடுமுதல் போறதும் வல்ல
நாட்டு மலைவேட்டை யாடுவதும்
வேட்டைக ளாடித் திரும்புவதுந் தம்பி
ஓட்டமும் நடையாய் வருவதுவும்
ஏகாந்த மாய்க்கொலு விருப்பதுவும் எட்டையா
புரத்தில் கொள்ளை யடிப்பதுவும்
ராத்திரி காலத்தில் புறப்பட்டு அந்த
நாடெங்கும் கொள்ளை யடிப்பதுவும்
பார்த்தா லித்தினிக் கோட்டைக்குள் ளேவெகு
நேர்த்தி யாகக் கொலுவிருந்தான்.
பாளையம் வந்து இருக்குதென்று சற்றும்
பயங்கள் தானுமே இல்லாமல்

நாளுக்குநாள் கொள்ளை யடிப்பதுவும் பாஞ்சைக்
கோட்டை வந்துகொலு விருப்பதுவும்
பீரங்கிச் சத்தம் எழும்புதென்று மனம்
பேதலி யாமலே கம்பளத்தான்
வீரியச் சண்டை செய்வோமென்பார் ரண
வேட்டைக் கெழும்பிட வேணுமென்பார்
இப்படி யாகவே கம்பளக்காரர் சற்றும்
எண்ணுமல் கோட்டைக்குள் ளேயிருந்தார்

## அக்கினிமேஜர் கட்டபொம்மனின் உதாசீனத்தைக் கண்டு ஆலோசித்தல்

அப்போது கும்பினி அக்கினி மேஜரும்
ஆலோ சனைகளு மேதுசெய்வான்
எத்தனை நாள்சண்டை செய்தாலும் நம்மள்
எத்தனை குண்டுகள் போட்டாலும்
சத்திராதி கோட்டைக் குள்ளே யிருக்கான்வலு
மித்திர வஞ்சகஞ் செய்திருக்கான்
சத்துங் கணியாமல் கம்பளத் தானவன்
சுத்த விசிவாசி போலிருக்கான்
அத்தரி பாணிச்சோ மாதரிச்சோ லவண்டி
ஆகட்டு மாகட்டு மிருக்கட்டும்
வீணரசுக் கொண்ட கம்பளத் தாரையும்
வெள்ளரிக்காய் போல நொறுக்குகிறேன்
மூணுநா ளைக்குள்ளே மாட்டுகிறேன் அவன்
காணியாட் சிக்கோட்டை பிடிக்கிறேன்
நொக்கு நொக்காகவே நொறுக்குகிறேன் சத்தம்
நூறு நூருயிரந் தீர்க்கிறேன்
அக்கினி போல்பத்தி யெரிக்கிறேன் நாளை
அமளை பொரிபோல் பொரிக்கிறேன்
எங்கே யிருக்கிருன் கம்பளத் தானவன்
என்ன தைரிய மாயிருக்கான்
கங்கு லிருள்போலே நேரமடா பாகி
கட்டுமெட் டாய்ப்பாரா நில்லுமென்ருன்
நில்லடா நில்லடா பாகி யென்று
நியமித் துஷாராக நின்றனராம்
சொல்லி வாய்மூடி முழிக்குமுன்னே அங்கே
சோறு கறிபொங்கித் தின்றனராம்
சம்பிர தாயமுள்ள கும்பினிப் பாளையங்
கெம்பீர மாக இருந்திடவே

## நடுவிரவில் கம்பளத்தார் ஒன்றுகூடி ஆலோசித்தல்

செம்பாதி ராத்திரி வேளையி லேசனஞ்
சேரத் திரண்டல்லோ கம்பளத்தான்
கும்பாகக் கூடியே பேசுகிரூர் நல்ல
ஊமைத் துரையுமே கெம்புகிருன்

## தாளுபதிப்பிள்ளை ஆலோசனை கூறுதல்

அந்நேரந் தானு பதிப்பிள்ளை யங்கே
என்ன ஆலோசனை சொல்லினராம்
இனிமேல் பாஞ்சை நகரத்திலே நமக்
கிருப்பிடங்களு மில்லை யென்ருன்
கட்டுங் காவலானப் பாஞ்சால நாட்டிலே
காகம் பறக்காதக் கோட்டையிலே
சிட்டுப் பறக்காதப் பாஞ்சால நாட்டிலே
முட்டுக் குனிந்தாப்போ லாச்சுதென்ருன்
நம்மோ டெதிரிக ளில்லையென்று பாஞ்சால
நாட்டில் துரைத்தனஞ் செய்திருந்தோம்
பொன்வாடை வீசிய பாஞ்சால நாட்டில்
பிணவாடை வீசுதே யெனவுரைத்தான்
எமனைப் போலவே சோல்சர்வெள் ளைக்காரன்
எத்தனை கும்பினி வந்திருக்கான்
பூமி யதிருதே பாஞ்சால நாட்டுக்குப்
பொல்லாங்கு மெத்தவே வந்ததென்ருன்
நேத்து முதனுள் சண்டையிலே வெடி
நெறித்துப் பீரங்கிப் போட்டதனுல்
காத்துப் புகைமண்டி யெழும்புதே கோட்டை
காலத் திடிபோலே முழங்குதே
மூதண்ட மாகவே குமுறுதே கோட்டை
மூலைக் கொத்தளமுந் தகருதே
சாதுரிய மினிப் போதுமையா நாம்
தப்பிப் பிழைத்திட வேணுமையா
சத்தி! சடாட்சரி! வீரமல்லு! பொம்மு
சக்க தேவியம்மன் கிருபையினுல்
இத்தனை காலமும் பாஞ்சை நகரத்தில்
சுத்த வீரத்தனஞ் செய்திருந்தோம்
சம்பிரதாயஞ் செய்யக் கூடாது இனிக்
கும்பினி யார்பகை யாகாது

கும்பினி யார்பகை யாகாதையா நாம்
கோட்டைவிட்டுப் போக வேணுமையா
வீணை பொல்லாங்கு வந்ததென்ருன் வெளி
யேறியே போறது நல்லதென்ருன்

### தாளுபதிப்பிள்ளேயின் ஆலோசனைக்கு ஊமைத்துரையின் மறுப்பு

தாளு பதிப்பிள்ளே சொன்னசொல் லேக்கேட்டுத்
தாட்டீகன் ஊமைத் துரைச்சாமி
கையைக் கடித்து உதறிஞனே ரெண்டு
கண்ணும் நெருப்புப் பொரிபோலே
வையகத்தில் சுத்த வீரனென்ருல் இந்த
வார்த்தை யுரைப்பாயோ யெந்தன்முன்னே
கூட்டங் கூடிவந்த படைகுருவி மேல்
வேட்டைக் கெழும்பிட வேணுமென்ருன்
நாட்டிலே தீப்பட் டெரிஞ்சாலும் பாஞ்சைக்
கோட்டைவிட்டுப் போறதில்லே யென்ருன்
சிட்டுப் பறக்காத பாஞ்சால நாட்டிலே
சிவத்த சட்டைக ளேதுபாகி?
கட்டுக் காவலானப் பாஞ்சால நாட்டிலே
கருப்புச் சட்டைக ளேதுபாகி?
காகம் பறக்காதே! கட்டபொம்ம னென்ருல்
கரிக் குருவியு மலர்ந்தாதே!
ஏகமாய் வந்த படைகுருவி மேல்
ஏகமாய் வேட்டைக் கெழும்புமென்ருர்
வானமும் பூமி யதிர்ந்திடவே நான்
தானுமே இப்போது அங்குசென்று
ஆளுலு மாகுது போளுலும் போகுது
அடிக்கிறேன் பாரொரு தம்மாசு
சீக்கிரம் வேட்டை சவாரியென்ருன் தம்பி
சேவுகர் சேர யெழும்புமென்ருன்

### ஊமைத்துரையுடன் கம்பளத்தாரனைவரும் கோட்டையைவிட்டு வெளியேறுதல்

மூக்கிலே கோபம் இருக்கு ஊமைத்துரை
முன்னேறிப் பாய்ந்தானே அந்நேரம்
சின்னத் தளவாய் பெரியத் தளவாயும்
பொன்னுஞ் சிவத்தையா முத்தையாவும்

மன்னன் குமரய்யா வேடபட் டித்துரை
மாப்பிள்ளை நாயக்கர் வெள்ளையாவும்
கம்பளச் சேருவைக் காரரிலே தம்பி
அன்பது பேரல்லோ தயாராக
சம்பிர தாயமாய் வெளியேறி விட்டார்கதை
சமத்தைக் கேளுங்கள் நல்லோரே!
ஈட்டி சமுதாடு கத்திகளும் எரி
ஈட்டிகளும் வாங்கிச் சமுதாடும்
தாட்டீகன் கையி லெடுத்துக்கொண்டு பாஞ்சைக்
கோட்டைவிட்டு வெளி யேறிவந்தான்

## ஊமைத்துரை கோட்டைக்கு வெளியிலிருந்து போர்த்தொடுத்தல்

ராத்திரி காலத்தில் பாதிப் பதினைந்து
நாழிகை யானதோர் வேளையிலே
காத்தாடி போலவே விசைகொண்டு தம்பி
கதிகாலக் கள்ளன்போல் வீரசின்னு
காட்டுப் பாராவுங் கடந்தனராம் இனி
மாட்டுவே னென்றே யெழுந்தனராம்
ஈட்டி யெடுத்துக் குலுக்கினராங் குதி
போட்டுக் குலவைக ளிட்டனராம்
மன்னன் ஊமைத்துரை மீசைமேல் கைபோட்டு
வல்லயம் நேரிசம் குலுக்கிவிட்டான்
உன்னி யுன்னிகுதி குதித்திட்டான் செங்கை
தன்னில் பட்டாக்கத்தி எடுத்திட்டான்

## கும்பினியார் எதிர்த்துச் சண்டையிடுதல்

அந்நேரந் தானங்கே கும்பினி யாருடை
அக்கினீசுத் துரை பட்டாளம்
இந்நேரந் தன்னில் சனியன் வந்துதென்று
எழும்பி பார்பண்ணும் வேளையிலே

## கும்பினிப்படை யெதிர்ப்பும் ஊமைத் துரையின் ஆவேசமும்

சாமஞ் சரிசாம வேளையிலே தம்பி
சாத்தப்பா சாத்தப்பா சாத்தென்றான்
ஊமைத்துரைக் கையைக் கடிக்கிறான் தம்பி
வீமனைப் போல்விழுந் தடிக்கிறான்

சோல்சர் பட்டாளத்தை வளைத்திட்டான் அவன்
குனிந்து சென்றூடே நுழைந்திட்டான்
கேசரி மயிரைப் பிடிக்கிரு னந்த
மீசையில் கையைப்போட் டிழுக்கிருன்
கடகட சிமிச்சா வென்று திமித்
தகுடு தோமென்று குதிகொண்டு
படபடதிடுதிடுவென்று அங்கே
பட்டாக் கத்திகள் பளிச்சென்று
பளிச்சுப் பளிச்சுப் பளிச்சென்று தம்பி
மொளிச்சு மொளிச்சு மொளிச்சென்று
வளைச்சு வளைச்சு மழுக்கென்று வெட்டித்
துளைச்சு துளைச்சுக் குலுக்குகிருன்
சுத்தவீ ரத்தனங் கூறிடுவான்
எக்குதடா குத்தென் ரூேதிடுவான்
எத்திசையும் புகழ் சக்கதே விக்கிது
ஏத்த கிடாயென்று கோத்திடுவான்
சித்தப்பன் முத்தப்பன் சிவத்தை யாவுமொரு
சேகர மாகவே திடீரென்று
கொத்தப்பா கொத்தப்பா குமரய்யா தம்பி
பொத்தப்பானை போலவே தகரப்பா
முடிக்கி முடிக்கி விரட்டப்பா தம்பி
பொடிக் கொசுகுபோல் நசுக்கப்பா
தடிக்கம் பாய்ச்சிலம் படியப்பா அடி
தகரப்பா தவ்விக் குதியப்பா
என்று ஊமைத்துரை மெய்யாகத் திடீ
ரென்று சிவத்தையா கையாலே
சண்டு பறக்கவே சாத்தென்று பொடி
செந்தூள் பறக்கவே தூத்தென்று
போடு போடென்று குதிபோட்டு நல்ல
போட்டுத் திடீரென்று தான்குதித்து
சாடு சாடென்று உரைத்தானும் நல்ல
தயிரு பானைபோ லுடைத்திட்டான்
வயிரி போலப் பறந்தடிக்கிருன் உச்சி
மயிரைப் பிடித்து இழுக்கிருன்
உயிரை எமன்மேல் குடிக்கிருன் வலு
ஊமைத்துரை பறந் தடிக்கிருன்
கெருடப் பட்சிபோல் பறக்கிருன் பருங்
கரடி போல்விழுந் துளப்புகிருன்

## சின்னவீரய்யாவின் சண்டை

சின்ன வீரய்யா லெக்கைய னென்ருெருவன் கம்பளச்
சேகரக் கார னதிலொருவன்
முன்னேறிக் கும்பினிப் பட்டாளஞ் சோல்சரை
முடிக்கிருன் கைகொண் டடிக்கிருன்
பல்லைக் கடித்து உதட்டை மடிக்கிருன்
அடே மல்கட்ட வாவென்று துடிக்கிருன்
வல்லையத் தால்குத்தி இடிக்கிருன் கை
மலத்துகிருன் மேலே இறுத்துகிருன்
கொழுப்பெல்லாங் கீழே சரியுதே குடல்
தெரியுதே ரத்தம் பரியுதே
நெளியு தேயுட லழியுதே பழி
நேருதே கழு மீறுதே

## சின்ன வீரண்ணன் சண்டை

சின்னவீரணன் லெக்கைய்யன் செய்யுஞ் சம்பிரதாயத்
தீர்க்கத்தை மூர்க்கத்தை யென்னசொல்வேன்
என்னசொல் வேனந்த சோல்சர்களைக் குத்தி
இழுத்துக் கீழே விழுத்தாட்டி
சோல்சர் பிடரியில் கடிக்கிருன் மண்டை
தூளாய்ச் சிதற அடிக்கிருன்
மீசை முறுக்கிக்கை யெடுக்கிருன் ரண
வேட்டையாடிச் சண்டை பிடிக்கிருன்
கும்பினிச் சனத்தை அழிக்கிரு னெதிரியைக்
குத்தி வெட்டியங்கே யிழுக்கிருன்
அம்புலி மான்போலே குதிக்கிருன் சம்பிர
தாயஞ் செய்துசிலம் படிக்கிருன்
மைக்காரன் ஒரு கைக்காரன் மழுக்
கார னல்ல தவில்காரன்

## சின்னலக்கணன் சண்டை

விகிதக் காரன் சின்னலக்கணன் சண்டை
வேடிக்கை பாருங்கள் தோழியரே !
தட்டப்பாரை சின்னு கெட்டிக்காரன் வேட
பட்டித்துரை யொரு கைக்காரன்
வட்டமிட் டாடிச் சிலம்பு வரிசையில்
கொட்டாப்புளி யொரு ஆசாரி

எட்டுபேர் சோல்சரை எட்டுபேர் மேஜரை
எட்டி யொருகுத்தி ஞலேகுத்தி
பொட்டியு மூடியும் போலவே தானங்கே
வெட்டி யெறிகிருன் பாருங்கடி!

## முத்தன்பகடை, பொட்டிப்பகடை இருவரும் ஒன்றுகூடிச் சண்டையிடுதல்

முத்தன் பகடையும் பொட்டிப் பகடையும்
மைத்துனன் மார்க ளிருபேரும்
கத்தி வீசிக்கொண்டு எமன் காலன்போலே
காங்குக் கூடாரத்தில் நுழைந்திட்டான்
கத்தி யடித்தல்லோ பார்க்கிருன் துரை
கத்தியைப் பார்த்தல்லோ வெடுக்கிருன்
எத்தனை சீமைச் சாராயக் குப்பிகள்
அத்தனையும் பூசையும் உடைத்திட்டான்
தேசுகி வாசுகி படுத்திட்டான் முன்னே
சீமைத் துரைகளும் முடிந்திட்டான்
மேஜர்கள் சோல்சர்கள் கிடுகிடென் னவே
ராசரையுங் குத்தி யிழுத்திட்டான்
துரையைக் குத்தி யிழுத்தால்போல் தம்பூருக்
காரனை பூசை நடத்திட்டான்
சாருயப் பொட்டி உடைத்தாப்போ லுஞ்சாதித்
துரையைக் கொல்கிருன் பாருங்கடி!
பொல்லாத மாத்தியன் பொட்டிப் பகடையும்
பொறிவைச்சுப் பொறி தட்டினுப்போல்
மல்ல ருடனேபோ ராடுகி ருன்தம்பி
மல்லுக் கட்டிவீழ்த் தாட்டுகிருன்
கைகோத்து மல்லுக் கட்டையிலே யெதிரி
காலை வாரிவிட்டு மேலெறிந்தான்
நெய்க்குடம் போலந்த சோல்சர் வயித்தையும்
நேரே கிழித்து அப்பால்குதித்து
குதிரை லாயத்தில் நுழைந்திட்டான் வெள்ளைக்
குதிரைக் காரனையுங் குத்திவிட்டான்
குதிகைக் காரப் பையனையுங் குத்தி
குதிரையுங் கொள்ளை யடிக்கிருன்
வெள்ளைக் குதிரையுந் தும்புவிட்டான் தம்பி
வெள்ளிக்கட்டி வெடி கொள்ளையிட்டான்
வெள்ளைக் குதிரைமேல் சீனிவைத்தான் தம்பி
துள்ளுக் குட்டிபோல் பகடையுந்தான்

## பொட்டிப்பகடை கும்பினித் துரைமார்களில் எண்பதுபேர்களை மடியவைத்தல்

வைபோகி மட்டத்தைச் சீனிவைத் துக்கடி
வாளமுங் கல்லணைத் தானுமிட்டு
மைக்காரப் பாண்டியன் ஊமைத்துரை முன்னே
வந்து சலாஞ்சொல்லிக் கொண்டானே
சன்னதம் வந்தாப்போல் வெள்ளைக் குதிரைமேல்
சாரி நடத்துருன் பாருங்கடி !
எள்ளுப் பொறிப்போலே பொறிக்கிருன் தேங்காய்ச்
சில்லு களைப்போலே உடைக்கிருன்
துள்ளித் துள்ளிவெடி போடுகிருன் வெடி
சுடுகிருன் வெடி பளிச்சென்று
செம்பாதி ராத்திரி வேளையிலே தம்பி
கம்பளத்தார் கொள்ளை யடிக்கவே
கும்பினித் துரைகள் எண்பது பேரல்லோ
வம்புக ளாகவே மடிவாச்சு
மேஜர்கள் சோல்சர்கள் ஆயிரம் பேருக்கு
நாசமாய்ப் போச்சுதே பட்டாளம்
வாசு நாயக்க னவுல்தார் சுபையதார்
நானூறு முன்னூறு பட்டாச்சு
தண்ணீர் தண்ணீரென்று தான்புலம்பி நூறு
சாதி வெள்ளைக்காரர் பட்டாச்சு
கொம்புக் காரருடன் தம்பூருக் காரர்கள்
வம்பர்கள் பத்துப்பேர் பட்டாச்சு
அன்ப தறுவது எண்ப தெழுவது
அச்சு மட்டங்களும் பட்டாச்சு
பட்டாள மேஜரும் பட்டாளஞ் சோல்சரும்
பாதிக்கு மேலே அழிவாச்சு
கெட்டக் குடிகெட்டு தாருக்கால் தம்பி
ரொட்டிக் குடிபோ லழிவாச்சு
சட்டைக்கார சோல்சர் கெட்டிக்காரத் துரை
சாதிவெள் ளைக்கார ரிப்படியாய்

## நடுச்சாமத்தில் கும்பினிப்பட்டாளம் அழிந்ததைக் கண்டு, அக்கினிசுத் துரை வருந்துதல்

பட்டாளஞ் சேதமாய்ப் போனதைக் கண்டந்த
பார்த்தீபுன் அக்கினி மேஜர்துரை
பாராசாரி மட்டத்தி லேறி யவன்
பட்டாக் கத்தியுந் தானுருவி

சாராய வெறிபோட்டுக் கொண்டு ரொம்ப
வீரிய மாய்க்கோபந் தானேறி
மாத்தான் வஞ்சகம் பாரத்தீர்களோ பாதி
ராத்திரி வேளையில் மோசஞ்செய்தான்
எத்தனைக் குதிரையுங் கொள்ளையிட்டான் படை
எத்தனை பேரையுங் கொன்றுபோட்டான்
கட்டா மிராசுக்கோல் நில்லென்று வெடிச்
சுட்டானே சத்தம் பளிச்சென்று
பட்டாக் கத்திகள் பளிச்சிடவே துரை
வெட்டினன் கம்பளம் நொருங்கிடவே
கத்தியால் வெட்டி விழுகவே தம்பி
கம்பளத்தார் படை முறியவே
உத்த சிவத்தய்யா மார்பில்வெட்டு தம்பி
ஊமைத் துரைக்கல்லோ நெத்திவெட்டு
வீமன் கருத்தையா மேலேவெட்டு அங்கே
வேடபட்டித் துரைக்கல்லோ மார்பில்வெட்டு
சின்னத் தளவாய் பெரியத் தளவாய்க்குக்
கன்னத்தில் காயங் கழுத்தில்வெட்டு
மன்னவன் கம்பளந் தெறிபட்டு அங்கே
மகுட வர்த்தனரு முறிபட்டு
கலைந்து போச்சுதே கம்பளமுந் தலை
குனிந்து போச்சுதே கம்பளமும்

### அக்கினீசுத்துரையுடன் காலாடிக்கருப்பன் உக்கிரப்போர்

அப்போது கருப்பன் காலாடி அங்கே
சிப்பாகி மார்களின் கைப்பட்டு
ஒப்புடன் தப்பிப் போகாம லங்கே
உறுதி யாகவே நின்றுகொண்டு
அக்கினி மேஜருட னெதிர்த்தா னப்போ
அவனடிக்க இவ னடிக்க
கருப்பன் காலாடி தனக்கு அப்போ
கால முடிவு சரியாலும்
பின்துணைக் கொருவ ரில்லாமல் மனம்
பேதலிப் பாயிருந் ததனாலும்

### காலாடிக்கருப்பனின் குடல்சரிவும், கைமுறிவும்

அப்போது கும்பினி யக்கினி மேஜர்க்கு
அதிகக் கோபங்கள் தானெழும்பி
மூலைக்கு மூலை விரட்டி முடுக்கியப்போ
துரத்தித் துரத்தி யடிக்கையிலே

கருப்பன் குடலுஞ் சரிந்ததே அந்தக்
காலாடிக் கையுந்தான் முறிந்ததே

## காலாடிக்கருப்பனின் ஆவேசப் போர்

அப்போது கருப்பன் காலாடிக்கு அங்கே
அதிக ஆங்காரந் தானெழும்பி
சரிந்த குடலே வயிற்றுக்குள் வைத்துச்
சல்லாச் சோமனே மேலேசுத்தி
வரிந்து வரிந்து மாராப்புக் கட்டி
இருந்து வெழும்பித் தொடைதட்டி
விரைந்து விரைந்து கும்பினிப் படையை
அரிந்து அரிந்து குமிக்கிருன்
குதிரை யேறி வார துரைகளே
குத்தியே மல்லாத்திப் போடுகிருன்
பதறி யோடவே பட்டாளம் வெகு
சதுருடன் குரல் முழக்குகிருன்
பாரடா பாரடா இந்தாபா ரந்தப்
பாஞ்சைப் பதிக்குநான் போறேனென்பார்

## கம்பளத்தார் பாஞ்சைக் கோட்டையை அடைதல்

ஆரடா வென்பின்னே வாரவ ருரென்று
ஆத்து வழியூடே நடந்திட்டான்
கம்பளத் தார்கள் முறிந்தோடி யங்கே
காடுஞ் செடியும் பறந்தோடி
கும்பினி யார்கையி லடிபட்டுப் பாஞ்சைக்
கோட்டையை நோக்கித் தெரிபட்டு
ஊமைத் துரைக்கு மிகுந்த வெட்டுக்
காயத்தோடே வெளியே புறப்பட்டுத்
தாமதஞ் செய்யாமல் பாஞ்சைப் பதிவந்து
செம்மையாய்க் காயமுஞ் செப்பமிட்டு

## ஊமைத்துரையின் காயங்களேக் கண்டு கட்டபொம்முவின் வருத்தமும் விருத்தமும்

காயமுங் கட்டி யிளேமூட்டி யென்றுங்
காப்பாற்று வாள்சக்க தேவியென்று
காயத்தைப் பார்த்துமே கட்டபொம்மு துரை
கண்ணீ ரொழுகவே யேதுசொல்வார்

தம்பிதன் காயத்தைப் பார்த்துத் துரையுமே
சக்கதேவி துணையென்று தானுரைத்துக்
கும்பினி யான்பகை செய்தோமே! இப்போக்
கொடுமை வந்ததே யென்றுசொல்லிப்
போய்விட வேணும் வடக்கே யென்றுபிர
தானிப்பிள்ளை மகன் சொற்படிக்கு
வீணனப் பொல்லாங்கு வில்லாமல் வெளி
யேறியே போவது நல்லதென்று
தானு பதிப்பிள்ளை யோசனைகள் சொல்லத்
தனித் தளப்புகள் பேசிக்கொண்டு
பெண்டுகள் பிள்ளைகள் தங்களையும் அங்கே
பேதக மில்லாம லேயழைத்துக்
கண்டார் சிரிக்கவும் நல்லாச்சே யென்று
கட்டபொம்மு துரை தான்மெலிந்து
பாஞ்சாலங் குறிச்சி தன்னிலே பதி
வான குடிக்காரர் தன்வீட்டில்
போயிருங்க ளென்று தானுரைத்து அவர்க்குப்
பொன்னும் பணமும் மிகக்கொடுத்து

## கட்டபொம்மன் பாஞ்சைவிட்டு வெளியேற வாலோசித்தல்

தாழ்வில் லாமலே பாஞ்சை நகரத்தில்
சமத்த னென்றுபே ரெடுத்திருந்து
பாழும் பதிவிட்டுப் போறேமென்று அந்த
நாளுந் துயரங்க ளுண்டாகி
என்னவிதம் வெளி யேறி போறதென்
றெண்ணுகி ருன்பல யோசனைகள்
மின்னிப் பிடிக்கென்ற கல்லுவெடிக் காரன்
வேங்கைப் புலிபோலே நிற்கிருன்
பாராக் காரர்கள் சூழ்ந்திருக்க அங்கே
பட்டாள மேஜருங் கிட்ட நிற்க
நீராவிக் கரை ஓரத்தில் பீரங்கி
நிறுத்தி நிற்கிருன் அக்கினீசும்
ஆனதி ஞலினி யெப்படி யோவென்
ருலோசனை செய்யும் வேளையிலே

## கட்டபொம்முவுக்கு தானுபதிப்பிள்ளையின் ஆதரவு ஆலோசனை

தானு பதிப்பிள்ளை யோசனைகள் செய்து
தனித் தளப்புகள் சொல்லலுற்றுன்
கோட்டை வாசல்வழி போகக்கூ டாதென்று
கொத்தள மேட்டிலே யேணிவைத்து
மேட்டு வழியாகத் தானிறங்கி அங்கே
கோட்டையை விட்டு வெளியேறி
இருட்டு நல்ல இருட்டிலே தானங்கே
சரட்டென்று சத்தங் கேளாமல்
காட்டுப் பொட்டிப் பகடையுந்தான் வழி
காட்டிப் போனுனே முன்னேறி
முள்ளெலி போலே தானூர்ந்து முழு
மோசம் வராமலே தான்தவழ்ந்து
வெள்ளெலி போலே கூவிக்கொண்டு வெகு
வேகமாய்ப் போருனே கம்பளத்தான்
வெளிகள் பார்த்து வெளியேறி சற்றே
விரசு விரசென்று சொல்லி
புளியந் தோப்பு நிழல்வழியே சற்றே
பேசாமல் போறதைப் பாருங்கடி !
பாரா மெட்டுகள் தான்கடந்து நல்ல
பாஞ்சைப் பதிக்கோட்டை விட்டகன்று
தாராள மாகவே தானடந்து தப்பிப்
போருனே போருனே கம்பளத்தான்

## கம்பளத்தார், நாகலாபுரம்வழி கடத்தல்

நடநட வென்று மூர்க்கமாய் நல்ல
நாகலா புரத்து மார்க்கமாய்
விடியக் காலங்க ளாச்சுதென்று விடி
வெள்ளி முளைக்கின்ற நேரத்திலே
நாகலா புரத்தில் வந்திறங்கி அங்கே
நாலா அளப்புகள் பேசுவராம்
போகலாம் போகலாந் தொண்டைமான் பூமிக்குப்
போகலாங் காடுஞ் சமதியென்று

## காளையார்கோவில் காட்டுவழி கடத்தல்

காளையார் கோவிலுக் காடுசென்று சதிர்க்
கம்பிளி போடலாந் தெம்பாகப்
பாளையக் காரத் துரைமகன் தான்நல்ல
பாஞ்சைப் பதிமன்ன னேதுசொல்வான்

## கட்டபொம்மன், காளையார்கோவிலில் பிள்ளை மகனை நிறுத்துதல்

பிள்ளைமகன் பிரதானிப் பிள்ளை நல்ல
தெள்ளிய வானிங்கே தானிருந்து
வெள்ளைக் காரர் தானறிந்து நாளும்
விற்பன மாக வெழுதுமென்முன்
பிள்ளை மகனை யிருத்திவிட்டு அப்போ
போனவக் கம்பளத் தார்களுந்தான்
பாளையக் கார ரனைவோரும் பெரும்
பாதையைக் கூடி நடந்தனராம்
முன்னும் பின்னுமாகப் போகையிலே வழி
மோசம் போனதை யென்ன சொல்வேன்

## ஊமைத்துரையும் சிவத்தையாவும் வழிதப்பிப் போதல்

சின்னையா ஊமைத் துரையுட னேதுரை
மன்னன் சிவத்தய்யா தன்னுடனே
தன்னை மறந்தாப்போல் திசைதப்பி அவன்
தான்மறந்து அஞ்சார் பேர்களுடன்
கன்னிவாடிச் சீமையை நோக்கித் தான்
கர்த்தன் ஊமைத்துரை போயினராம்
கட்டபொம்மு துரையைச் சேர்ந்தசனம் ஒரு
கையாக வைகைக் கரைசேர்ந்து
இஷ்டமுள்ள தம்பி ஊமைத்துரை தானும்
இன்னும் வரக்காணோ மென்றுசொல்லி
கன்னிவா டிச்சீமை போன தறியாமல்
கருத்தையா தானும் வழிகூடி
ஆகட்டும் பின்னே வரட்டுமென்று அதற்
கப்பால் வழிகூடிச் சென்றனராம்
சேகர மான சனத்துடனே வெகு
சிங்கார மாய்நடந் தன்புடனே

## கட்டபொம்மன் புதுக்கோட்டை நகரத்தில் தொண்டைமான் விருந்துபசாரத்தைப் பெறுதல்

தொண்டைமான் பூமி புதுக்கோட் டைநகர்
தொங்கலிலே வந்து சேர்ந்தனராம்
மண்டலம் புகழுந் தொண்டைமான் ராசன்
வந்து எதிர்கொண்டு கண்டனராம்

கண்டு உபசாரஞ் சொல்லியே தொண்டைமான்
　　கம்பளத் தார்க்கு விருந்துசெய்து
உண்டு இளைப்பாறிக் கட்டபொம்மு துரை
　　துண்ட ரீகமாகக் கொலுவிருந்தார்
ஊமைத் துரைதனைக் காணோமென்று சொல்லி
　　உள்விசார மாகத் தானிருந்தான்

## ஊமைத்துரை கன்னிவாடிச்சீமையை அடைதல்

அப்போது ஊமைத் துரைதானு மங்கே
　　அதிக விரைவாகத் தானடந்தும்
செப்பமுள்ள கன்னிவா டிச்சீமை நகர்
　　சேர்ந்தானே வீர பாண்டியனும்
கன்னிவா டிச்சீமை தான்சேர்ந்து அப்போ
　　கர்த்தன் ஊமைத்துரை யென்னசொல்வான்
நன்னய மாகிய அண்ணர் வரக் காணோம்
　　நாகரீக முள்ளசின் னையாவே
தொண்டைமான்பூமி பாதையை விட்டு நாம்
　　தூரத் தொலைவில் வந்துவிட்டோம்
மண்டலம் புகழுந் தொண்டைமான் பூமிக்கு
　　மார்க்கமாய்ப் போயிருப் பார்களென்று
வழிதப்பி வந்துவிட் டோமென்று சொல்லி
　　மன்னன் ஊமைத்துரை தான்மயங்கித்
தெளிவாய் யோசனை செய்யலுற்றார் நாமுஞ்
　　சீக்கிரம் போகணு மென்றுரைத்தான்
இரவும் பகலும் நடந்ததனு லப்போக்
　　காலுங் கையு மிகவசந்து

## ஊமைத்துரை, கருணீகர் வீட்டில் உணவு உண்டு இளைப்பாறுதல்

சாப்பிட் டிளைப்பாறிப் போகவேணு மென்று
　　தாட்டீகன் ஊமைத் துரைச்சாமி
கன்னிவாடி ஊரு தன்னிலே ஒரு
　　காணிக்கர் வீட்டி னிடமாக
அமுது படிகளுங் காய்கறிகளும் வாங்கி
　　அன்பாகத் தானுங் கொடுத்தார்கள்
அந்நேரம் பிள்ளை வீட்டினிலே யப்போ
　　அன்பாகச் சமையலுந் தானுச்சு
ஊமைத் துரையுடன் சேர்ந்த சனங்களும்
　　உச்சித மாக யிலைபோட்டு

சாப்பிட்டுத் தானுங் கையலம்பி அங்கே
தாகமுந் தீர்ந்து இளைப்பாறி
நாளைக்குப் போவோ மென்று சொல்லி
நன்னய மாகவே தானிருந்தார்

## தொண்டைமான், கட்டபொம்மனிடம் நகர்விட்டுவந்தக் காரணம் வினவல்

இவர்க ளிப்படித் தானிருக்க அங்கே
யேத்தமுள்ள தொண்டை மகாராசன்
மெட்டுள்ள மகராசத் தொண்டைமா னப்போக்
கட்டபொம் மேந்திரனைத் தான்பார்த்து
கட்டுள்ள பாஞ்சை நகரை விட்டுவந்தக்
காரணஞ் சொல்லிட வேணுமென்றான்
அப்போது பாஞ்சைத் துரைத்தானு மவ
ரந்தரங்கச் செய்தி யேதுரைப்பார்
செப்பமுடன் செய்தி சொல்லுகிறே னிந்தத்
தேசத் தரசனே ! கேளுமென்றான்

## கட்டபொம்மன் காரணங்கூறி அடைக்கலம் வேண்டுதல்

கம்பளத் தாருடன் பாஞ்சைப் பதியிலே
கனம் பொருந்திய ராசாளுகையில்
கும்பினி யார்பகை வந்ததனால் நாங்கள்
கோட்டை விட்டுவெளி யேறிவந்தோம்
தென்பாஞ்சை நகர்விட் டகன்றோ மிந்தத்
தேசத்தை நம்புதலாக வந்தோம்
நம்புத லாக உதவிசெய் தாலொரு
நாளு மறப்பது மில்லையென்றான்

## தொண்டைமான் கட்டபொம்மனுக்குக் கள்ளநினைவுடன் ஆலோசனைகூறல்

நல்லது தானென்று தொண்டை மகாராசன்
நாலா ஆலோசனை தானினைந்து
கல்லல் வருமென்று தொண்டை மகாராசன்
கள்ள நினைவுகள் தானினைந்து
கும்பினி யார்பகைக் காரனை நம்மள்
கூட்டுறவு பண்ண லாகாதென்று
தெம்பான தொண்டை மகாராசன் அதி
சீக்கிரஞ் செய்திக ளேதுரைப்பான்

காளையார் கோவிலுக் காடுதனில் சதிர்க்
கம்பளி போடலாந் தெம்பாகப்
பாளையஞ் செய்யப் பகையுமில்லை அங்கே
பட்டாளங் கிட்ட வாராதே யென்றான்

## விஷத்தை ஔஷதம் என்று நினைத்தது

அச்சமில் லாம லிருக்கலா மென்றங்கே
ஆதரவு சொல்லும் வேளையிலே
உச்சித மாகவே கம்பளத்தார் தம்பிக்
கெர்ச்சித மாகவே அங்குசென்று
செப்பமுடன் கொலு வீற்றிருந்தான் கதை
செப்பவே கேளுங்கள் நல்லோரே !
அப்போது தொண்டை மகாராச னங்கே
ஆலோ சனையாய் மனமுடைந்து
கட்டபொம்மு துரை நம்மிடத்தில் வந்த
காரியங் கும்பினி யார்கேட்டால்
திட்டப் படிக்குப் பொல்லாங்கு வருமென்று
சீக்கிரங் காயிதந் தானெழுதி

## நாட்டரசன் செய்தியை, வீட்டரசன் காயிதமூலம் கும்பினிக்குத் தெரிவித்தல்

நாடும் நகரு மறியாமல் பாஞ்சை
நாட்டரசன் தப்பி வந்ததுவும்
காடு செடியுள்ள வனம்பார்த்து இங்கே
ஓடி ஒளிந்து இருப்பதுவும்
வக்கணை வைத்தல்லோ முக்கிய மாகவே
வரிந்து காயிதந் தானெழுதி
தபாலில் காயிதந் தான்போட் டானந்தச்
சண்டாளத் தொண்டை மகாராசன்

## அக்கினீசுத்துரை கடிதங்கண்டு கழறுதல்

அஞ்சலில் காயிதம் வந்தது கண்டந்த
அக்கினி மேஜர் துரையறிந்து
வஞ்சகப் பொய்செய்யுங் கட்டபொம்மு துரை
மாத்தான் சமத்துக்கள் பார்த்தீர்களோ
ஏத்த முடன்மன ரம்மியமாய் நம்மோ
டெதிர்த்து சண்டைகள் செய்யாமல்
ராத்திரி காலத்தில் ஓடி ஒளிந்தல்லோ
நாடு கடந்தங்கே போனான்காண் !

போனாலும் விடுவ தில்லையென் றானவன்
போனமட்டும் இனிப் பார்ப்போமென்றான்
வீணாகத் தானல்லோ பீரங்கிச் சத்தம்
விட்டோமே கோடான கோடிலட்சம்
எட்டுநாளாய்ப் பாஞ்சைக் கோட்டையின் மேல்வெடி
சுட்டோ மொரு குண்டில்லாமல்
கட்டபொம்மு தப்பிப் போன சமாசாரங்
காயித மூலமாய் நாமறிந்தோம்

## அக்கினீசுத்துரை, பட்டாளத்திற்கு வடக்கே செல்ல உத்தரவிடுதல்

பட்டாள மேஜர்க்குப் பாஷைசொன் னான்அதோ
பாகி பயணம் வடக்கேயென்றான்
சிப்பாகி மார்கள் அவுல்தார் சீமையதார்
சேர்ந்து வடதிசை தான்கூடி
துப்புத் துரவும் விசாரித்துக் கும்பினித்
துரையும் வேகங்கொண் டேநடந்து
மண்டல மெங்கும் நடுங்கிடவே துரை
மார்க்கமும் வந்து இறங்கினராம்
தொண்டைமான் பூமியில் போயிறங் கித்துரை
தொண்டைமா னைக்கண்டு தான்பேசி

## கும்பினியார் காளையார்கோவில்காட்டை முற்றுகையிடல்

வளருங் காளையார்க் கோவில் காட்டையும்
வளைந்து கொண்டுதே பட்டாளம்

## கட்டபொம்மன் புலம்புதல்

தளர்ந்து கட்டபொம் மேந்திர துரையுமே
தான் தியங்கிப்போ யேதுசொல்வான்
என்ன விதியால் முடிந்துதென் றங்கே
யேங்கித் தளர்ந்து மிகப்புலம்பி
மன்னவன் கும்பினிப் பட்டாளம் வந்து
மதில் கோட்டையைப்போல் வளைந்துதையோ!
சக்கதேவி யொப்புத் தான்கொடுத்தாள் என்
தம்பியையும் வரக் காணோமென்று
முக்காலுந் தெய்வமு மில்லையோ! வெங்கள்
முன்னோர் செய்ததவ மில்லையோ!

தெய்வமே! நானென்ன செய்வே னென்றவன்
கைதனில் ஈட்டிகள் தானெடுத்து
வந்த விதிவந்து தானுக்கா லினி
வளைந்தாட வேணு மென்றுசொல்லி

## கட்டபொம்மன் ஒருவாறு தைரியங்கொண்டு கும்பினியாரை எதிர்த்தல்

மை வசியக்காரன் லக்கைய நாயக்கன்
மாப்பிள்ளை நாயக்க மாருடனே
சாதுரியஞ் செய்து பார்ப்போ மென்றுஒரு
மாதரி யாகவே தானெழும்பிப்
போதர வாகக் குலவையிட்டுப் புலி
போலவே அடிக்கிறான் பாருங்கடி !

## கும்பினியாரும் கட்டபொம்மனை எதிர்த்துச் சண்டையிடல்

அந்நேரம் அக்கினி மேஜர்துரை யங்கே
மின்ன லிடிபோலே தான்முழங்கி
வர்ணப்பட் டாளத்தை முன்னேவிட்டு அங்கே
மளமள வென்று முழக்கினராம்
செனரல்துரை புகழ் அக்கினீசு பின்னும்
என்னசொல் வான்உயுத்தக் களத்திலே

## அக்கினீசுத்துரை யுத்தக்களத்தில் பயமுறுத்திக் கட்டபொம்மு முதலானோரைக் கைது செய்தல்

அநியாயஞ் செய்யாதே கட்டபொம்மா! இப்போ
உன்னுயிர் வாங்குவேன் தப்பாது
சற்பனை செய்யாதே! பாவியென்று வெகு
விற்பனை யாகச் சமாசாரஞ்சொல்லிச்
சிப்பாகி மார்கள் திரண்டுவந்து அங்கே
கைப்பிடி மல்பிடி யாகவேதான்
கட்டபொம் மேந்திரனைத் தான்பிடித்து வெகு
திட்டி விலங்குகள் தானடித்து
மட்டுக் கடங்காத வெள்ளையா முத்தையா
மாப்பிள்ளை நாயக்கர் மார்களையும்
வேக மடங்கும் படியாக ஒரு
சேகர மாகவே தானடித்து
மோகனப் பாடகஞ் சாத்தினராம் வெகு
வேகமாய் வெளி யேறினராம்

## கட்டபொம்மன், தந்நிலைமையை நினைத்து வருந்துதல்

அப்போது கட்டபொம் மேந்திர துரைக்கு
அதிக ஆங்கார விம்மலுடன்
தப்பித மில்லாத் தம்பியில் லாததனுல்
தாழ்வு வந்ததென்று தான்மயங்கி
ஒன்பது கம்பளம் வீரமல்லு வெனக்கு
உற்ற துணையுந் தானில்லையோ !
அன்புள்ள மீனுட்சி ! யெந்தனுக்கு வந்து
ஆதரவு சொல்ல மாட்டாயோ !
டப்பை யெழுபத்தி ரண்டு துரைகளுங்
கட்டபொம்மு முந்தி தொட்டதில்லை
இப்போது கும்பினி அக்கினீ சுத்துரை
சற்பிணை விலங்கு தானடித்தான்
என்று கிலேசங்க ளுண்டாகி அங்கே
யேங்கி யிருந்தானே கட்டபொம்மு
அன்று சிவத்தையா முத்தையா வெள்ளையா
அனைவோர் களுந் தான்மயங்கி
வலையி லகப்பட்ட மான்போலே அங்கே
மயங்கி யிருந்தானே கம்பளத்தான்
ஆலையி லிட்டக் கரும்பதுபோல் சிந்தை
நைந்து இருந்தார்க ளப்போது

## கும்பினியார் பாராவுடன் கட்டபொம்மனை மூடுபல்லக்கிலே ஏற்றிச் செல்லுதல்

தேட்டுக்கு வாய்த்திடுந் தென்பாஞ் சைப்பதி
நாட்டுக்குப் பாளையக் காரனைத்தான்
கூட்டுப் பல்லாக்கிலே தானடைத்து சுத்திக்
கோட்டைக்கட் டுப்போலே பட்டாளம்
சிப்பாகி மார்கள் நெருங்கிவர அப்போத்
துப்பாக்கிப் பார்பண்ணிச் சூழ்ந்துவர
மாப்பிள்ளை நாயக்க மார்களையு மங்கே
வர்ணச் சிவிகையில் தானடைத்து
இப்படி யாகவே கெட்டிச்செய்து பின்னும்
என்னசொல் வான்துரை அக்கினீசு

## அக்கினிசுத்துரை புலன் அறிந்து கன்னி வாடிச் சீமை செல்லல்

கன்னிவா டிச்சீமை மலையிலே புலன்
கண்டோமென்று சொல்லித் தான்கேட்டு
நாடும் நகரும் நடுங்கிடவே அங்கே
தேடியே போகுதே பட்டாளம்
பாளைய மிம்படித் தான்வரவே யந்தப்
பார்த்தீபன் ஊமைத் துரைதானும்

## ஊமைத்துரை செய்தியறிந்து, மலைக்காட்டில் ஒளிதல்

ஊருக்குள் தானு மிருந்தவர்கள் இந்த
உளவறிந்து தானெல் லோரும்
பாளையம் வருகுதென்று கேட்டு அந்தப்
பார்த்தீபன் யோசனை செய்துகொண்டு
மலைக்காட்டி லொளிந்தார்களந்த
மன்னவர் கம்பளத் தார்களுந்தான்
அப்போது அக்கினி மேஜர் துரையுமே
அதிக விரைவாகத் தானடந்து
காடுஞ் செடியு மலைகடந்து அந்தக்
கன்னிவாடி ஊர்க்குள் வந்தனராம்

## கும்பினிப் பட்டாளம் ஊமைத்துரையைத் தேடுதல்

கன்னிவாடி ஊர்க்குள் வந்தவர்க ளந்தக்
கர்த்தன் ஊமைத்துரையைக் காணமல்
துப்புரவால் தானுந் தெரிந்துகொண்டு அங்கே
துருசாக மலைச் சாரலிலே
பாளையம் வந்து இறங்கியல்லோ வீரப்
பாண்டியன் ஊமைத் துரையைக்கண்டு
வாலியைப் போலே பதினேழு அக்குரோணி
தூளுப் பறக்க மலங்காட்டில்

## கும்பினி, கன்னிவாடிக் காட்டைநோக்கிச் சுடுதல்

மல்லர்கள் சோல்சர்கள் வெள்ளைக்காரர் துரை
கல்லு வெடிகள் கலகலென்று
பல்லைக் கடித்தவன் அக்கினி மேஜரும்
பாதையைக் கூடித் திடுதிடென்று

வந்து வளைந்ததே செந்திரு வளர்கன்னி
வாடி மலையுங் கிடுகிடென்ன

## ஊமைத்துரை, கும்பினிப்பட்டாளத்தை எதிர்த்து வேட்டையாடுதல்

அந்தநல் வேளையில் ஊமைத்துரை தானும்
சந்தோஷ வேட்டைகள் வாச்சுதென்று
சிங்கம் போலே யெழும்பினராம் வெற்றிச்
சங்கை யெடுத்து முழங்கினராம்
சங்க முழக்கி சிவத்தையாவும் தம்பி
பங்காரு நாயக்கன் முத்தையாவும்
சின்ன லெக்கையன் பெரிய லெக்கையன்
சேர்ந்த மல்லுக்காரர் சேருவையும்
கன்னி வாடிமலை வேட்டையென்று நல்ல
கட்டையன் பொட்டிப் பகடையுடன்
மைத்துன னாகிய முத்தன் பகடையும்
மட்டுக் கடங்காத மொட்டையனும்
கத்திகளாஞ் சுருட்டுக் கத்திகளாம் பட்டாக்
கத்திக ளெடுத்து வீசிக்கொண்டு
துண்டரீக மான ஊமைத்துரை சர
மண்டல வரிசையைப் பாருங்கடி !

## கும்பினியார் பச்சைமலைக் கோட்டை வரையில் துரத்தப்படுதல்

மண்டி வரிசைகள் போட்டுக்கொண்டு துரை
சண்டு பிறக்க மலைக்காட்டில்
நேருநே ராகவே வாரபேரை இரு
கூறுகூ றாகவே தான்பிளந்து
ஆயிரஞ் சோல்சரை ஒருமுக மாகவே
அரிந்து குமித்தானே ஊமையனும்
வச்சடி வாங்காமல் பச்சை மலைக்கோட்டை
வரைக்குள் துரத்திக் குத்தினராம்
கைச்சன்னைப் போட்டங்கே சாடிடுவான் வலு
உச்சாயக் காலன்போ லாடிடுவான்
சிலாமீன் போலப் பாய்ந்திடுவான் வெகு
கோலா கலமாக விரைந்திடுவான்
கலையைப் போலவே குத்துகிறான் மலைக்
கரடி போலவே உதைக்கிறான்

திருதிரு வென்று விழிக்கிருன் பெரு
வயிரி போலப் பறந்தடிக்கிருன்
குதிரையைக் குத்தி யிழுக்கிருன் சில
துரைமாரைக் குத்தி யழிக்கிருன்
மாப்பிள்ளே மாப்பிள்ளே யென்முன்னே வாவென்று
கூப்பிட்டுக் குத்துவான் ஊமைத்துரை
சாப்பாட்டு ராமா வாவென்று சன்னே
சாத்திக் குத்துகிருன் ஊமைத்துரை
இப்படி ஊமைத்துரை சண்டை செய்கையில்
ஏகியே பொட்டிப் பகடையுந்தான்
முத்தன் பகடையுஞ் சிவத்தையா முத்தையா
முன்னேறி யவர் தான்குதித்து
பதியிருந் தங்கே ஒளிந்திருந்தார்
பச்சை மலேக்கோட்டை வாசலிலே
பச்சை மலேக்கோட்டை யருகிலே வந்ததோர்
பண்பானக் கும்பினிப் படைகளே
குதிரை யேறி யெதிர்வரு வாரைக்
குத்தியே மல்லாத்தித் தள்ளுவானும்

## ஊமையன், விருபாக்ஷி மலேக்காட்டுக்குச் செல்லுதல்

எதிராக வந்தக் கும்பினிப் பட்டாளம்
இருபத்தி ரண்டங்கே பட்டாச்சு
இனிமேல் நம்மள் சாதுரியஞ் செய்து
இப்படி நிற்க முடியாதென்று
அதிலிருந்து விருப் பாச்சி மலேக்
கப்புறம் போய்விட்டான் ஊமையனும்
சுந்தர லிங்கமும் வீரமல்லு சேர்வையும்
தூங்க நரிப்பல்லு லெக்கையனும்
அந்தரங்க மாக விருப்பாச்சி மலேக்
கப்புறம் போய்விட்டான் பாருங்கடி !
கர்த்தன் சிவத்தையா முத்தையாவும் நல்ல
கம்பளச் சேருவைக் காரர்களும்
உத்தமன் ஊமைத் துரைக்கு முன்ஞக
வெட்டியாய்ப் போறதைப் பாருங்கடி !
ராமருடனே யெதிர்த்திடும் ராட்சதன்
ராவணன் பேர்பெற்ற ஊமையனும்
எமனே ! காலனே ! வீமனே ! விசையனே !
இந்திர செயித்தவன் ஊமையனே !

## அக்கினிசுத்துரை கட்டபொம்மனிடத்தில் ஊமைத்துரையை ஒப்புவிக்கக் கூறல்

ஆனத ஞலிந்த ஊமையனே இனி
யாரால் பிடிக்கவுங் கூடாதென்று
ஞானவான் அக்கினி மேஜர்துரை யல்லோ
தானுமே தீனி யருந்தாமல்
விம்மல் பொருமல்க ளுண்டாகிக் கட்ட
பொம்மு துரைக்கல்லோ ஏதுசொல்வான்
தம்மிட மாரிபம் ஊமைத்துரை தன்னை
நம்மிடங் கூட்டிவந் தொப்பி வைத்தால்
யாதொரு பொல்லாங்கு மில்லாமல் நாமள்
ராசியாய்ப் போறதே நிசமென்றான்
இப்படிச் சொல்லவே அக்கினீசுத் துரை
யேதுசொல் வான்கட்ட பொம்மனுந்தான்
எண்ணுதும் மெண்ணி மிகவாடி யப்போ
ஏங்கியே கட்ட பொம்முதுரை

## ஊமைத்துரைக்கு, கட்டபொம்மன் துயரத்துடன் கடிதம் எழுதுதல்

பாம்பு வாயி லகப்பட்ட தேரைபோல்
பரதவித்து மிக மயங்கி
சோம்பியே கட்டபொம் மேந்திரதுரை தானுந்
துயரங் கொண்டு மனமிடைந்து
காலுக்குங் கைக்கும் விலங்குபோட்டு அங்கே
கண்டிப்புச் செய்திருப் பதனாலும்
நம்மிட தம்பியை வரவழைத்தால் நமக்
கிந்த வருத்தங்கள் தீருமென்றும்
தம்பிக்கு அன்பான காயிதந் தானங்கே
தாஷ்டீக மாக வெழுதுவராம்
தம்பியுந் தானும் பிரிந்த விவரமும்
தானுமே வக்கணை யாயெழுதி
நாம ளிருபேரும் வரும்போது நடு
வழியில் வகைமோசம் வந்ததுவும்
தொண்டைமா னைக்கண்டு பேசியதும் அவன்
சூதாய்க் காட்டி லனுப்பியதும்
காளையார் கோவிலுக் காட்டிலே நாங்கள்
கலந்து இருக்கின்ற வேளையிலே
சற்பினை யாகவே தொண்டை மகராசன்
சடுதியில் காயிதந் தான்போட்டு

கும்பினி யானை வரவழைத்து அங்கே
கூடி வளைந்தார் நடுக்காட்டில்
அன்பான தம்பிநீ யில்லாத வேளையில்
அநியாய மாக வளைந்தார்கள்
நாங்களும் எங்களா லியன்றமட்டும் பார்த்து
நடுப் படையி லகப்பட்டோம்
அப்போது அக்கினி மேஜர் துரையுமே
அனியாய மாகவே தான்பிடித்து
ரெட்டை விலங்குகள் தானடித்து எங்களை
நிஷ்ட்டூரஞ் செய்கிறு னிப்போது
உன்னை வரும்படி நானழைத் தால்தம்பி
உகந்து ராசியாய்ப் போவோமென்றான்
ஆனத னாலினி யென்னை வேண்டித்தம்பி
அவசியம் வந்து சேரவேணும்
சத்திய மாகவே ராசி யாவோ மென்று
தானுரைத்தான் அக்கினி மேஜருந்தான்
புத்தியாய்க் கேட்டுத் தம்பியே நீபுறப்
பட்டு வந்திட வேணுமென்றும்
இப்படி வக்கணை வைத்தல்லோ அப்போ
தெழுதினான் கட்ட மொம்முதுரை
காயிதந் தன்னைத் தானெழுதி அந்தக்
கட்டபொம்மு துரை தானும்போட்டு

## கட்டபொம்மு கடிதத்தை, லெக்கைய நாயக்கனிடத்தில் கொடுத்தனுப்புதல்

லெக்கைய நாயக்கன் தன்னை யழைத்து
நாலா ஆலோசனை தான்பேசி
கக்கிஷக் காரன் நீ போய்அந்த
கர்த்தன் ஊமைத்துரை தன்னையும்
மற்றுமுள சேவுக ரானவோரையு மப்போ
மார்க்கமாய்க் கூட்டிவா வென்றுரைத்தான்
தப்பித மில்லாமல் தம்பிக்கும் அங்கே
உற்ற சமாச்சாரந் தானுரைத்து
அப்போது கட்டபொம் மேந்திர துரை
அக்கினி மேஜ ரிடத்தில்வந்து
வாகுள்ள லெக்கைய நாயக்கனுக்குத் துரை
மன்னனே விலங்கு தான்கழற்றிக்
காயிதந் தன்னைக் கொடுத்தனுப்பு மென்று
கருத்தையா தானு முரைத்திடவே

அப்போது அக்கினி மேஜருக்கு
அதிக சந்தோஷந் தானுகி
செப்பமுள்ள விலங்கு தான்கழற்றி அப்போ
சீக்கிரங் காயிதந் தான்கொடுத்து
விற்பன மாக விருப்பாட்சி மலை
மேவியே போவென்று தானுரைத்தார்

## லெக்கைய நாயக்கன் கடிதங் கொண்டுபோய் ஊமைத்துரையிடத்தில் கொடுத்தல்

அப்போது லெக்கைய நாயக்கனும் அங்கே
அதிக விரைவாகத் தானேடி
விருப்பாட் சிமலை தான்போய் வீரப்
பாண்டியனைக் கண்டு தான்தொழுது
மருப்படாத லெக்கைய நாயக்கன்
மார்க்கமாய் காயிதந் தானெடுத்து அங்கே
ஊமைத்துரைக் கையில் தான்கொடுத்து அங்கே
உற்ற சமாச்சாரஞ் சொல்லலுற்றுன்

## கடிதம் பெற்ற ஊமைத்துரையின் வருத்தமும் விருத்தமும்

காயிதந் தன்னை மிகவாங்கி அந்தக்
கர்த்தன் ஊமைத்துரை தான்பார்த்துத்
தாசீதையாய் வந்தக் காயிதச் செய்தியைத்
தானறிந்து ஊமைத் துரைச்சாமி
அண்ணன் செய்திகளைத் தான்பார்த்து அங்கே
அதிக துயரங்க ளுண்டாகி
கண்ணீர் தளும்பிக் கதறி யழுதவன்
கஸ்திகொண்டு வயிறு தானெரிந்து
விம்மல் பொருமல்க ளுண்டாகி மேல்
மேலுந் துயரங்கள் தானுகித்
தன்மையா லெக்கைய நாயக்கனைப் பார்த்துத்
தானுரைப்பான் வீரப் பாண்டியனும்
தொண்டைமான் சீமையில் நீங்களுந் தானங்கே
துன்பமில் லாம விருப்பீரென்றும்
மண்டலம் புகழச் சீர்த்தி யுண்டென்று
மகிழ்ந் திருந்தே னிப்போது
தொண்டைமா னிப்படி சற்பினை செய்கின்ற
சூதை யறியோமோ இப்போது
மண்டக் கனமுள்ள அக்கினிசுத் துரை
மாயமாய் வந்து பிடித்தானே?

நீங்கள் சுகமா யிருப்பீரென்று நாமும்
நிமிஷத்தில் போய்ச்சேர வேணுமென்றும்
நாங்களும் வந்து சேர்ந்துகொண்டு அங்கே
நாடெங்குந் தானும் அறிந்திடவே
சீர்த்தி சம்பாதிக்க வேண்டுமென்று நான்
இச்சித் திருந்தேனே இப்போது
பார்த்தீபன் கட்டபொம் மேந்திரத் துரை
பட்டப்பாடுகள் நானு மறியேனே
நானுமவ் விடத்தில் தானிருந்தால்
நன்னய மாகிய கும்பினியான்
தானுமே வந்து பிடிப்பானோ ? மெத்தச்
சமத்துகள் தானுஞ் செய்வானோ ?
பிறந்த வன்றைக்கே இறந்த காயமினிப்
பின்னே உயிர்வைத்துப் பார்க்கலாமா ?
கறந்த பாலையுங் காகங் குடியாது நம்மள்
தமையனை யிக்கட்டுச் செய்திடுவான்
என்று கிலேசங்க ளுண்டாகி அங்கே
யேற்றமுள்ள ஊமைத் துரைச்சாமி
கைச்சன்னை களுந்தான் போட்டு அங்கே
காரண மாக உரைத்தானும்
கிட்ட விருந்த சிவத்தையா முத்தையா
கேட்டு மயங்கித் துயரமானர்
கட்டையன் பொட்டிப் பகடையுங்
கண்ணீர் தளும்பியே தானழுதான்
மற்றுள்ள சேவுக ரெல்லோரும் அங்கே
மயங்கித் தானுந் துயரங்கொண்டார்
கற்புள்ள சக்க தேவித் துணையைக்
கண்டறி வோமென்று தான்தியங்கி

## அண்ணனைப் பார்க்க ஊமைத்துரை செல்லல்

விற்பன முள்ள சேவுக ரெல்லோரும்
மெய்சோர்ந் திருக்கின்ற வேளையிலே
ஊமைத் துரையுமே அப்போது அங்கே
உறுதியாய் வெளி யேறுமென்ருன்
சேமத்துடன் வெளி யேறுமென்று அங்கே
தீரன் உத்தர வாகிடவே
சேவுக ரெல்லோருந் தான்சேர்ந்து அங்கே
தீர்க்கமுடன் வெளி யேறினராம்

ஆயி மனோன்மணி சக்கதேவி யம்மன்
கிருபை யுண்டென்று சொல்லிக்
காடுஞ் செடியு மலைகடந்து அந்தக்
கன்னிவாடி மலைச் சாரலுக்கு
பாடும் புலவர்கள் கொண்டாட அந்தப்
பார்த்தீபன் ஊமைத் துரையும் வந்தான்
அண்ணனைப் பார்க்க வேணுமென்று துரை
ஆவலாய் வந்தானே அப்போது

## அக்கினீசுத்துரை, ஊமைத்துரையைக் கண்டு பட்டாள மேஜருக்கு உத்தரவு இடுதல்

சேவுக ருடனே தான்வரவே அப்போச்
சேர்ந்தக் கும்பினி அக்கினீசு
பட்டாளத் தூடே வரும்போது அந்தப்
பார்த்தீபன் அக்கினி மேஜருந்தான்
பட்டாளத் தைப்பார் த்துப் பாஷைசொல் லித்துரை
துஷ்டனைப் பிடியுங்க ளென்றுரைத்தான்

## ஊமைத்துரையை கைது செய்தல்

அப்போது கும்பினிப் பட்டாளம் அங்கே
அதிகக் கூட்டமாய்த் தானெழுந்து
மட்டுக் கடங்காத வீரபாண்டியன் காலில்
கைப்பிடி யாகவே தான்பிடித் தாரங்கே
கெட்டி கெட்டியென்று சிவத்தையா காலிலே
கிட்டி விலங்கல்லோ மாட்டினனே
காவல்கா ரன்வலு கம்பளத்தா னென்று
கால்விலங்கு கையில் தான்விலங்கு
வல்லவ னாகிய கம்பளச் சேருவை
எல்லோர்க்கும் விலங் கடித்திட்டான்
அப்போது ஊமைத் துரைக்குத் தானங்கே
அதிக விம்மல் பொருமலுடன்
செப்படி வித்தைப் போலாச்சே நம்மள்
சேவுகத் தன்மைக ளிப்போது
தெய்வமே யென்று ஊமைத்துரை தானும்
தியங்கி மயங்கியே தானிருந்தான்
கம்பளத் தார்க ளெல்லோரு மங்கே
கலங்கி யிருக்கின்ற வேளையிலே

## அக்கினீசுத்துரை, தானாபதிப்பிள்ளையைத் தேடி நாகலாபுரம் செல்லல்

அன்பான பிள்ளை மகனிருக் கின்றவூர்
அறிந்து அக்கினி மேஜர்துரை
நாகலா புரத்தில் பிள்ளை யிருந்ததை
நன்னய மாகவே தானறிந்து
போகலா மென்றுதான் அக்கினி மேஜரும்
புறப்பட்டான் பாளையந் தன்னுடனே
மூடுபல் லாக்கிலே தானடைத்து இவர்களை
முத்திரை வைத்தல்லோ தானடைத்து
மேல்பக்கம் கீழ்ப்பக்கம் நாலுபக்கம் பாரா
மெட்டு மெட்டாகவே சூழ்ந்துவர
சாலை பாதைவழி தான்கூடி மதுரை
தன்னி லிறங்கியே தீனியருந்தி
தச்சணம் பூமியில் பட்டாளம் அங்கே
சேர்ந்து வருகுதே மெட்டாக

## தானாபதிப்பிள்ளையைக் கைது செய்தல்

அச்சணம் நாகலா புரத்தில் வளைந்துஅங்கே
அன்பான பிள்ளை மகனையுந்தான்
கைப்பிடி யாகவே தான்பிடித்து அங்கே
கண்டிப்புச் செய்தானே கும்பினியான்
சிப்பாகி மார்கள் வெளிப்புறங் காலாலப்போத்
துடிக்கத் துடிக்க இடித்திடுவான்

## கும்பினியார் பாளையக்காரரிடத்தில் வீரியம் பேசுதல்

கத்தி யுறைவிடு மென்பார்கள் அடே
கட்டா மிருசுக்கோ வென்பார்கள்
சித்திரச் சாவடி மெத்தையெங் கேயடா ?
தீவட்டிக் கொலுச்சிங் காரமெங்கே ?
நித்திரை வேளையி லத்தரிப் பானிச்சோ
சத்துரு மோசங்கள் செய்தீர்களே
எத்தனை சோல்சரைக் கொன்றீர்களே சீமை
யெங்கெங்குங் கொள்ளை யடித்தீர்களே
பொல்லாங்கு செய்யாதே கட்டபொம்மா ஒரு
போதும்பார் உன்னை விடுவதில்லை

### சென்னை-கவர்னர்ஜெனரலுக்குக் கம்பளத் தாரைக் கைதுசெய்ததைக் கடிதமூலம் அறிவித்தல்

எல்லாந் தெரியும் பாரென்று கவனர்க்கு
எழுதிப் போட்டானே காயிதமும்
அஞ்சலில் காயிதந் தான்போட் டாரங்கே
அக்கினீசுத் துரை யப்போது
காயிதம் பார்த்துக் கவர்னர் துரைகளும்
ஞாயமாய்த் தீர்ப்புக ளேதுசொல்வார்

### சென்னை-கவர்னர்ஜெனரல், கம்பளத்தாரைத் தூக்கிலிடும்படி அக்கினீசுக்கு அறிவித்தல்

ஏழுவா லோசனை துரைகளும் அங்கே
ஏகமாய்க் கூடியே தான்பேசி
விற்பன தானுபதிப் பிள்ளையைப் பார்த்து
மெய்கலங்கிச் சிந்தை தான்வாடி
வாழுங் கவர்னர் மெண்டர்களும் அங்கே
மாற்றுக் கடிதம் எழுதுவராம்
நன்றுகாண் பிள்ளை மகனையுந் தானங்கே
நாகலா புரத்திலே தூக்கிடவும்
கயத்தாற் றிலே கட்டப் புளியிலே
கட்டபொம் மைத்தானுந் தூக்கிடவும்
ஞாயம்போல் நடக்காதக் கட்ட பொம்மு
ராசனையும் பிர தானியையும்
தூக்கு மரத்திலே போடும்படி மற்றத்
துட்டர் ஊமைத் துரையுடனே
கூக்குரல் வாராம் பாளையங் கோட்டைக்
குமிசலான் சயிலக் கூடத்திலே
நாலு நிலவரைக் கோட்டைக்குள்ளே பொலிக்
காளைபோல் விலங்கில் போடுமென்றான்
வேளையில் கவர்னர் உத்தர வின்படி
வேகமா அஞ்சலில் காயிதமும்
வந்ததே அக்கினி மேஜ ரிடத்தினில்
மார்க்கமாய்க் காயிதம் அப்போது

### அக்கினீசுத்துரை, சென்னை-கவர்னர் ஜெனரலின் கடிதத்தைக் காணுதல்

அந்தச் சமாச்சாரம் அக்கினி மேஜரும்
அடக்கமாய்ச் செய்தி தனையறிந்து
அந்தப் படியே ஆகட்டு மென்றல்லோ
அக்கினி மேஜர்தா னப்போது

## நாகலாபுரம்-வேப்பமரத்தில், தானுபதிப் பிள்ளையைத் தூக்கில் போடுதல்

நாகலா புரத்தி லப்போது சகல
ராசர்களும் வந்து தானிருக்க
நாகலாபுரங் கோட்டைக் குள்ளே அங்கே
டப்பைச் சனங்க ளறிந்திடவே
ஏகமாய்ப் பாளையக் காரருட னங்கே
யெட்டையா புரந்துரை வந்திருக்க
வேகமுட னதி வேகமுட னங்கே
வேப்ப மரத்தில் கயிறுபோட்டு
தீர்ப்புநா ளுஞ்சரி யாச்சுதென்று சொல்லிச்
சீக்கிரம் பிரதானி யைத்தானே
வேப்ப மரத்திலே தூக்கினராம் அதி
வேகமாய் அக்கினி மேஜருந்தான்
நாகலாபுரம் வேப்ப மரத்திலே பிள்ளை
நாக்கு ஒருமுழம் நீளும்படி
ஆகமுள்ள பிர தானி உயிரல்லோ
ஆதி சிவலோகஞ் சேர்ந்ததுவே
தூக்கு மரத்திலே தானு பதியை
டாக்குத் துரைவந்து பார்த்தனராம்
பார்க்குமுன் னேயுயிர் போகு மதைப்
பட்டாளங் கண்டு மகிழ்ந்திடவே

## அக்கினிசுத்துரை, பாளையங்களை எச்சரிக்கை செய்தல்

தீர்க்கமாய்ப் பட்டாள மகிழ்ந்திடவு மங்கே
தீரவான் அக்கினி யேதுசொல்வான்
டப்பை யெழுபத் திரண்டு பாளைய
ராணுவத் தார்கள் தங்களுக்கும்
தப்பிதஞ் செய்தபேர்க் கிந்தப்படி யென்று
தாட்டீகன் அக்கினி மேஜர்சொல்லிக்
கம்பளத் தார்களை முன்னேவிட்டுச் சுத்திக்
கட்டுமெட்டாய்ப் பாரா நில்லுமென்றான்

## கட்டபொம்மனும் ஊமையனும் ஆராத்துயரங் கொள்ளல்

அப்போது கட்ட பொம்மு துரையும்
அதிவீர பாண்டியன் ஊமையனும்
விற்பன தானுபதிப் பிள்ளையைப் பார்த்து
மெய்கலங்கிச் சிந்தை தான்வாடி

ஆராத் துயரங்க ளுண்டாகி யங்கே
அடித்து மோதியே தான்மயங்கித்
தீராதக் கோப ஆங்காரங் கொண்டங்கே
செல்வன் சிவத்தையா முத்தையாவும்
இப்படிக் கம்பளத் தாரிடைந் தாரங்கே
அவரவர் விதிகளை நொந்துகொண்டார்

## அக்கினீசுத்துரை, கட்டபொம்மனை கயத்தாற்றில் புளியமரத்தில் தூக்குப்போடுதல்

அப்போது அக்கினீசுத் துரையும் அங்கே
அதிக விரைவாக வெழும்புமென் ருன்
கம்பளத் தார்களைச் சுத்தியல்லோ
கட்டுமெட்டாய்ப் பாரா நிற்கச்சொல்லி
கனவான் அக்கினி மேஜர்துரை யங்கே
கம்பளத் தார்களை முன்னேவிட்டு
நினைவாய்ப் பதனம் பதனமென்று வொரு
நிமிஷத்தில் கயத் தாறுசென்று
பயத்துட னேதான் அக்கினி மேஜரும்
பாராக் காரரைச் சூழவைத்து
எட்டை யாபுரஞ் சமீந்தாரையு மங்கே
யேகம தாக வரவழைத்துச்
சட்ட திட்டப்படித் தான்பேசிக் கட்ட
பொம்மு துரைமுகந் தான்பர்ர்த்துத்
திட்டப் படிக்கு நடவாமல் நீயுஞ்
செய்யுங் குறும்புக ளதனாலே
வம்பு மரத்திலே தூக்கும்படி. எங்கள்
கும்பினி உத்தர வானபடி
தெம்பான அக்கினீ சுத்துரையும் அங்கே
சீக்கிரம் புளிய மரத்தில்வந்து
சீக்கிரங் கட்டப் புளிதனிலே அங்கே
மேற்குக்கொப்புத் திட்ட மாகுமென்று
பட்டா ளத்தைப் பாஷைசொன் னனந்தப்
பார்த்தீப னக்கினி மேஜருந்தான்
கொட்டாரங் கொள்ளை யடித்தானே வலு
துஷ்டனடா கட்டப் பொம்மனடா
வாயிதா நாளுஞ் சரியாச்சுக் கவர்னர்
மட்டிட்ட நாழிகை தானச்சு
காயிதாப் படிக்குத் தூக்குமென்று அங்கே
கட்டப் புளியில் கயிறுபோட்டு

கட்டப் புளிமரந் தன்னிலே துரை
கட்டபொம்மு தனைத் தூக்கினராம்
வயத்திலே விம்மல் பொருமலுட னங்கே
வாயினல் ரத்தம் பரியுதே
கயத்தாற் றிலே கட்டப் புளியிலே
கருத்தையா தலை தூக்கிடவே

### ஊமைத்துரை, முகத்திலே அறைந்துகொண்டு அழுதலும் புலம்புதலும்

கண்டந்த ஊமைத் துரைதானு மவன்
கையாலே முகத்திலே தானறைந்து
மண்டிமண்டிக் கண்ணில் நீரோட விம்மி
வாய்விட் டலறியே யேதுசொல்வான்
என்பேச்சுக் கேளாதப் பாளையக் காரர்கள்
இனிமேல் நீங்க ளெல்லோருங்
கும்பினி யாருக்குப் புல்லும் விறகுங்
குதிரை முளையுஞ் சுமப்பீர்கள்
ஊமைத் துரை யூட பூங்காரம்
ஒருவராலுஞ் சொல்ல மூடியாது
எப்போது காண்பேன் என்றுசொல்லி அவன்
குப்புற விழுந்து தான்புலம்பி
அநியாய மாக அக்கினி மேஜர்
அடைவுட னென்னை வரவழைத்துச்
சற்பிணை பண்ணி மோசஞ்செய்து இப்போத்
தமைய னுயிரையும் வாங்கினனே
என்று அழுது புலம்பின ராமங்கே
யெல்லோருந் துக்கங்கொண் டாடினராம்

### ஊமையனுக்கு அக்கினீசுத்துரை அறிவு கூறலும், பாஞ்சைநகர் செல்லலும்

அப்போது அக்கினி மேஜர் துரை யவர்
ஆதரவாய்ச் சமாசாரஞ் சொல்லித்
துர்ப்புத்தி யாக நடந்தத னலிந்தச்
சற்பிணை மோசங்கள் தானச்சு
ஞாயமாய்ச் செய்தி பேசினர்கள் துரை
ராசன் சபதமுஞ் சொல்லினராம்
பாகிப் பயணம் புறப்படென்று அந்தப்
பாஞ்சை நகரத்தில் போயிறங்கி

## பாஞ்சைநகர்க் கோட்டையையும் மதில்களையும் தகர்த்துவிடுதல்

சித்திரச் சாவடி மெத்தை வீடுமுதல்
சேரத் தகர்த்துப் பொடியாக்கிக்
கொத்தள நெட்டையுந் தானிடித்துச் சுத்துக்
கோட்டை மதிலையுந் தான்தகர்த்து
இங்கிலீஷுக் கொடி தானுட்டித் துரை
அங்கேதான் பாளையங் கோட்டையிலே

## அக்கினீசுத்துரை பாளையங்கோட்டைக்குச் சென்று கூடாரமடித்தல்

பாளையங் கோட்டையில் போயிறங் கித்துரை
பாங்கானக் கூடாரந் தானடித்து
தாளைபோல் கம்பளம் ஊமைத் துரையுட
காலுக்கு ரெட்டை விலங்கடித்து
துட்டு விலங்குத் தொடைவிலங்கு வெடி
கெட்டி விலங்கல்லோ மாட்டிவிட்டான்
துஷ்டத் தனஞ்செய்யும் பேரை யெல்லாஞ்சட்ட
திட்டப் படியாய் விலங்கடித்தான்

## ஊமைத்துரைக்கு நித்தம் ஒரு ரூபாய்ப் படியளத்தல்

சுத்தவீரன் ஊமைத் துரை செலவுக்கு
நித்தம் ஒருரூபாய்ப் படியமர்த்தி
மத்தப் பேருக்கெல்லாம் மாகாணி ரூபாய்
நித்தங் கொடுமென்று சொல்லினராம்

## அக்கினிமேஜர்துரை கும்பினிப் பட்டாளத்திற்குக் கண்டிப்பு உத்தரவு போடுதல்

சித்தனும் பொட்டிப் பகடையடா வேலை
முற்றுஞ் செய்யக்கெட்டிக் காரனடா
நித்தியங் கம்பளத் தாருக்கல்லோ சாமான்
பத்தியாய் வாங்கி வரும்படியாய்ப்
பொட்டிப் பகடைதான் போறபோது மவன்
போயிட்டு உள்ளே வரும்போதும்
கெட்டியாய்ச் சோதித்து விடுமென்றுன் பின்னால்
கேள்விகள் கேட்பது உஷாரென்றுன்

மந்திரக் காரப் பகடையடா தம்பி
பத்திரமாய்ப் பாரா நில்லுங்கடா
சத்திராதி ஊமையன் கைதனிலே பட்டாக்
கத்திக ளகப்பட்டால் கொடுத்திடுவான்
பார்த்தா லித்தினிப் போலிருக் கானிவன்
சூத்திர வித்தைகள் நானறிவேன்
மாத்தான் வஞ்சகக் காரனடா பாகி
மாயக்கா ரன்வலு வம்பனடா
பத்திர மாய்ப்பாரா நில்லுமென்று வெகு
உத்தரவு கண்டிப்பாகச் சொல்லி
கத்திமே லாணைகள் வைத்து உறுதியாய்ப்
பத்துநூறு பேரையுந் தானிருத்தி
கடுங் கோபிகள் வாளுருவுஞ் சோல்சர்
கர்னலுக்கு உறுதி சொல்லிக்கொண்டு
அடர்ந்த பொல்லாங்கு வாரா மலிங்கே
ஆசராக விரு மென்றுரைத்து
எட்டையா புரந்துரைக் கான சமாசாரம்
எச்சரிக்கை யாக இருமென்று

## அக்கினீசுத்துரை சென்னைப்பட்டணம் ஏகுதலும் விளம்புதலும்

இப்படியாகச் சமாச்சாரஞ் சொல்லி அங்கே
யேகினனே சென்னைப் பட்டணந்தான்
பட்டாளந் தன்னை யெழுப்பிக்கொண்டு சென்னைப்
பட்டணஞ் சேர்ந்தானே அக்கினீசு
நன்னய மானக் கவர்னரையுங் கண்டு
நடந்த செய்தி மகிழ்ந்துசொல்லி
செனரல் துரையுங் கவர்னரையுங் கண்டு
சீமையுங் கைவச மாச்சுதென்று
கும்பினிக் காரியம் வெற்றியென்று வெகு
சம்பிர ஆலோசனை யாயிருந்தான்
அன்பானக் கும்பினியின் துரைமார்க ளங்கே
அதிக ஆச்சரியந் தானுகிச்
சந்தோஷ மாக இருந்தார்கள் கதைச்
சமத்தைச் சொல்லுவேன் தோழியரே!
இவர்க ளிப்படித் தானிருக்க அங்கே
ஏத்ததோர் பாளையங் கோட்டையிலே
அன்பான பாளையங் கோட்டையி லேதம்பி
ஊமைத் துரையுடப் பூங்காரம்

என்னசொல் வேன்கதை யென்னசொல் வேன்தமிழ்
இங்கிதங்கள் கேளுங்கள் மின்னுரே !

## பாளையங்கோட்டையில் ஊமைத்துரை சித்திரவதைபடுதல்

கன்னி சக்கதேவி கோவில் முன்பாய்ச்சதிர்க்
கம்பளி போட்டுக் கொலுவிருந்தான்
சல்லாப் புடவையுஞ் சாலுவையுந் தம்பி
சரிகைச் சோமனும் புணர்ந்தவராம்
உல்லாச மாய்க்கும்மி யடித்தவன் வெகு
உச்சாய மாய்ப்பதம் படித்தவன்
சிலைமதன் போ லிருந்தவ னிப்போ
வலையி லகப்பட்டு விழிக்கிருன்
தண்ணீர் நல்லத் தண்ணீர்க் கிடையாமல்
சாதங் கரிகளும் வேண்டாமல்
சுண்ணும்பு நீரி லிருந்த துயரத்தை
யென்னுலே சொல்லி முடியாது
கோடை காலத்து மழைபோலே மேட்டுக்
குப்பையில் குன்று மணிபோலே
ஆடையு மன்னமு மில்லாமல் பனி
வாடை யாலேமெலி வாகுதையோ !
இப்படி யாக ஊமைத்துரை யங்கே
ஈரைந்து மாதம் அவதியதாய்
நற்புக ழாய்க்கதை சொல்லுகி றேன்வெகு
நயமுள்ள முத்து வீராகி
அரிசி காய்கள் கரிச்சா மான்அதற்
கான கடைக்கிரை யங்களுந்தான்
விரசாய் வாங்கி வரும்படி யாய்முன்னே
வேலை நியமித்தப் பிரகாரம்
பொட்டிப் பகடையும் மெட்டுக ளாகவே
போயிட்டு உள்ளே வரும்போதும்
சட்டமாய்ச் சோதனை தான்கொடுத் துக்கடைச்
சாமான் வாங்கித் தலையில்வைத்து
வாரதும் போறது மாயிருப்பா னந்த
மாத்தியன் பொட்டிப் பகடையுந்தான்
காரியக் காரப் பகடையுந் தானிப்படி
ஈரைந்து மாதமாய் வேலையுடன்
இப்படி யாக இருக்கையி லேகதை
எப்படிச் சொல்லுவேன் தோழியரே!

## ஊமைத்துரை, தன்நிலைமையைக் கடவுளர் களிடத்தில் சொல்லி முறையிடுதல்

பாராக் கவலைக ளுண்டாகி வீர
பாண்டியன் ஊமைத் துரைதனக்கு
வீரியக் கோபங்கள் தானுகிச் சுத்த
வீர னுடம்பு படபடென
இந்த விடைஞ்சலைப் பார்ப்பதற்கு மணி
மந்திரந் தந்திரந் தானில்லையோ!
கந்தா! கடம்பா! திருச்செந்தூர் முத்தையா!
எந்தன் துயரத்தைத் தீருமையா!
நந்தா! முகுந்தா! அரிநா ராயணு!
ரெகு ராமச் சந்திரா!
சொந்த அடிமைக் குதவு மனுமந்தா!
வந்து தைரியஞ் செய்யுமையா!
ஆளுங் குலதெய்வம் வீரமல்லு! வெனக்
காதரவு சக்கதேவி! சொல்லு!
பாழூராய்ப் போனதோர் பாஞ்சால நாட்டினில்
வாழுங் குடியேற்றி வைத்தாக்கால்
பொங்க லிட்டுச்சங்கை செய்வேனம்மா! தாயே!
மங்கள நல்வாக்குச் சொல்லுமம்மா!
எங்களுக் குக்கதி நீயல்லாது துணை
எங்கு முண்டோ விந்த வையகத்தில்

## ஊமைத்துரை, சிவத்தையாவினிடத்தில் ஆலோசனை கேட்டல்

சுத்த வீரனென்று பேர்போச்சு முற்றுஞ்
சொல்லிச் சிரிக்கவும் நாளாச்சு!
உத்த சிவத்தையா யோசனைகள் எந்தன்
சித்தப்பா சித்தப்பா சொல்லு! சொல்லு!
நாட்டினில் கோட்டைகள் தான்போட்டு நம்மள்
ராச்சியந் தன்னையும் ஆளும்படி
தேட்டில் குபேரன் சிவத்தையா வேபதில்
செய்திகள் சொல்லு! முத்தையாவே!
என்று ஊமைத்துரை தான்கூற நல்ல
தென்று சிவத்தையா யேதுசொல்வான்

## ஊமைத்துரைக்குச் சிவத்தையா ஆலோசனை கூறுதல்

நன்ருக நான்சொல்லக் கேளுமையா ! நம்மள்
பந்து சனங்க ளனைவருக்கும்
வாஞ்சையாய்க் காயிதம் போடவேணும் வர
வழைத்து நாம்வெளி யேறவேணும்
இந்தப் படியாகப் பேசியல்லோ வங்கே
சொந்தமாய்க் காயிதந் தானெழுதிப்
பந்து சயிலக் கூடப்பதி யெலாங்கண்டு
பாஞ்சால நாட்டுக்கோர் காயிதமும்
கொண்டுபோ யங்கே கொடுப்பதற்குப் புலி
குத்தி நாயக்கனிடஞ் சேர்வதற்குத்
தெண்டம் பெறும்படி வாராமல் பாராச்
சிப்பாகி மார்க ளறியாமல்
பொட்டிப் பகடைதன் காலில் செருப்பிலே
பொழிந்து காயித முள்ளேவைத்து
திட்டமாய்ச் சோடுகள் போட்டுக்கொண்டு வலு
கெட்டிக் காரா! வெளி யேறுமென்ருன்

## புலிகுத்திநாயக்கனிடம் பொட்டிப்பகடை கடிதம் எடுத்துச் செல்லல்

பொட்டிப் பகடையும் புறப்பட்டான் சோடு
போட்டு உல்லாசமாய் நடந்திட்டான்
மெட்டுள்ள பாராவுங் கடந்திட்டான் ஒரு
சட்டி ஓடுகையி லெடுத்திட்டான்
கஞ்சிக் கலசந் தலைமேலே ஒரு
கப்பறை ஓடு மதன்மேலே
அஞ்சிப் பகடையுங் கொஞ்சிக்கொஞ்சி அவன்
அஞ்சியஞ்சி வெளி யேறிடவே
கடைக்குப் போயிட்டு வாரனென்றும் மலங்
காட்டு விறகுக்குப் போறேனென்றும்
திடமுடனே வெளியே குதித்துப் பாராச்
சிப்பாகி மார்க்குப் பதிலுரைத்துத்
தாராள மாகவே தானடந்து அங்கே
போருனே பொட்டிப் பகடையுந்தான்
சாரா யங்களுங் குடிக்கிருன் பாஞ்சைத்
தலத்தை நோக்கியே நடக்கிருன்

## புலிகுத்திநாயக்கன் கடிதம் காணுதலும், பதிலெழுதி யனுப்புதலும்

தீரன் புலிகுத்தி நாயக்கனைக் கண்டு
தெண்டனிட்டுப் பொட்டிப் பகடையுந்தான்
வீரிய மாக வுரைத்திட்டா னந்தக்
காயிதங் கைதனில் கொடுத்திட்டான்
காரிய மானதோர் காயிதச் செய்தியை
ஊரிலுள் ளோர்களுந் தான்பார்த்து
நூறு இருநூறு கம்பளத் தாரங்கே
நொடியில் வந்தல்லோ கூடினராம்
பத்துப் பதினைந்து நாளைக்குள் ளேஅந்தப்
பாளையங் கோட்டை சவாரிவந்து
வெத்தி செய்திவர லாகுமென்று ஒரு
பத்தியாய்க் காயிதந் தானெழுதி
முத்திரை வைத்தல்லோ முடித்திட் டானந்த
முன்போலச் சோடுசேர்த் தனுப்பிட்டான்
புத்தியுள்ள பொட்டிப் பகடையும் புலி
குத்தி நாயக்கனிடம் பேசி
கடும் பகடையுங் குடுகுடென் றொரு
காயிதம் வாங்கித் திடுதிடென்று
நடை துருசுக ளாகவே தானவன்
நாலா அளப்புகள் தானினைப்பான்

## பொட்டிப்பகடையின் சலசலப்பு

வந்து வெகுநேர மானதி னலங்கே
சந்தேகஞ் சிப்பாகி சொல்லுவானே
பந்து சயிலக் கூடம்பாராச் சிப்பாகி
யெந்தனைப் பார்த்து விசாரணைகள்
எங்கே போனாயடா வென்று சொல்லி அவன்
தன்கைப் பிரம்பா லடிப்பானே
கங்கு லிருள்வெகு நேரமாச்சே மறு
நாளுங் கழித்து விடிந்துபோச்சு
அத்தரி பாணிச்சோ மாதரிச்சோ மணி
யெத்தனை நேரங்க ளாச்சுதென்று
சத்துங் கெணியாமல் மோதுவானே அவன்
கவாத்துக் காலால் மிதிப்பானே
வெடிப்புடன் காலா லிடிப்பா னேகடு
கடுப்பாய் நாய்போல் குலைப்பானே

அடிவயிறு வலிக்கு தென்று கால்
 பாசாங்கு செய்தானே சுறுக்கென்று
கிளிக்குஞ்சு போலச் சுழன்றிடு வானங்கே
 வழிக ளெங்கும் விழுந்திடுவான்
பந்துக்கால் சயிலக் கூடத்திலே பொட்டிப்
 பகடை சென்றனே அந்நேரம்
வந்திடு பொட்டிப் பகடையைத் தான்பாராச்
 சிப்பாகி பார்த்தங்கே யேதுசொல்வான்
நேத்துநீ போனதும் இன்றைக்கு வந்ததும்
 சூஸ்திர மென்னடா பாகியென்றன்

## காலங்கடந்ததற்குப் பொட்டிப்பகடைப் பொய்க்காரணம் கூறல்

வார்த்தைகள் கண்டிப்பாய்த் தான்கேட்க வலு
 மாதியன் பொட்டியு மேதுசொல்வான்
விறகொடிக்க நான் போகையிலே அங்கே
 விதியாய் வந்துதே மோசமையா
அரிநா ராயணா! கோவிந்தா! இப்போ
 ஆபத்து வேளைக் குதவுமென்று
குப்புறக் குப்புறத் தான்விழுந்து வயிறு
 ரொம்ப வலிக்குதே யென்றழுதான்
அப்போது மெய்யென்று சிப்பாகி மார்களும்
 ஆதர வாகப் பகடையைத் தான்
விலங்குக் கூடத்தில் போடாவென்பான் ஒரு
 வெள்ளைப்பூடு தின்னு பாகியென்றன்

## வயிற்றுவலிக்கு வெள்ளைப்பூண்டு தின்னல்

குலுங்கக் குலுங்கப் பொட்டிப் பகடையும்
 விலங்குக் கூடத்தில் நுழைந்திட்டான்
ஊமைத் துரையுங் கர்வித மாயந்த
 உட்புலன் சேரவே தானறிந்து
ஓமமுஞ் சுக்கும் பெருங்காயமு மங்கே
 ஊட்டினன் பொட்டிப் பகடைக்குத்தான்
பைய விழித்தல்லோ பார்த்திட்டான் பொட்டிப்
 பகடை வேதனை தீர்ந்திட்டான்
ஒய்யார மாகவே எழும்பிட்டா னங்கே
 ஊமைத் துரையைப் பணிந்திட்டான்
வம்பான காயிதங் கொடுத்திட்டான் போய்
 வந்த சமாச்சாரம் மொழிந்திட்டான்

## ஊமைத்துரையின் மகிழ்ச்சி

தெம்பானக் காயிதம் பார்த்து ஊமைத்துரை
சிந்தை மகிழ்ந்தங்கே தானிருந்தான்
தச்சணம் பூமி திசைகாவல் தெற்குச்
சீமை நமக்குத் திரும்புச்சென்று
நிச்சய மாகவே ஊமைத் துரைவெகு
கெர்ச்சித மாக விருந்தானும்
கும்பினிப் பாராவுந் திட்டவட் டங்களாய்ச்
சம்பிரதாய மாக நின்றனராம்
கம்பளத் தாருட சம்பிர தாயங்களை
அன்பாகக் கேளுங்கள் நல்லோரே !
முத்தையா ஊமைத் துரைதானு முந்தி
வெட்டியாய்க் காயிதம் போட்டபடி

## பாஞ்சைப்பாளையக்காரர் படையெடுத்தல்

கொத்துமானத் தத்தில் விஸ்தார மாய்ப்புலி
குத்தி நாயக்கனிடம் பேசி
தேட்டி லதிக நிதிவளரும் பாஞ்சை
நாட்டினில் கம்பளச் சேருவையும்
வேட்டைப் படைபோலே கூடினராஞ் சுத்த
வீரர்கள் வீரியங் கூறினராம்
கத்தி யெடுத்துக்கை வீசுவராம் வெகு
விஸ்தார மாய்ச்சிலம்பஞ் செய்தனராம்
எத்தனை கம்பளந் தானுச்சு கணக்
கெத்தனை யெத்தனை பேராச்சு
கைக்காரன் தங்க வெடிக்காரன் சரி
கணக்கு நூறுபேர் தானுச்சு
மைக்காரன் வளை தடிக்காரன் ஒரு
வரிசை நூறுபேர் கம்பளத்தான்
பாளையங் கோட்டைக்குள் தான்புகுந்து வீர
பாண்டியன் ஊமைத் துரையிடத்தில்
வேட்டைக ளாடித் திரும்புதற்கு நம்மள்
நாட்டுத் தலைவனைக் காண்பதற்கும்
கோட்டைக்குள் போற தெப்படியோ சற்றே
சித்து விளையாட்டுப் பார்ப்போமென்று

## பாளையங்கோட்டைக்குள் கம்பளத்தார் மாறுவேடத்துடன் நுழைதல்

உருமாறி வேஷங்கள் போடவேணு மென்று
உறுதி யாகவே பேசிக்கொண்டு

சுப்பிர மணியர்போ லெத்தனை பேரிங்கே
யெப்படி வேஷம்பார் எடுக்கிருன்
பழனிச் சீமைக் கிழவன்போல் பத்தர்
சித்தர் பரதேசியைப் போல்
வளமைக் காவடி யெடுக்கிருன் காவி
வஸ்திரங் கைதனில் விடுக்கிருன்
உத்திராட்சத் தாவட மாட்டுகிருன் மார்பில்
ஒட்டி யாணங்களைச் சூட்டுகிருன்
கங்குமணி கையி லெடுக்கிருன் சங்கு
நாதத்தொனி யெங்கு முழக்குகிருன்
செப்புக் கடுக்கன் தளதளெனக் காதில்
ஐம்பொன் முருகு பளபளென
சம்பிரதாயத் தமிழ் படிக்கிருன் சங்கு
நாதத் தொனிகளு முழக்குகிருன்
சடை முடிகளாய் விரிக்கிருன் வெள்ளைச்
சாம்ப லுடம்பெல்லாம் நிறைக்கிருன்
வடிவுசேர் கொழுந் தெடுக்கிருன் முல்லை
மல்லிகைப் பூமலர் முடிக்கிருன்
சன்ஞசி வேஷ மெடுத்துக்கொண்டு நல்ல
சாம்பிராணி வாசங்கள் போட்டுக்கொண்டு
வர்ணமயில் போலக் காவடித் தூக்கிச்
சன்னத மீறுதே யந்நேரம்
தப்புக ளூறுமிக ளடிக்கிருன் நாக
சுரமுடன் வாங்கா பிடிக்கிருன்
இப்படிப் பத்துப்பேர் வேஷமாக மெள்ள
வெழும்பிப் போருனே மெட்டாக
வேலு மயிலுக் கரகரா! வடி
வேலு மயிலுக் கரகரா!
சோலை மயிலுக் கரகரா! சிவ
சுப்பிர மணியருக் கரகரா!
என்று சிலபேர்கள் நின்ருடி மயில்
கந்தன் காவடிபோல் கொண்டாடி
சென்ருர் பாளையங் கோட்டையிலே ஒரு
சேகர மாகவே பேட்டையிலே
வந்து விளையாடும் வேளையிலே கதை
மார்க்கத்தைக் கேளுங்கள் நல்லோரே!

### பாளையத்தார் காவடி வேடமெடுத்து ஆடிக்கொண்டு போதல்

செந்தூரான் காவடி நிசமென்று நல்ல
செல்வர் சேரப் பணிவாரும்

வேலைவர் காவடி யென்பாரும் நல்ல
சிப்பாகி மார்பணம் போடுவாராம்
பாலும் பழமுங் கொடுப்பாராம் பின்னே
பாக்கிய வரங்கள் கேட்பாராம்
விற்பன மாக வேண்டுவாராம் நல்ல
சிப்பாகி மார்பணம் போடுவாராம்
சன்னதஞ் சன்னத மீறுதென்று அங்கே
தவ்வித் தவ்விக்குதி போடுவாராம்
உன்னி உன்னிக்குதி தான்போட்டு அங்கே
ஊமைத் துரைமுன்பு சொல்லுவாராம்

## பாளையத்தார் ஊமைத்துரையிடத்தில் எட்டுநாளைக்குள் கும்பினியை யெதிர்த்து மீட்போம் எனல்

நல்லதைய்யா ! எட்டு நாளையிலே தாங்கள்
ராமே சுரத்துக்குப் போறதனுல்
எல்லாப் பாவமுந் தீருமையா தமக்
கேற்ற காலங்க ளுண்டாகுமையா
சிதம்பரச் சிதம்பரச் சக்க தேவி
தீர்ப்பா ளுங்கள் பகயையெல்லாம்
விதனந் தீர்க்கத் தப்பாது வடி
வேலர் கிருபைக ளிப்போது
நினைத்தக் காரிய முடிக்கலாந் தம்பி
மனத் துயரங்கள் தீர்க்கலாம்
சனத்தோடே நாம் கூடலாம் நம்மள்
தைரிய மாய்விளை யாடலாம்
எட்டு நாளைக்குள் விளையாட்டுச் சத்தே
எப்படியுஞ் செய்வோங் காலாட்டு
கட்டுமெட்டுங் காவல் பார்ப்போமென்று அந்தக்
காவடிக் காரர் தானுரைத்து
பட்டணம் ஊரும் விளையாடி அந்தப்
பாளையங் கோட்டைப் புலனறிந்து
இஷ்டமுடன் வெளி யேறினராம் அவர்
இருக்குந் தாவளஞ் சென்றனராம்

## சடையன்குட்டிச்சேருவை ஞானிவேடம் பூண்டு, பாளையங்கோட்டைத் தெருவூடே சுற்றுதல்

அதி லொருவனதி காரிபோ லங்கே
அஞ்சடையன் குட்டிச் சேருவையும்

சதிர கிரிமெய்ஞ் ஞானியைப்போ லங்கே
தானெடுத் தான்வேஷந் தோழியரே !
கண்ட கோடலியுந் தான்பிடித்து அவன்
கைதனில் மாத்திரைக் கோலெடுத்து
சண்டப் பிரசண்டன் சடைமுடி யாகவே
சாம்ப லுடம்பெல்லாந் தானணிந்து
உத்திராட்சத் தாவடம் பளபளென மார்பில்
ஒட்டி யாணங்கள் தளதளென
பக்தி யுடன்சிவ பூசை குருபூசை
பழனிச் சீமைப்பண் டாரம்போலே
லங்கோடு கட்டியே சுங்குவிட்டுத் தங்கக்
கவுரிச் சங்குகள் தானடித்து
வூங்காளத்துப் பச்சைக் குல்லாவுஞ் சிரசில்
வைத்ததன் மேலொரு குஞ்சம்விட்டு
சோளி நாப்பையொன்று தோளிலிட்டுச் சிங்கேறு
ஆளிப் புலித்தோலும் மேல்போட்டுக்
காசிதே சம்முதல் கன்னியா குமரி
ராமேசுரம் போய் வாரேுமென்றுந்
தேசத்தில் ஏகாந்த ஞானியென்றும் விசு
வாசமாய் வைத்தியம் பார்ப்போமென்றும்
பாளையங் கோட்டைத் தெருவூடே பொலிக்
காளைப்போல் சுத்துருன் பாருங்கடி !

## மெஞ்ஞானி, கொடியபிணிகளுக்கும் பேய்களுக்கும் மருந்தும் மந்திரமும் செய்வேன் எனல்

வஞ்சனை பில்லிகள் நஞ்சு வியாதிக்கு
மந்திரம் வேணதும் உண்டுவென்றும்
சஞ்சீவி மூலிகை வேணதுண்டு நாக
தாலியுண்டு குரு மூலியுண்டு
மட்டுக் கடங்காத் துஷ்டக் கறுப்புக்கள்
கொட்டுக் கண்டாடும் வலுப்பேய்கள்
திட்ட முறைப்பாடு செய்வினை தீவினை
முட்டுப் பில்லிவலு சூனியங்கள்
கள்ளப் பிசாசை ஓட்டியல்லோ தம்பி
பிள்ளைத் தாயங்கள் கொடுப்போமென்றும்
அள்ளித் திருநீறு தந்திடுவோ மையா
ஆன பிணிகளுந் தீர்ந்திடுமே
என்னைப்போல் வைத்தியர் உங்களுக்கு இனி
எங்கும் கிடையாது என்ருனே

## பாளையங்கோட்டையின் மக்கள் மெஞ்ஞானிக்கு உபசாரம் செய்தலும், குறைதீர வழி கேட்டலும்

அந்நேரம் பாளையங் கோட்டையி லுள்ளபேர்
ஐயா! ஐயா! குருசாமி! என்று
மெத்த மெத்தவுப சாரஞ்சொல்வார் எங்கள்
வீட்டுக்கு வாருங்கள் சாமியென்பார்
உத்தமரே! நல்ல உத்தமரே! வீட்டுக்
கடுத்தக் குறைகளைத் தீருமென்பார்
போற்றிப் புகழ்வார் சிலபேர்கள் பணிந்
தேத்தி மகிழ்வார் சிலபேர்கள்
சாஸ்திர வேதமெஞ் ஞானியரே! கைகள்
பார்த்து அவிழ்தஞ் செய்யுமென்பார்
இப்படி யெல்லோரும் புகழிக்கத் தம்பி
அப்போது ஞானி அகமகிழ்ந்து

## சடையன்குட்டிச்சேருவை, கம்பளத்தாருக்குச் சீனிச்சர்க்கரையை மருந்தாகக் கொடுத்தலும் அவர் மகிழ்தலும்

கற்புடன் வைத்தியம் பார்ப்போமென்று சொந்தக்
கம்பளத்தார் முகங் கைபார்த்து
சன்னைகள் போட்டுக் கண்சிமிட்டிச் சக்க
தேவி! வீரமல்லு! என்றுசொல்லி
தன்னைக் கம்பளத் தாருக்கெல்லாஞ் சீனிச்
சர்க்கரையை மருந்தாய்க் கொடுத்தான்
சிலபேர்கள் வாங்கியே சாப்பிடவும் வலு
தீவினைத் தீர்த்தல்லோ போச்சுதென்பார்
நல்லமொழி சொல்லு மெய்ஞானி யென்று
எல்லோருந் தோத்திரஞ் செய்திடவே

## போலி மெஞ்ஞானியிடம் கும்பினிச் சிப்பாகி பாவவியாதிகள் தீர்க்க வேண்டுதல்

அப்போது பட்டாளஞ் சிப்பாகி மார்களும்
நற்புக ழாகமெஞ் ஞானியிடம்
விற்பன மாகச் சலாமுஞ்சொல்லி யெங்கள்
பாவ வியாதிகள் தீருமென்றான்
வெட்டை யரையாப்புத் துட்டக் கிரந்திக்குக்
கெட்டி மருந்துகள் செய்வீரென்று

### போலிமெஞ்ஞானி, கும்பினிச்சிப்பாகி மார்களுக்கு, வெள்ளைப்பாஷாணத்தை மருந்தென்று கொடுத்தல்

பட்டாளஞ் சிப்பாகி மாருரைக்க அந்த
முட்டாள் வைத்தியன் தான்மகிழ்ந்து
வெள்ளைப் பாஷாணத்தை வாங்கியல்லோ அங்கே
அள்ளிக் கொடுத்திட்டான் சண்டாளன்!

### கும்பினிச் சிப்பாகிமார் இறந்துபோதல்

உள்ளுக்கு வாங்கிச் சாப்பிடவே மடிந்
துருண்டு போகுதே பட்டாளம்!
ரத்தம் ரத்தமா யறுத்தூத்தி ஐயோ!
செத்துப் புரளுதே பட்டாளம்!
வைத்தியன் வைத்தியன் எங்கே? யெங்கே?யென்று
மாண்டுதான் போகுதே பட்டாளம்!
ஞானியாய் வந்திடுஞ் சாமியார் வைத்தியம்
நல்லாதான் பார்த்தானே பொட்டிமகன்
தானு மிருந்த விடத்துக்கே சொல்லாமல்
தப்பிவிட்டான் ஞானி ஒப்புடனே

### சடையன்குட்டிச்சேருவை, போலிச்சாமியார் வேடங்களைந்து, நாட்டிடையன் வேடத்தில் செல்லுதல்

நாட்டு இடையன்போல் வேஷங்கொண்டு தம்பி
கோட்டை வாசலோரம் வந்திருந்தான்
தாட்டிமை யாகிய கும்பினிப் பட்டாளந்
தான்மயங்கி மடி வாகுதையோ!
மாத்தாணுய் வந்து மருந்து கொடுத்தானே!
ஆத்தாடி! அப்பாடா! என்றூர்கள்
தீர்த்தானே தீர்த்தானே வைத்தியந் தானெரு
தீர்ப்பாகத் தீர்த்தானே சண்டாளன்!
என்று புலம்பியே பட்டாள மங்கே
இருநூற் றைம்பது பட்டாச்சு
பாதிப் பட்டாள மழிவாச்சு துரை
மேஜர் ஒருத்தனும் பட்டாச்சு
இப்படிப் பட்டாளந் தானிருக்கக் கதை
செப்பவே கேளுங்கள் நல்லோரே!

## கம்பளத்தார், விறகுவிற்பவர்போல, விறகுக்கட்டில் வேலுமாயுதமும் வைத்துக் கொண்டு நகருக்குள் நுழைதல்

முன்னாலே காவடி கொண்டுவந்த நல்ல
மூதண்டக் கம்பளத் தார்களுந்தான்
தன்னாலே தானே மிகக்கூடி அவர்
சற்பிணை செய்யவும் வேணுமென்று
மெஞ்ஞானி யாய்வந்த இடையனும் அங்கே
வேகம தாகவே தான்கூடி
கம்பளத் தார்களுந் தான்கூடி மலைக்
காட்டு விறகுகள் தானொடித்து
விறகுக் கட்டுகள் கட்டினராம் வெடி
வேலு மாயுதமும் உள்ளேவைத்து
விலங்குக ளொடிக்கும் ஆயுதமும் அங்கே
விதம்வித மாகவே உள்ளேவைத்து
களங்க மாகவே கம்பளத் தார்நூறு
கட்டுக் கட்டினா ரந்நேரம்

## ஒரு கட்டு விறகுக்கு இரண்டிரண்டு பேராக நின்று, நகருக்குள் நுழைதல்

விறகுக் கட்டுகள் நூறுகட்டுக் கட்டி
விதம்வித மாகத் தலையில்வைத்து
தாராள மாகத் தலையில் வைத்துஅங்கே
போறானே கம்பளச் சிங்கேறுகள்
நூறுபேர் கட்டுக் கொண்டுபோக மற்ற
நூறுபேர் சும்மா தான்போக
ஒருகட்டு விறகுக்கு இரண்டுபே ராக
ஒண்ணும் ரெண்டுமாகப் போறானே
மண்ணதிரச் செடி விண்ணதிர மதில்
கோட்டை வாசல்சுவர் தானதிர
பட்டணத்துக்குக் கிட்டப் போயினரா மங்கே
பாளையங் கோட்டைக்குள் சென்றனராம்
மெட்டாக வீட்டில் நுழைவாராம் பரு
விறகென்று விலை கூறுவராம்
காட்டு விறகென்று காட்டுவராம் விலை
கேட்டா லதிகமாய்ச் சொல்லுவாராம்

## ஒரு கட்டு விறகு அஞ்சு பணம்!

அஞ்சாறு காசுக்கு விறகில்லை வெள்ளி
அரைப் பணத்துக்குத் தரவில்லை

கஞ்சிக்குந் தண்ணிக்கும் விறகில்லை ஒரு
கட்டு விறகஞ்சு பணமென்று
செட்டி முதலிமார் வீடுசென்று வெகு
திட்டமாய் விலை கூறிடுவார்
அட்டியில் லாமலே கேட்டவர்க்குக் கட்டு
அஞ்சுபண மென்று தானுரைத்தார்

### பாளையங்கோட்டை மக்கள், விறகுக்கட்டின் விசித்திர விலையைக் கண்டு வெறுத் தொதுக்குதல்

அப்போது பாளையங் கோட்டைக் குடிகள்விலை
யதிக மென்றுமே தான்மதித்து
எங்களுக்கு வேண்டா மென்றுசொல்லி அங்கே
எல்லோருந் தள்ளியே விட்டார்கள்

### போலி விறகுவிற்போர் கூடி, பிறர் அறியப் பேசிக்கொள்ளல்

அப்போது கம்பளத் தார்களுந் தானங்கே
அதிக விரைவாகத் தான்கூடி
செப்ப முடனே வித்தார்க ளந்தத்
தெருத் தெருவுக ளெங்குமேதான்
முதலாளி வீடு பார்த்துக்கொண் டார்வெகு
முதல் நமக்குக் கிடைக்குமென்பார்
புதையல் ரொம்ப இருக்குதென்பார் பணம்
பொருக்க நமக்குக் கிடைக்குமென்பார்
மலையில் பொழுது போச்சு தென்பார்
நிலாக்கா லல்லோ வீசுதென்பார்
பலபல யோசனை தான்பேசி அந்தப்
பந்து சயிலக்கூட முன்பாக

### போலி விறகுவிற்போர் பாளையங் கோட்டை மலைக்குப் போதல்

எட்டி நடந்தங்கே வந்தனராம் விற
கென்று விலைசொல்லிக் கூறுவராம்
பட்டாளஞ் சிப்பாகி கேட்போர்க்குத் தம்பி
கட்டு விறகஞ்சு பணமென்பார்
அஞ்சுபணஞ் சொன்னு லார்வாங்கப் போருர்க
ளப்பாலே கொண்டுபோ வென்றுரைத்தான்
என்செய்வோ மென்று விறகுக்கார ரவர்
அஞ்சியஞ்சி யுங்கே நிற்கையிலே

## மலைக்கோட்டைக்குள்ளிருந்த ஊமைத் துரையைப் பார்த்து விறகுக்கட்டு முழுமையும் வாங்க முயலுதல்

பஞ்ச சயிலக்கூட முள்ளிருந்த வீரப்
பாண்டியன் ஊமைத் துரைதானுஞ்
சாடை யறிந்தந்த ஊமைத் துரைதானுந்
தாட்டிய மாயங்கே யேதுசொல்வான்
வந்தவிறகு முழுவதையும் நாங்கள்
வாங்க வேணுமடா தம்பியரே!
உள்ளுக்குத் தான்மெள்ளக் கொண்டுவந் தாலிப்போ
உள்ளது போல்காசு தாரனென்றான்
கள்ளு வெறிபோலே துள்ளி விறகுக்
காரர்க ளெல்லோருஞ் சீராக
கந்தனுக்குச் சந்து வலியென்றே சற்றே
குந்திக்குந்தி உள்ளே நுழைந்திட்டான்
பந்து சயிலக்கூட முள்ளாக வீரப்
பாண்டியன் சமுகத்தின் முன்பாக

## ஊமைத்துரையிடம் போலி விறகுச்சுமைகளை இறக்குதல்

கனக்குது சுமை கடுஞ்சுமை யென்று
இணக்கமாய்ச் சற்றே யிறக்கென்றான்
விறகுக் காரர்க ளெல்லோரும் அங்கே
வேகமாய் நுழைந்திட்டா ரப்போது
நூறு கட்டு விறகையு மங்கே
நொடிக்கு முன்னே யிறக்கினராம்
விறகுச் சுமைக்காரர் நூறுபேரு மற்ற
வீரியர்கள் தானும் நூறுபேரும்
ஆக விருநூறு பேர்களுந் தானங்கே
யேகினர் ஊமைத் துரையிடத்தில்

## கும்பினிச்சிப்பாகி, ஊமைத்துரையிடம் செல்லும் விறகுக்காரர்களை வினவுதலும், அவர்கள் பதிலிறுத்தலும்

அப்போது பாராச் சிப்பாகி அங்கே
ஆலோசனை கொண்டு ஏதுரைப்பான்
விறகுக் காரர் போகையிலே நீங்கள்
விருதாப் பேர்களும் போவானேன் ?
விறகில் லாதவர் நின்று விடுமென்று
வீரன சிப்பாகி சொல்லிடவே

அப்போது விறகில் லாதவ ரங்கே
யெப்படி யிரங்கிச் சொல்வாராம்
நாங்க ளிருப்பு வடதேச மையா !
நல்லதோர் சிப்பாகியே! கேளும்
ஒவ்வொரு கட்டுக்கு இரண்டு பேராக
ஒடித்துக் கட்டினோம் நாங்களுந்தான்
ஆனத னல்பணம் வாங்கிப் பகிரவே
ஐயாவே போகிறோ மென்றுசொன்னார்

### சிப்பாகி, போலி விறகுவிற்போரின் பதிலை உண்மையென நினைந்து வாளாவிடுதல்

அப்போது சிப்பாகி நிசமென்று அங்கே
ஆதரவாய்ச் சும்மா தானிருந்தான்
ஆச்சிது நல்வேளை யென்றே யிவர்களும்
அவரவர்க ளுடன்போய்த் தான்சேர்ந்து

### கம்பளத்தார் கூடி ஆலோசித்தல்

எல்லோரும் ஒன்று கூடியல்லோ அங்கே
யேகமாய் யோசனை தான்முடித்து
வேட்டைக ளாடியே பார்ப்போமென்று அங்கே
விறகுக் கட்டையும் பிரித்திட்டார்
விறகுக் கட்டையும் பிரித்திட்டார் உள்ளே
வெடி யிருந்ததை யெடுத்திட்டார்
கில்லிலி யென்று குலவையிட் டானவன்
வல்லையம் நேரிசங் கைப்பிடித்து
சொல்லி வாய்மூடி முடிக்குமுன் னேயங்கே
யெல்லைப் பிடாரிபோல் மண்டியிட்டான்

### பாளையத்தார் குலவையிடுதலும், போரிடுதலும்

பந்துதானக் கூடத்தில் மந்தியைப் போல்தவ்விப்
பாய்ந்து நுழைந்திட்டான் கம்பளத்தான்
உன்திறத் தைவிட்டு என்திறம் பாரென்று
ஊமைத் துரையுமே கொக்கரித்தான்
விலங்குக் காலோடே பாராச் சிப்பாகியை
விரட்டிக் குத்துகிறான் பாருங்கடி !
சலங்கைப் போட்டுக் கும்மியடித் தாப்போல
தாண்டிக் குத்துகிறான் பாருங்கடி !
பழைய சனியன் வந்ததென்று அங்கே
பட்டாளஞ் சிப்பாகி மார்விழிக்க

### ஊமைத்துரை, கும்பினிப் பட்டாளத்தை விரட்டுதலும், அவை இடம் பெயர்தலும்

வளையம் போட்டுப் பொலிப்பெருதுப் போலே
மண்டிக் குத்துகிறான் பாருங்கடி !
கும்பினிப் பாராச் சிப்பாகி களையொரு
வெட்டினாலே யிரண்டு துண்டாகத்
தெம்புடன் குத்தி விரட்டி முடுக்குகிறான்
வம்பு வளர்த்திட்டான் பாருங்கடி !
பந்து சயிலக்கூடந் தூள்பறக்கவே அங்கே
பாராச் சிப்பாகிகள் பட்டிறக்கவே
பொந்துக்குள் ளிருந்து ஆந்தை விழிச்சாப்போல்
புரண்டு போகுதே பட்டாளம்
சந்தைக் கடைத்தெரு மாங்கொட்டை போலவே
தகர்ந்து போகுதே பட்டாளம்
அந்த விடம்விட்டு வெளியேறி அதற்
கப்பாலே போகுதே பட்டாளம்

### ஊமைத்துரை, கால்விலங்கை முறித்துப் பல வெள்ளைக்காரச் சிப்பாய்களையும், துரைமார்களையும் அழித்தல்

ஒப்புடன் வெளி யேகித்தா னந்த
ஊமைத்துரை விலங்குத் தான்முறித்தான்
பின்னு மவனுடன் சேர்ந்தபேர் கம்பளந்
தன்னுட னேவெளி யேறினராம்
அந்நேரங் கர்னல் துரையுட னேசில
பட்டாளம் வந்து எதிர்த்திடவே
எதிர்த்தக் கர்னல் துரைமடிந்தான் சனியன்
பிடித்தப் பேரெல்லாம் மடிந்திட்டார்
கதித்தக் கொம்மந்தா னுயிர்விட்டா னங்கே
குதித்தப் பேரெல்லாம் மடிந்திட்டார்
நாட்டரசர் கெட்டிப் பேட்டையிலே அந்த
நன்னகர் பாளையங் கோட்டையிலே
தாட்டீகன் ஊமைத் துரைச்சாமி ரண
வேட்டை யாடுங்கதைப் பாருங்கடி !

### ஊமைத்துரை ரணவேட்டையாடுதலும், பாளையங்கோட்டையைக் கொள்ளையிடுதலும்

பிச்சாண்டி ! அடே ! பிச்சாண்டி ! முன்னே
பிச்சைக்கு வந்தவன் கிச்சாண்டி !

அச்சமில் லாமலே யாரென்று கை
வச்சானே பாளையங் கோட்டையிலே
காட்டுப் புலிகள் மிரண்டதுபோல் சீறி
ஆட்டுக் கிடையிலே பாய்ந்தாப்போல்
கூட்டுச் சாவல்கள் பறந்தாப் போல்ரண
வேட்டைக ளாடவே புறப்பட்டான்
பொலிப் பெருதுபோல் சுத்துகி ருன்தம்பி
சலியாமல் குத்தி மழுக்குகிருன்
வலிய வலியச் செருகுகிருன் பணஞ்
செலவுக் காகவே யெடுக்கிருன்
வர்ணப் பொடியுடன் சொர்ணப் பொடிகளும்
சின்னக் கம்பிவேட்டி தானெடுத்து
கர்னல் விடுதியுங் கொள்ளைகொள்ளை துரை
சேனு பதிவீடு கொள்ளைகொள்ளை
பட்டண முழுதுங் கொள்ளையடா! அந்தப்
பாஞ்சைப் பதிமன்னன் போட்டக்கொள்ளை
செட்டி முதலிமார் வீடுகொள்ளை பணப்
பெட்டிகள் வேணதுங் கொள்ளையடா!
வட்டில்கள் செம்புகள் வெங்கலப் பாத்திரங்
கொட்டுக் குடைதங்தக் கும்பாவும்
பட்டுப் பட்டாவளி வேட்டிகள் மூட்டைகள்
கட்டுக்கட் டாகவே கொள்ளையிட்டான்
இத்தனை யுஞ்சரி கொள்ளைகொண் டான்வெகு
விஸ்தார மாய்வெளி யேறுமென்ருன்
மத்த கசம்போல் நடந்தானே அங்கே
வல்லங்காட்டு மலை சேர்ந்தானே

## மீண்டும், தூத்துக்குடியில் கொள்ளை

வல்லங்காட்டு மலை போயிறங்கி அந்த
மன்ன ணுலோசனை தான்பேசி
இன்னுஞ் செலவுக்குப் பத்தாது பணம்
எங்கே கொள்ளையடிப் போமென்று
தொல்புவி யெங்கும் நடுங்கிடவே அங்கே
தூத்துக் குடிநகர் சேர்ந்தனராம்
தூத்துக்குடி வெள்ளைக் காரன்வீட் டிலங்கே
தொண்ணூறு சாக்குப் பணமெடுத்தான்

## மீண்டும், எட்டையாபுரம், மன்னன் வீட்டில் கொள்ளை

தொண்ணூறு சாக்கையும் முன்னேற்றி இந்த
மன்னன் எட்டையாபுரங் கொள்ளையிட்டு

எட்டையா புரஞ்சீமை கொள்ளையிட்டு அங்கே
தட்டைப் படைப்பிலே தீப்போட்டு

## ஊமைத்துரை பாஞ்சைப்பதி ஏகுதல்

அந்தநாள் சென்று மறுநாளி லங்கே
வந்தானே பாஞ்சைப் பதிநாட்டில்

## ஊமைத்துரை, பாஞ்சைப்பதியில் சந்திர வட்டக் கோட்டையைக் கட்டிய வருணனை

சந்திர வட்டம்போல் கோட்டையென்று சொல்லிச்
செய்தானே ஊமைத் துரைதானும்
ராத்திரி காலத்தில் நேரத்திலே வேத
சாஸ்திரம் போல்சுத்துக் கோட்டைகளாம்
பார்த்தா லித்தினிக் கோட்டைபோ லேசுத்திப்
பரித்துக் கட்டுகிருன் பாருங்கடி !
வரகு வைக்கோல் நிரம்பவைத்து அதில்
மண்போட்டுச் செம்மியே தான்மிதித்துத்
திரமுடன் கம்மங் கொம்மைகளைப் போட்டுச்
செப்பமிட்டு மதி வொப்பமிட்டு
பஞ்சுப் பொதிகளை யூடேவைத்துக் கம்மங்
கஞ்சிப் பசைகளைத் தான்கொடுத்து
குஞ்சரம் போல்கோட்டை கட்டிமெட் டாகவே
ரஞ்சித உள்ளறை வீடுகளும்
வீதியாய்ப் பள்ளங்கள் பரித்திட்டா னதில்
நிலைக் கண்ணுடி அலங்காரம்
புலிப் புடவுக ளோடைகளாம் வெகு
போதர வாய்க்கொலு மேடைகளாம்
சம்பிரகூட மஞ்சத் தரண்மனை வெகு
செப்பமாய் மெத்தைமேல் தழுவணை
இப்படிச் சிங்காரஞ் செய்தனராங் கதை
செப்பவே கேளுங்கள் விற்பனரே !
மெட்டுள்ளக் கோட்டையைக் கண்டு திகிரிடக்
கட்டினனே மதில் விஸ்தாரம்
நிலவரை வீடு மதற்குள்ளே துரைக்குக்
கொலு மேடைகளும் அதற்குள்ளே
கொலுச் சிங்காரமு மதற்குள்ளே தம்பிக்குக்
குதிரை லாயமு மதற்குள்ளே

## ஊமைத்துரை சந்திரவட்டக் கோட்டையில் கொலுவிருத்தலும், எக்களிப்பாக வாழ்தலும்

உமையாள் பாதங்கள் துதித்தவன் சத்தி
ஒன்பது கம்பளத் துரையவன்

சுப்பிர மணியரைத் துதித்துமே ஊமைத்
துரையுங் கொலுவினி லிருக்கவே
விற்பன முள்ள சிவத்தையா முத்தையா
வேட பட்டிக் குமரையாவும்
பூப்பந்தல் மேடை விலாசத்தி லேதுரை
மாப்பிளே நாயக்க மார்களெல்லாம்
காப்பாற்று வாள்சக்க தேவியென்று கனம்
கம்பளத் தார்களுஞ் சூழ்ந்திருந்து
என்னவென்று சபதங் கூறுவரா மங்கே
யெக்களிப் பாகவே பேசுவராம்
சென்னேப் பட்டணம் படைகுருவி யது
சேரத் திரண்டு வரட்டுமே
குருகு நாரைகள் வரட்டுமே வெள்ளேக்
கொக்குக் குருவிகள் வரட்டுமே
வருங் குருவிகள் சூரவந் தானுக்கு
வயிரி நாமென் றுரைத்தனராம்
வீதி விலாசந் திரிவா ராமங்கே
சூது சதுரங்கம் பார்ப்பாராம்
சாதிச் சாவல்கையி லெடுப்பதும் வெள்ளேச்
சாவலேப் போர்விட்டுப் பார்ப்பதுவும்
வீமனேப் போல்தொடைத் தட்டுவதும் வெகு
மெட்டுகளாய் முளேக் கொட்டுவதும்
சீமையிலே கொள்ளே யடிப்பதுவும் வெகு
சிலுகாய்ச் சல்லியம் வளர்ப்பதுவும்
புலிபோல வெளி யேறுவதுவு மெட்டையா
புரத்தில் கொள்ளே யடிப்பதுவும்
கலியுகச் சுத்த வீர னூமைத்துரை
நிலவ ரைக்குள்வந் திருப்பதுவும்
நாளு மெதிரில்லே யென்று பாஞ்சை
நாட்டரசன் கொலு வீற்றிருக்க

## ஊமைத்துரை விலங்குடன் தப்பிப்போய் நடத்திய செய்கைகளே, பிற்கட்டு மேஜர்துரை கவர்னர்-ஜெனரலுக்கு எழுதுதல்

பாளேயங் கோட்டை யதிர்ந்ததற்குஞ் சாலப்
பட்டாளஞ் சேர விறந்ததற்கும்
ஊமைத் துரையுட நடத்தையும் விலங்
கொடித்துக் கொள்ளே யடித்ததுவும்
பூமியில் கோட்டை யெடுத்ததுவும் வெகு
பொல்லாங் காய்வர்மந் தொடுத்ததுவும்

கணிசந் தப்பிய நடத்தையுங் கண்டு
துணிவாய்ப் பிறகட்டு மேஜர்துரை
இச்சணம் தாமத மில்லாம லந்தச்
சணமே காயிதம் போட்டனராம்
கும்பினிக் காயிதம் அன்பாகக் கெவுனர்
கோர்ட்டார் போட்டார் முன்பாக

## சென்னை கவர்னர்-ஜெனரல் துரைகள், கடிதங்கண்டு ஆலோசனை நடத்தல்

நெம்பர் கொண்டுவந்தக் காயிதச் செய்தியைக்
கும்பினித் துரைகள் தானறிந்து
கண்க ளிரண்டும் பொரிபறக்கவே அவர்
காதுக ளிரண்டும் புகையெழும்பப்
பங்களா வதிர்ந்திடக் கீசுவராந் துரை
மார்க ளாலோசனை பேசுவராம்
கம்பளத் தான்செய்யும் வம்பாலே நம்மள்
காயிதா இப்படித் தானுச்சு
கும்பினி யார்பகை செய்தானே இப்போ
வம்பு குறும்பு வளர்த்தானே
துஷ்டத் தனம்முன்னே செய்ததனுல் வந்தக்
கட்டபொம்மு தன்னைத் தூக்கினேம்

## ஊமைத்துரையைப்பற்றி, கவர்னர் துரைகள் வருத்தமும் விருத்தமும்

வாய்பேசா மன்னனைப் பிடித்திட்டோம் நம்மள்
ஞாயமாக விலங் கடித்திட்டோம்
அன்றைக்கு ஊமைத் துரைதனையு மங்கே
எண்ணுமல் தூக்கிலே தான்போட்டுக்
கொன்றுபோட் டாலிந்த மோசம் வராதென்று
கும்பினித் துரைமா ரேதுசொல்வான்
கட்டா மிராசுக்கோ சன்னப்பிர வீச்சுவலு
துஷ்டனடா ஊமைத் துரையடா!
தூங்கலைப் போல விருந்தாலு மது
தோக்குலவார் குலம் பொல்லாது
தேங்கி னதுபோ விருந்தாலு மது
சில்லவார் குலம் பொல்லாது
பொல்லாத வம்பனடா ஊமையன்ரு னவனைக்
கொல்லாமல் விட்டதே மோசமடா!
நல்லது நல்லது சொல்லுகி றேனவன்
சில்லாக் கோர்ட்டு ஊமையனே?

குழிநரிக் கொம்பு இருக்குதோ? சித்தர்
குளிகை அவனுக் கிருக்குதோ?
பழிகள் மோசங்கள் வளர்த்திட்டான் நம்மள்
பட்டா ளத்தைச்சேர அழித்திட்டான்
சீமையில் கொள்ளை யடிக்கிரு னவன்
திராணி சமத்துக்கள் படிக்கிருன்
பூமியிலே வலு துஷ்டனடா ரொம்பப்
பொல்லாதக் கம்பளச் சுட்டியடா!
ஆனதனு லிப்படி யெங்குமில்லை ரொம்ப
வீருனப் பொல்லாங்குக் காரனடா!
மரனஸ்த னென்று இருந்தோமே? பாகி
மட்டுக் கடங்காதத் துஷ்டனடா!

## கும்பினியாரின் ஆட்சிப்பெருக்கமும், வீரத்தின் தீர்க்கமும்

எதிர்த்தப் பேரையும் மடக்குகிருேஞ் சீமை
யெங்கெங்கும் பார்குறும் படக்குகிருேம்
மதுரைச் சீமையும் பிடித்திட்டோங் கொளும்பு
மன்ஞர் சீமையும் பிடித்திட்டோம்
கண்டிக் கதிர்காமம் நமக்குள்ளே வட
காசி தேசமுதல் நமக்குள்ளே
மண்டல முழுதும் நமதாச்சு கெவுனர்
மெண்டர்கள் ஞாயமுந் தானுச்சு
திருச்சி ஞபுரம் சென்னல்புரந் தெற்கே
தெச்சணப் பூமி அதிகாரம்
தரும ஞாயமும் நமக்குள்ளே கும்பினிச்
சட்ட திட்டங்களும் நமக்குள்ளே
வங்காளங் கொங்கு மலையாளங் கொச்சி
மக்கதேசங் கண்டிக் கதிர்காமம்
சிங்கள தேசமும் பிடித்திட்டோம் துரை
இங்கிலீசுக் கொடி நாட்டினேம்
டப்பை எழுபத் திரண்டும் நமக்குள்ளே
ராணுவத் தார்களும் நமக்குள்ளே
தோப்புத் துறவுகள் நமக்குள்ளே வலு
தோணிப் படவுகள் நமக்குள்ளே
வம்பு மரங்களும் நமக்குள்ளே வலு
வாரண்டு ஞாயமும் நமக்குள்ளே
போலீசு ஞாயமுஞ் செலுத்துவோம் அடி
போடுபோ டென்றுநாம் நடத்துவோம்

மேலூர்ப் பாளையம் நமதாச்சுக் கன
மெட்டுள்ளக் கோட்டைப் பிடித்தாச்சு
பிடியாதத் தேசம் பிடித்திட்டோம் துரை
கெவுன ரென்றுபே ரெடுத்திட்டோம்
வாழாதப் பேரையும் வாழவைப்போம் மெத்த
வணங்கினப் பேரையும் வாழவைப்போம்
தாழாதப் பேரையுந் தாழவைப்போம் மெத்தச்
சமத்தன் தலையையுந் தூக்கிவைப்போம்
பொல்லாதப் பேர்குறும் படக்குவோம்
போலீசு ஞாயமுஞ் செலுத்துவோம்
நல்லோர்கள் தன்னையும் நாட்டிவைப்போம் பாஞ்சை
நாட்டினில் கோட்டைகள் பரப்பிடுவோம்
தூக்கு மரங்களுந் தானிருக்க அதில்
தூண்டிக் கயறுகளும் போட்டிருக்க
தோக்குல வார்குலத் தொட்டியன்தா னம்மார்
சொல்லுக் கடங்குகிரு னில்லைபாகி !
சீமைக்கெல் லாமதி காரிதானே ! தெற்குச்
சீமைக்குச் சின்ன நவாபுதானே !
நாமுஞ் சாதிக்கார ராகலாமோ? பாகி !
நாற்காலி மீதி லிருக்கலாமோ?
கும்பினிப் பாளையந் திரசடா ! பாஞ்சைக்
கோட்டைக்குப் போகத் துருசடா !
கம்பளத்தான் வம்பு கண்டறிவோம் இனிக்
கண்டறிவோம் பாகி ! கண்டறிவோம்

## கும்பினியார், ஊமைத்துரையை எதிர்க்க, போர்க்கோலமாகுதல்

அக்கினி மேஜரும் பயணந்தான் துரை
ஆற்காட்டுப் பாளையந் திரசுதான்
தெற்குச் சீமையது எங்கேயென்று துரை
தேசுகி வாசுகி புறப்பட்டான்
பீரங்கி மேஜரும் பிறகட்டு மேஜரும்
சாராயப் பெட்டிகள் தயாரென்றான்
ஈராறு பட்டாள மெழும்பென்றான் துரை
ஏழு துரைமாருங் கிளம்புமென்றான்
மேஜர் துரைகளும் சோல்சர் துரைகளும்
மேன்மேலும் பட்டாணி மார்களும்
முசுமுசென் றல்லோ புறப்பட்டான் துரை
முந்திரிச் சாராயங் குடித்திட்டான்

சட்டைக்காரத் துரை கெட்டிக்காரத் துரைச்
சாதிவெள் ளைக்காரர் எத்தனைபேர்!
பட்டாணி மாவுத்தர் எத்தனைபேர்! அதே
மாதிரிக் காரர்கள் எத்தனைபேர்!
இங்கிலீசுத் துரை எத்தனைபேர்! வலு
கெங்குத் துரைமார்கள் எத்தனைபேர்!
சங்கையில் லாத்துரை மன்னர்களும் ஒயில்
இங்கித மாக உடுப்பணிந்து
சகலாத்துச் சட்டைகள் போடுவராந் துரை
காலிலே பாப்பாசு மாட்டினார்கள்

## ஊமைத்துரைக்கோட்டையை எதிர்க்க, கும்பினிப்பட்டாளம் வீருடன் போகுதல்

விருப்பமா யுடுப்புத் தானணிந்தா ரங்கே
மெட்டாகப் பாளையம் நடத்திட்டார்
நமக் கெதிரியாம் வண்டனடா பாஞ்சை
நாட்டரசர் ஊமைத் துரையடா
அடக்கமுக் கென்று அக்கினீசுத் துரை
அடைவுடன் நடை துருசென்று
புத்தி விலாசம் நடக்கவே வலு
பூனைக்கண் விழிகளும் விழிக்கவே
கத்திகளும் புடை புடைக்கவே வலு
கல்லு வெடிக்காரர் துடிக்கவே
மூஞ்சி முகஞ்சரி வெள்ளைவெள்ளை அந்த
மூவாயிரஞ் சோல்சர் சள்ளைசள்ளை
நாஞ்சில் நாடுமுதல் தீப்பறக்க அங்கே
சாஞ்சி வருகுதே பட்டாளம்
சகட யூகமாய்த் தகுடதோ மென்று
விகடக் கவிகள் பேசிக்கொண்டு
மகுட வர்த்தனர் கெருடப் பார்வைகள்
செகமெல்லாம் ஒலி சொலிக்கவே
போதை வெறிகள் நடத்திக்கொண்டு வெள்ளைப்
புரவி மேலேறி நடக்கிறான்

## கும்பினிப்பட்டாளம் சேதுமார்க்கம் வருதல்

சேதுப் பாதைவழி தான்கூடித் தெற்குச்
சீமையை நோக்கியே சென்றனராம்
கடல்நீறு போலே சாரா யங்களும்
கரிகளும் பல வகைகளாம்

குடிக்கும் நெய்க் குடங்களு மதுக்
　　குடங்களும் வெகு திடங்களாம்
கோழி முட்டையுடன் கோழிகளும் பெருங்
　　கொம்புக் கிடாய்மேசை யாடுகளும்
தாளியுடன் தயிர்ப் பானையுடன் தங்குப்
　　பானையங் கூனையந் தன்னுடனே
பட்டணத் துள்ள துரைமாரும் பெரும்
　　பாதையைக் கூடியே புறப்பட்டார்
ஒட்டகைகள் நூறு வருகுதே பரி
　　நெட்டுங் கரியங்குந் திமிருதே
கரிகளும் பரிகளும் வருகுதே வெகு
　　கரி மருந்துகள் பெருகுதே
இருப்புக் குண்டுக ளீயக் குண்டுகள்
　　எத்தனை யோவெகு மூர்க்கமாய்
ஈயக் குண்டுகள் வருகுதே தீப்
　　பொரியுங் குண்டுகள் வருகுதே
மாயா வினோதமாய் வருகுதே அங்கே
　　வைகை மதுரையி லிறங்குதே
வெள்ளைப் பாவாடைகள் விரித்தாப்போல் கன
　　வெள்ளம் பெருகியே வந்தாப்போல்

## கும்பினிப்பட்டாளம் தள்ளாகுளத்தில் கூடாரமடித்து மீளுதல்

தள்ளாபெருங் குளத்துக் கருகாமை அதில்
　　தாவள மாக விருந்தனராம்
சதிராய்க் கூடாரந் தானடித்தா ரதில்
　　தானைய மாய்த்துரை தீனியெடுத்தார்
மதுரை விட்டல்லோ புறப்பட்டார் வழி
　　மார்க்கஞ் சாரிகள் நடந்திட்டார்
கும்பினிப் பாளையம் மெட்டாக வழி
　　கூடி நடந்தார்க ளப்போது

## கும்பினிப்பட்டாளம் கயத்தாற்றில் தங்குதலும், மீளுதலும்

தெம்பான கும்பினிப் பாளையமுந் தெற்குச்
　　சீமையை நோக்கி நடந்தனராம்
கயத்தாற் றிலே வந்திறங்கி அந்தக்
　　கயத்தாறு விட்டு வெளியேறி

## கும்பினியார் ஒட்டப்பிடாரத்தில் அணிவகுப்பு நடத்துதல்

ஒட்டைப் பிடாரத்தில் சென்றனரா மங்கே
காட்டுப் பாராவும் நிறுத்தினராம்
கோட்டைக் கட்டுப்போ லிறங்கினரா மங்கே
கும்பினிப் பாளையஞ் செய்தனராம்
கூடா ரங்க ளடித்தனராம் வெகு
கோலா கலமாக விருந்தனராம்
மேடு காடுசரி பார்த்தனராம் துரை
தானும் ஆலோசனை செய்தனராம்
நானில முழுதும் பாராவென்ருன் பாஞ்சை
நாடெல்லாம் ஏக வெளிச்சமென்ருன்
மாத்தான் கோட்டைக ளிதுவென்ரு னிது
பார்த்தா லித்தினிக் கோட்டையென்ருன்
பார்த்தா லித்தினிக் கோட்டைக்குள்ளே அவன்
பாளையஞ் செய்துகொண் டேயிருக்கான்
வாய்பேசா ஊமையன் தானுமிப்போ இந்த
வம்புக் குறும்புகள் செய்தானே!
ஞாயம்போ லேநிறை வேத்திடலாம்! பாஞ்சை
நாட்டையுங் கொட்டைப் பரப்பிடலாம்!

## கும்பினியார் எட்டையாபுரந் துரைக்குக் கடிதம் எழுதுதலும், அவர் ஓடிவருதலும்

எட்டையா புரந்துரை சமீன்தாரல்லோ! நமக்
கேத்தவன் தானுப காரியல்லோ!
எட்டையா புரந்துரை வரும்படி அங்கே
யெழுதிப் போட்டானே காயிதமும்
மெட்டானக் கும்பினிக் காயிதச் செய்தியை
யெட்டையா புரந்துரை தான்பார்த்து
சட்ட முடனங்கே வந்தனராம் வெகு
திட்ட ஆலோசனை பேசினராம்
கெட்டிக் கெட்டியென்று பாஞ்சைப் பதிமேலே
வெட்டு வெட்டென்று நடந்தனராம்
பட்டாள மேஜ ரொருபுறமாம் அசல்
பட்டாணி மாவுத்தர் ஒருபுறமாம்
கும்பினித் துரை யொருபுறமாம் நல்லக்
கொம்மந்தான் மார்க ளொருபுறமாம்
தம்பூருக் கார ரொருபுறமாம் நல்ல
சாதி வெள்ளைக்கார ரொருபுறமாம்

புல்லாங் குழல்கார ரொருபுறமாம் கத்தி
வல்லையக் கார ரொருபுறமாம்
மல்லர்கள் சோல்சர்கள் ஒருபுறமாம் குல்லா
பாராகாரச் சிப்பாகி யொருபுறமாம்
கிண்ணிப் பட்டாளங் கிறண்டப் பட்டாளங்
கர்ச்சிதப் பட்டாளம் ஒருபுறமாம்
மண்ணும் விண்ணுஞ் செந்தூள் பறக்கவே! அங்கே
வர்ணப் பட்டாளமும் நெருங்கவே

## கும்பினியார், ஊமைத்துரைக் கோட்டையை நோக்கிப் பீரங்கிக்குண்டுகளைப் பொழிதல்

நீருவிக் கரை மேடையிலே நின்று
நெருங்கிப் பீரங்கிப் போடையிலே
சூரு வளிபோலே சுழலுதே யெங்குஞ்
சுத்திச்சுத்திக் குண்டு இடிக்குதே!
பாசு பதமென்ற பீரங்கி அது
தூசி யெழுப்புதே கோட்டையிலே!
வாசித மென்ற பீரங்கி வட
காசிதேசங் கண்டப் பீரங்கி
மின்ன லிடிபோலே முழங்குதே! அங்கே
மேன்மேலுஞ் சத்தங்கள் குமுறுதே!
முன்னூறு நானூறு வெண்ணூறு சத்தம்
எந்நேரம் பார்த்தாலும் திடீரென்று
கோடை யிடிபோலே முழங்குதே! பாஞ்சைக்
கோட்டை மதிலெங்குஞ் சிதறுதே!
மேடு பள்ளஞ்சரி யாகுதய்யோ! மணல்
மேவுதையோ! புகை தாவுதையோ!
காகம் பறக்காதப் பாஞ்சால நாட்டிலே
யேகமாய் வேட்டு முழங்குதே!
லோக மெங்குந் திகிரிடுதே! அதில்
வேகமாய் சத்தங்கள் பரியுதே!
எத்தனை பீரங்கி மாட்டுகிறான் கோடை
யிடிபோல் பீரங்கித் தீட்டுகிறான்
கொத்தள நெட்டையுந் தகர்க்கிறான் சுத்துக்
கோட்டை மதிலையு மிடிக்கிறான்
போடு போடென்று ரேக்குலாக் குண்டு
போட்டானே சரபோகிக் குண்டு
சாடு சாடென்று நெருங்கவே குண்டு
போடு போடென்று முழங்குதே!

நூறு நூருயிரஞ் சத்தமே கை
 நொடிக்கிருன் முன்னே திடீரென்று
தீரு தீரென்று நொடிக்கவே! யெங்குஞ்
 செந்தூள் பொடிவிண்ணும் பறக்கவே!
கரு மருந்துகொண் டடிக்குதே! அங்கே
 கண்ட விடமெல்லாம் வெடிக்கவே!
பெரு நெருப்பாகப் பிடிக்குதே! யெங்கும்
 பேர்பெற்ற பாஞ்சை நகர்மீதில்
எத்தனை சத்தம் விட்டாலும் வெகு
 எத்தனை குண்டுகள் போட்டாலும்
மத்தியான வெயில் நேரத்திலே மழை
 மாரி யிடிபோலே யிடித்தாலும்
மன்ன னூமைத்துரை கோட்டையிலே தூசி
 மண்ணும் எழும்பாது கோட்டையிலே

## ஊமையன்கோட்டை இடியாமைகண்டு, அக்கினிமேஜர்துரைக்கு வருத்தமும் ஆலோசனையும்

என்னகாணும் பாஞ்சைக் கோட்டையிலே ஒரு
 எள்ளுப் பொடிமண் ணெழும்பலையே
இப்படிக் கோட்டைபோல் கண்டதில்லை யென்று
 சொன்னனே அக்கினி மேஜர் துரை
எப்படிக் கோட்டை யிடிப்போமென்று சொல்லி
 யெண்ணுருனே பல யோசனைகள்
மண்டல முழுதும் பார்த்துவந்தோம் துரை
 வைகைக் கரைமுதல் சுத்திவந்தோங்
கண்டதில்லை யெங்குங் கண்டதில்லை யிந்தக்
 கட்டையன் கோட்டைபோல் கண்டதில்லை
பார்த்தா லித்தினிக் கோட்டையடா! தம்பி
 பார்த்தாலுஞ் சுத்த வீரனடா!
மாத்தான் கோட்டைமேல் சுட்டாலும் ஆடிக்
 காத்துப்போல் நெருப் பிட்டாலும்
கட்டையன் கோட்டை தகரலையே! ஒரு
 கடுகளவு மண் பெயரலையே!

## அக்கினிசுத்துரை எட்டையாபுரத்தானை, கோட்டை இடியாமைக்கும், இடிவதற்கும் ஆலோசனைகள் கேட்டல்

எட்டையா புரந்துரை மன்னவனே இதற்
 கென்ன ஆலோசனை சொல்வீரே!

ஊமைத் துரையைப் பிடிப்பதற்கு எனக்கு
உற்ற ஆலோசனை சொல்வீரே !
சீமைகள் கைவச மாவதெப்போ? இந்த
ஊமையன் கோட்டை யிடிப்பதெப்போ?
கரு மருந்தெல்லாம் போகுதே யெங்கள்
கையில் குண்டு செலவாகுதே
அறியாத் தேசமும் அறிந்திட்டோம் வலு
ஆற்காடு முதல் பிடித்திட்டோம்
பிடியாத் தேசமும் பிடித்திட்டோம் இந்தப்
பொல்லாதக் கோட்டைபோ லெங்குமில்லை
கெட்டித் தளங்களும் பிடித்திட்டோம் வலு
கெவுன ரென்றுபே ரெடுத்திட்டோம்
இத்தினிக் கோட்டை எங்குமில்லை பாகி !
அத்தெரிப் பானிச்சோ மாதரிச்சோ
சத்திராதி ஊமையன் கோட்டைக்குள்ளே ரொம்பச்
சுத்த வீரத்தனஞ் செய்திருக்கான்
புலிகள் போலே பதியிருக்கா னவன்
வலிமையைச் சற்றே பார்ப்போமென்று

## அக்கினீசுத்துரை, திரள்திரளாகக் குண்டு மாரியைக் கோட்டைமீது பொழிதல்

எலிகள் போலே புடைக்கும்படி மின்னல்
இடிகள் போலே முழக்குமென்றான்
இப்படி யாகவே சண்டை நடப்பதை
விற்பனனே சொல்லக் கேளுங்கண்ணே
முப்பது நாற்பது பீரங்கிச் சத்தம்
முடுக்கி விட்டானே அக்கினீசு
ராவும் பகலுங் கேவுகேவென் றங்கே
நாலஞ்சு நாளாச் சண்டை செய்தனராம்

## கும்பினிப் படையெடுப்பை, சிங்கேறும் ஊமைத்துரை, உதாசீனப்படுத்துதல்

தீவாதை யாக வெரித்தாலு மங்கே
தீப்பட்டுக் கோட்டைச் சரிந்தாலும்
பாஞ்சைப் பதிநில வரைக்குள்ளே சிங்கேறு
பார்த்தீபன் ஊமைத் துரைதானும்
பூஞ்சிட்டுத் துப்பட்டா மேல்போட்டு அங்கே
போதரவாய்க் கொலு விருப்பதுவும்
எட்டையா புரங்கொள்ளை யடிப்பதுவும் வந்து
ஏகாந்த மாய்க்கொலு விருப்பதுவும்

கூட்டங் குமிசலாய் வந்த குருவிமேல்
வேட்டைக் கெழும்பிட வேணுமென்றும்
தாட்டிமை யானக் கிடுகிட்டி நாய்க்கனுஞ்
சக்கிலியன் பொட்டிப் பகடையும்
ஆட்டும் பாட்டுமாகத் தாதரைப் போல்வேஷம்
போட்டு விளையாட்டுச் செய்தனராம்
சேட்டைக் காரனந்தப் பொட்டிப் பகடையும்
ராட்டுமேல் ராட்டு வரட்டுமென்று
வெள்ளைக் குருவிகள் கொள்ளைக் குருவிகள்
வேட்டைக் குருவிகள் பார்ப்போமென்று

## பொட்டிப்பகடையின் விளையாட்டு

துள்ளித் துள்ளிகுதி போடுவனுஞ் சுத்தக்
கள்ளனடா பொட்டிப் பகடையுந்தான்
சங்குமணி கை துளசிமணி முத்துத்
தாவட மான உத்திராட்சமணி
குங்குமணி நல்ல குண்டுமணி அவன்
கொண்டைக் கினியது இரண்டுமணி
சிங்கார மாகப் புனைந்துகொண் டான்சங்கு
சேகண்டி கையி லெடுத்துக்கொண்டான்
வங்குஞ் சிறங்குஞ் சொரிவா னுமவன்
சங்கு நாதத்தொனி செய்வானும்
சக்க தேவியையும் பணிவானும் ஊருச்
சாலுடை யாரையும் போற்றுவானும்
மிக்கவே பல்லைக் கடிப்பானு மவன்
கெக்கெக் கேயென்று சிரிப்பானும்

## கிடுகிட்டிநாயக்கன் விளையாட்டு

கிடுகிட்டி நாயக்கன் சக்ககண்டி யவன்
கிழட்டுத் தாதன்போல் வேஷங்கொண்டான்
கள்ளு வெறிபோலே மேலாட்டு மவன்
கண்சிமிட்டி யிரு காலாட்டும்
உள்ளா யுதங்களுந் தானெடுத்து அதை
உள்ளிட்டு மெள்ளக் குதிபோட்டுப்
பூனைக்கண் விழிகள் விழிக்கிறான் தம்பி
குறக்கண் வலிப்பு வலிக்கிறான்
கூனக் கிழவன்போல் நடக்கிறான் சுரைக்
குடுக்கை தனி லெடுக்கிறான்

## பொட்டிப்பகடையும், கிடுகிட்டி நாயக்கனும் துப்புத் துலுக்கும் வர்ணனை

உடும்பு நல்ல கதுவாலி தம்பி
ஊருக் குருவியடா செங்காலி
கெடும்புகள் சேர அறியாமல் சற்றே
கெவுன மார்க்கமா யெழும்புமென்று
தப்புக ளூருமி தானடித்து அவன்
தந்தனப் பாட்டுத் தமிழ்ப்படித்து
துப்புத் துறவு விசாரிக்கவே அவன்
தொங்கலி லேபோருன் பாருங்கடி!
பொட்டிப் பகடையொரு தாதன் கிடு
கிட்டி நாயக்க னிருதாதன்
ஓடி நடந்தங்கே சென்ருனே அங்கே
பட்டாளம் நிற்பதைக் கண்டானே
மாலை நேரப்பொழு தாச்சுதென்று அவன்
சாலவித்தைப் பண்ண லாச்சுதென்று
சோலைமலைத் தாதர் நாங்களென்று நல்ல
சோறு கறிகளும் வேணுமென்று
கைக்கரணம் போட்டுச் சண்டைசொன் ஞனவன்
காசிதேசம் விட்டு வாரோமென்ருன்
நெய்ப்பந்தங் கைதனில் பிடிக்கிருன் வெகு
நிசவான் போலவே குடிக்கிருன்
சிரிப்பும் வலிப்புங் குலுக்குமாய்க் கண்
சிமிட்டும் மிரட்டும் உருட்டுமாய்
வெறிப்பாக நின்று விழிக்கிரு னவன்
வெருண்டு மருண்டு குலுக்குகிருன்
"சோலைமலைத் தாதர் எங்கள்பெருமாள் நல்ல
சொக்கருட மச்சினனும் எங்கள்பெருமாள்
வாலைச் சகோதரி எங்கள்பெருமாள் நல்ல
வைகைக் கரைத்துரை யெங்கள்பெருமாள்
கோபால்சாமி எங்கள்பெருமாள் நல்ல
கொல்லிமலைத் தாதர் எங்கள்பெருமாள்
பூபாலர் போற்றும் எங்கள்பெருமாள் நல்ல
புண்ணியவான் காணும் எங்கள்பெருமாள்"
இந்த விதமாய்த் தமிழ்ப்பா டித்தம்பி
சிந்தை மகிழ்ந்து விளையாடி
தந்தனப் பாட்டுக்கள் தான்பாடத் தாதர்
கொத்தளம் போட்டுக் குதிபோட

## கும்பினிப்படையின் ஏமாற்றம்

மாத்தான் வஞ்சகம் தோற்ருமல் மதி
மயங்கிக் கும்பினிப் பட்டாளம்
வேத்தா ளென்று மதியாமல் வலு
மித்திர மென்றுந் தெரியாமல்
வேடிக்கைப் பார்த்து மகிழ்ந்தனராங் கதை
மெல்லியரே சொல்லக் கேளுங்கடி!
கும்பினிப் பட்டாளம் வேடிக்கைப் பார்த்தவர்
கூடி யிருக்கின்ற வேளை யிலே

## ஊமைத்துரை, ஐம்பது கம்பளத்துடன் நடுவிரவில் சென்று, கும்பினியாரை எதிர்த்தல்

மூடி இமைகள் விழிக்குமுன் னேசபை
கூடிக் கலந்தல்லோ கம்பளமும்
அன்பது பேருடன் ஊமையன் வீரிட்டுச்
சம்பிரதாயஞ் செய்ய வேணுமென்ருன்
செம்பாதி ராத்திரி வேளையிலே சக்க
தேவியைப் போற்றிப் பணிந்துகொண்டு
மன்னன் வலதுபுரம் மீசை இடி
மின்னுகிருப் போலே தான்துடிக்க
ராத்திரிக் காலத்தில் பாஞ்சை நகரத்து
நாடு கடந்து நெடுந்தூரங்
காத்தடியு மழைத் தூத்தலு மாச்சுதே
கன்னங் கறுத்த விருட்டுகளாம்
இருட்டு மழையு மிருட்டினிலே அங்கே
யேக வெளியானக் காட்டினிலே
சரட்டென்று சத்தங் கேளாமல் நெஞ்சால்
தவழ்ந்து போறதைப் பாருங்கடி!
மையிரு ளான இருட்டிலே தான்மழை
மாரியுந் தூத்தலும் வருகுதென்று
பையப்பைய மண்டி தான்போட்டு மெள்ளப்
பதி யிருந்து ஒளிந்திருந்து
கும்பினிப் பாராவு முறித்திட்டான் தடிக்
கம்பால் சிலம்புக ளடித்திட்டான்
அம்புலி மான்போலே பாய்ந்திட்டான் மத
யானைபோ லேசுற்றும் வீரிட்டான்

## கும்பினியார் நடுக்கமும், தொடக்கமும்

பாரா முறிந்து வருவதையுங் கண்டு
சீருள்ள கும்பினிப் பட்டாளம்

வாரு வரிசைகள் தானிருக்கக் கரு
மருந்து பொடிகள் மளமளென
பத்துவாய் தன்னில் நெருப்புவைக்க அது
ஒக்கத் தெறிக்குதே யப்புறத்தே

## மாரிவளமும், ஊமையன் குலவையும்

மத்தாப்புத் தீவெட்டிக் குத்து விளக்கெல்லா
மாரியினுல் மழை பெய்ததனுல்
சற்றும் வெளிச்சங்க ளில்லையடா சாமி
மெத்த விருட்டாகத் தோணுதடா
நித்திரை வேளை மதிமயக்கம் வலு
நேரமோ பொல்லாத ராத்திரியில்
குத்துக் குத்தென்று குலவையிட்டான் துரை
கூடாரத்துக்குள் நுழைந்திட்டான்
மொத்து மொத்தென்று வெளுக்கிருன் பட்டாக்
கத்திக்கொண்டு வெட்டி யழிக்கிருன்
வாளு ஈட்டியைக் குலுக்குகிருன் துரை
மார்களையுங் குத்தி யிழுக்கிருன்
சிலாமீன் போலே பாய்கிரு னங்கே
திரட்டித் திரட்டிக் குத்துகிருன்

## பட்டாளச்சோல்சர்கள், பட்டுக்கிடக்கும் வருணனை

பாறை யிடிந்து விழுந்தாப்போல் கன
பட்டாளஞ் சோல்சரும் பட்டாச்சு
காளிகோவில் பொங்க லிட்டாப்போல் ஒரு
மூளிக் கிடாய்வெட்டி விழுந்தாப்போல்
தாளி யுடைந்து தகர்ந்தாப்போல் முட்டைக்
கோழி கிடந்து துடித்தாப்போல்
ஆடிக் காத்துகள் அடித்தாப்போல் கெட்டி
ஆலைக் கரும்பு ஒடிந்தாப்போல்
கூட மலறி விழுந்தாப்போல் கல்லுக்
கோட்டை சிதறி விழுந்தாப்போல்
பட படென்று திடு திடென்றுவீரப்
பாண்டிய னங்கே கிடுகிடென்று
கட கடென்று குடு குடென்றுபட்டாக்
கத்திகள் கொண்டு திடீரென்று
தலைகள் வேறே யுடல்கள் வேறேஅங்கே
சாயுதே பூத கணம்போலே

வலையி லகப்பட்ட மான்போலே அங்கே
மடிந்து போகுதே பட்டாளம்
உறைப்பொட்டி போலே டொப்பிக ளோடே
உருண்டு போகுதே பட்டாளம்
பிரப்பங் கூடைபோல் டொப்பிக ளோடே
புரண்டு போகுதே பட்டாளம்
சோல்சர் பட்டாள முறிந்ததே மழைத்
தூத்தலுந் துணியை நனைத்ததே
மேஜர் பட்டாளம் வெருண்டதே பரும்
வெள்ளிரிப் பழம்போல் விரிந்ததே!
மக்காளித் துரை மடிந்திட்டான் துரை
வாசுகி தேசுகி படுத்திட்டான்

## குலவை "வேட்டினால்" ஏற்பட்டப் பீரங்கி வேட்டு

அக்கினி மேஜரு மதுகண்டான் வெகு
ஆங்காரக் கோபங்க ளெடுக்கிறான்
பட்டாளத்தைப் பார்த்துப் பாஷைசொன்னான் வெகு
கட்டுமெட் டாய்ச்சண்டை செய்யுமென்றான்
சடசடென்று துப்பாக்கிச் சுட்டான் படையை
வெடுவெ டென்று முடுக்கினராம்
கும்பினித் துரைகள் வேகமுடன் வலுக்
கோபங்கொண்டு அக்கினி மேஜர் துரை
கம்பளத் தானிந்த ராத்திரி வேளையில்
வம்பு வளர்த்ததைப் பாருங்கடி!
வேஷ மாறுட்டமாய் ராத்திரி வேளையில்
மோசஞ்செய் தானிந்தக் கம்பளத்தான்
ராசனுக்கு முறமையா யிவன்
நாசக் காலனடா ஊமையன் தான்
ஊமையனை விடக் கூடாது இப்போத்
தாமதஞ் செய்யாமல் பிடியென்றான்
நாமல்லோ அக்கினி மேஜரென்றான் பாஞ்சை
நாட்டுக்கு நானொரு காலனென்றான்
இப்படி அக்கினி மேஜர்சொல்லப் படைத்
துப்பாக்கிச் சத்த முழங்கிடவே
துப்பாக்கிச் சத்தங்கள் கேட்டிடவே தம்பி
அப்போது ஊமைத் துரைமேலே

### கவிக்கூற்று

மந்திரமோ! என்ன தந்திரமோ! இது
மயக்கமோ! அவன்கை மயக்கமோ!

சந்தனுசலத் தெய்வங் கிருபையோ! அந்தச்
சக்கதேவி யம்மன் கிருபையோ!
விழிப்பாய்க் கும்பினிச் சுட்டாலும் வெடி
மூர்க்கமாய்ச் சத்தங்க ளிட்டாலும்
பளிச்சென்று குண்டு சிதறுதே! நாவல்
பழங்கள் போலவே உதிருதே!
இப்படி ஊமையன் செய்தச் சமத்துக்கள்
இதமுடன் சொல்லக் கேளும் பெண்ணே!

## குதிரை கொள்ளலும், குலவையிடுதலும்

வலசாரி என்றொரு அச்சுமட்டம் வட
தேசத்துப் பச்சைப் புரவிமட்டம்
துரை கூடாரத்தில் நிற்குதென்றான் ஒரு
பறையனுங் குதிரைக் காரனென்றான்
பறையனைப் பூசைப் போட்டானே துரைக்
குதிரையைத் தும்பு விட்டானே
மன்னா! சிவத்தையா வென்றானே! இந்த
வைபோகி மட்டத்தி லேறுமென்றான்
நன்னய மாகவே சொல்லுகிறே னம்மள்
நாட்டுக்கும் போகவே யிந்நேரம்
அக்கினி மேஜர் கூடாரத்தி லேயொரு
அச்சுமட்டம் ஒரு கெர்ச்சிதமாய்
நிற்குதடா நமக் காச்சுதென்றான் வெகு
நேரங்க ளாச்சு விடியுதென்றான்
வெள்ளைக் குதிரையுந் தும்புவிட்டான் அதன்
மேலேறி ஊமையன் வீதிபோட்டுத்
துள்ளிய சோல்சர் மடிந்தானே கனம்
வெள்ளைக் காரர்பட் டிறந்தாரே!
அத்தரிப் பானிச்சோ மாதரிச்சோ வென்று
அக்கினி மேஜர் மனதுழன்று
கால்கள் பதறிடக் கைகள் பதறிடக்
கடுங்கோபங் கொண்டு எழும்பினராம்
அதற்கு முன்னாகக் கம்பளத் தானங்கே
ஆச்சிது வாச்சிது கொள்ளையென்று
கொள்ளைக்கு ஆரம்பந் தொடுத்திட்டா னவன்
கூடார மூலையும் பிடுங்கிட்டான்
வெள்ளிக்கட்டி வெடி கொள்ளைகொள்ளை தம்பி
மேசைப் பலகையுங் கொள்ளைகொள்ளை
கள்ளன் திருடன் களவாண் டான்வலுக்
கட்டையன் பொட்டிப் பகடையுந்தான்

தாதனைப் போல்வேஷம் போட்டப் பகடையும்
பூதம்போலே கொள்ளை யடிக்கிறான்
சாதங் கறிகளுங் கொள்ளைகொள்ளை துரைச்
சாராயப் பொட்டியுங் கொள்ளைகொள்ளை

## கம்பளத்தார் குலவையிட்டுக் கொள்ளை கொண்டு, கொலுவிருத்தல்

மானமும் வேணும் வயிறு வளர்க்கணு
மாச்சிது ஆச்சிது கொள்ளையென்று
தீனிக்கு வேற்றப் பதார்த்தமெல் லாஞ்சீமை
சேர்த்துக் கொண்டான்வழிப் பார்த்துக்
கொண்டான்
விடியக் கால மாச்சுதென்று வெகு
சடுதியில் வெளியேற வேணுமென்று
பிடிபிடி யென்று பாசுபத மென்றப்
பீரங்கியைப் பத்தி யிழுக்கிறான்
பணப் பெட்டிகளைத் தூக்குகிறான் பாஞ்சைப்
பதியில் கொண்டுபோய்ச் சேர்க்கிறான்
சணப் பொழுதிலே தாமதஞ் செய்யாமல்
தாவளம் வந்தானே ஊமையன்தான்
பலபல வென்று விடிந்திடவும் பாஞ்சைப்
பதியில் கம்பளஞ் சேர்ந்திடவும்
நிலவரைக்குள் கொலு விருந்தான் கதை
நிச்சயங் கேளுங்கள் நல்லோரே !
துரைகள் கும்பினித் துரைகள் செய்தியைச்
சொல்லவே கேளுங்கள் தோழியரே !

## கொள்ளைகளைக் கொடுத்தக் கும்பினியாரின் அவலப் பேச்சு

அரை நாழிகை வழித்தூரம் ரத்தம்
பெருகி யோடுதே யந்நேரம்
அத்தரிப் பானிச்சோ மாதரிச்சோ வென்று
அக்கினி மேஜர் மனதுழன்று
நித்திரை வேளையில் கம்பளத் தானவன்
பித்தலாட்டச் சண்டை செய்தானே
பட்டத்துக் குதிரையைக் காணோமென்றான் பாகி !
பட்டாக் கத்தியும் போச்சுதென்றான்
மின்ன லிடிபோலே முழங்கும் பீரங்கித்
தன்னைக் களவுகள் செய்தானே
அனியாயக் கொள்ளை செய்தானே யென்று
அக்கினி மேஜர் ஆலோசித்து

வெள்ளரிப் பழம் விரிந்தாப்போ லெங்கும்
வெள்ளைப் பாவாடை விரித்தாப்போல்
துள்ளியே சிப்பாகி மார்களுந் தானுயிர்
துடித் திறந்து கிடப்பதற்கும்
துர்புத்தியாய்க் கொள்ளை யடித்ததற்கும் அநேகத்
துரையைக் குத்தி யிழுத்ததற்கும்
சற்பிணை மோசங்கள் செய்ததற்கு மசல்
சாதி வெள்ளைக்காரரைக் கொன்றதற்கும்
எட்டுநாள் சண்டை செய்துபார்த்தோம் கோட்டை
எள்ளுப் பொடிமண் ணொழும்பாமல்
திட்டமாய் ஊமைத் துரைதானு மங்கே
சிங்காரஞ் செய்துகொண் டிருப்பதுவும்

## கவர்னர் ஜெனரலுக்கு அக்கினீசுத்துரை, ஊமைத்துரைச் செய்தியை எழுதி யனுப்புதல்

பட்டாளஞ் சேர விறந்ததற்குஞ் சென்னைப்
பட்டணஞ் சீமை யறிவதற்கும்
திட்டமாய்க் காயித மெழுதினு னதி
சீக்கிரங் கவர்னர்க் கனுப்பினுன்
சட்டமாய்க் காயிதச் செய்திகளைச் சென்னைப்
பட்டணத் துரைகள் தான்பார்த்து

## சென்னையின் நடுக்கமும், நாட்டமும்

மட்டுக் கடங்காத ஊமையன் தானிங்கே
வந்தாலும் வருவான் தப்பாது
கட்டுக் காவலாள் கெட்டியென்பார் சென்னைப்
பட்டணங் கோட்டை பதனமென்பார்
பட்டப் பகலி லிருபத்தஞ்சு நாழிகை
திட்டிவாசல் கதவைச் சாத்துமென்பார்
கெவர்ன்மெண்டார் நித்திரை யில்லாமல்
மௌன மாக ஆலோசனையாய்
வண்ணன் துறை முயல்போலே துரை
மார்கள் பதறியே யேதுசெய்தார்
ஏழு ஆலோசனைத் துரைமாரு மங்கே
யேகாந்த மாகவே தான்பேசி

## எட்டுநாள் ! தவறினுல், வீரசூரப் பட்டம் !

ரகசிய மாகவே அக்கினி மேஜர்க்குப்
பண்பானக் காயிதந் தெம்புடனே

வக்கணை வைத்து எழுதுவராம் துரை
மார்கள் ஆலோசனை விள்ளுவராம்
தெற்குச் சீமைக்கு அதிபதி யாகிய
தீர்க்கவான் ஊமையன் கோட்டையின்மேல்
இலட்சத்தி அன்பதி னுயிரங் குண்டல்லோ
கெர்ச்சித மாகவே போடுமென்றுன்
மிச்சமாய்ப் பீரங்கித் தீருமென்றும் லெக்கை
வீரிட்டுக் கோட்டைமே லேறுமென்றும்
எட்டுநாள் சண்டை ராவும் பகலுமாய்க்
கொட்டை பரப்பிட வேணுமென்றும்
எட்டுநாளுஞ் சரியாச்சு தென்று லந்த
மட்டுக் கடங்காத ஊமையனை
நம்மாலே வெல்லவுங் கூடாது எந்த
நாளுங் கவர்னர்சொல் தப்பாது
செம்மையுட னந்தத் தெச்சணம் பூமிக்கு
சின்ன நவாபென்று பேர்கொடுத்து
வீரசூரப் பட்டங் கட்டுமென்று சொல்லி
விரைந்து காயிதந் தானெழுதி
கார முடனே அனுப்பினரா மந்தக்
காயிதம் வந்திங்கே சேர்ந்ததுவாம்
வந்திடுங் காயிதச் செய்திகளைப் பார்த்து
மன்னவ னக்கினி மேஜருந்தான்
சிந்தை மகிழ்ந்தல்லோ அப்போது அதி
சீக்கிரம் ஊமைத் துரைதனக்குக்

## சென்னை கவர்னர் ஜெனரலின் உத்தரவை ஊமைத்துரை அறிதல்

கவர்னர் மெண்டர்கள் உத்தர வின்படி
கெர்ச்சித மாயொரு காயிதந்தான்
சவுரிய முள்ளப் பாஞ்சைத் துரைக்கல்லோ
விபரமாக யெழுதுவ ராம்
இத்தலந் தன்னில் ஊமைத்துரை நீதான்
சுத்த வீரனென்று பேரெடுத்தாய்
அஸ்தமிச்ச தொரு வேளையிலே வந்து
அஞ்சாமல் சண்டைநீ செய்தாயே
எந்தன் சமத்துக்கள் பாராது என்னே
டெதிர்த்துச் சண்டைகள் செய்யாமல்
வந்து களவுகள் செய்தாயே உந்தன்
வஞ்சக மோசம் தெரிந்ததென்றும்

நல்லது ஆகட்டு மின்றுமுதல் எட்டு
நாளைக்கு உன்னுட கோட்டையின்மேல்
வல்லமை யாகவே பீரங்கி யிப்போ
மடமடென் றதிர்ப் போடுகிறோம்
லட்சத்தி அன்பதி னாயிரங் குண்டுகள்
நெறு நெறென்று பொழிந்திடுவோம்
அச்சமில் லாமலே கோட்டைக்குள் ளிருந்து
மிச்சமாய் சண்டைநீ செய்தாக்கால்
தெச்சணம் பூமி திசைகாவல் தெற்குச்
சீமைக்குச் சின்ன நவாபென்று
முச்செக மெய்க்கப்போர் கொடுக்கிறோ முனக்கு
உறுதியாய்ப் பட்டமுஞ் சூட்டுகிறோம்
ஆற்றாமல் ஓடிநீ போனாக்கால் உன்னை
அமளைப் பொரிபோல் பொரித்திடுவோம்
பார்த்தால் சொற்ப மனிதனென்று ஆடிக்
காற்றினில் பஞ்சுபோல் தூற்றிடுவோம்
வஞ்சகச் சண்டைகள் செய்யாதே! பாவி
மார்க்கமும் தப்பி நடக்காதே!

## அக்கினீசுத்துரை, ஊமைத்துரையை, நேரே நின்று எதிர்த்துப் போராட வற்புறுத்துதல்

நெஞ்சுறுதி யாக நேரேநின்று பாவி
அஞ்சாமல் சண்டைநீ செய்தாக்கால்
மனது போலே நடக்கிறோம் கனம்
பொருந்தப் பட்டமுஞ் சூட்டுகிறோம்
தனதாய் நம்மிடம் வந்தாலும் நல்ல
சமத்த னென்றுபேர் தான்கொடுப்போம்
ராசிக ளாயிங்கே வந்தாக்கால் ஒரு
நாளும் மறப்பது இல்லையென்று
சீமைகள் பூமிகள் தான்கொடுத்து வீர
சூரனென்று பட்டங் கட்டிவைப்போம்
வக்கணை வைத்தல்லோ காயிதத்தை அங்கே
வகை வகையாய் தானெழுதி
முத்திரை வைத்தல்லோ முகாம்வைத் தானதை
மூன்றாம் பிறைபோலே சுவடித்தான்
அச்சணங் காயிதந் தானெழுதி யிதற்க்
காரை யனுப்புவோ மென்றுசொல்லி

## அக்கினீசுத்துரையின் ஆலோசனையில், பிற்கட்டு மேஜரின் குறுக்கீடு

ஆலோசனை செய்யும் வேளையிலே ஒரு
அளப்புச் சொன்னனே பிற்கட்டரும்
நம்முட சிப்பாகி மார்களிலே நம்மள்
ராசி நாயக்க னென்றொருவன்
முன்னாலே பாஞ்சைப் பதிதனிலே அவன்
முக்கியமாய்ச் சேவகஞ் செய்தவன் தான்
எந்த விதத்துக்குந் தந்திரக்கார னல்ல
ஒத்துக்காரன் மனப் புத்திக்காரன்
தந்திரக் காரன் ராசி நாயக்கனைத்
தானழையு மென்று தானுரைத்தான்
பிற்கட்டு மேஜ ருரைத்திடவே அப்போ
பிரபல அக்கினி மேஜர் துரை
ராசி நாயக்கனைத் தானழைத்து அங்கே
ராசிகளா யென்ன சேதிசொல்வான்
வல்லமை யாகிய பாஞ்சைப் பதித்துரை
மன்னவன் ஊமையன் தன்னிடத்தில்
நல்லதோர் காயிதந் தான்கொடுத்து வெகு
நளினமாய்ச் செய்தி தானுரைத்து
இன்பமுட னெனக்கு மறுகடிதம் வாங்கி
இப்போதே வாவென்று தானுரைத்து

## இராசி நாயக்கன், கும்பினியாரின் கடிதத்தை, நடுக்கமும் அச்சமுங்கொண்டு எடுத்துச் செல்லல்

அப்போது ராசி நாயக்கனுமே அங்கே
அதிக ஆலோசனை செய்தானே
காயிதந் தன்னையுந் தான்வாங்கி அங்கே
கவலை தானுமே உண்டாகி
காயிதந் தன்னைக் கொடுக்கும்போது நம்மைக்
கண்டு சும்மாவிடா னென்றுசொல்லி
அய்ய னெழுத்துக்க ளெப்படியோ ! நாமள்
அநியாய முன்செய்த தீவினையோ !
அணியணி யாகவே பட்டாள மிப்போ
ஆராயிரம் பேர்கள் தானிருக்க
கணிச மாகவே நம்மளைப் பிடித்துக்
காயிதங் கொண்டுபோ வென்றுசொன்னான்

தலையில் விதியை நோகவேணு மென்று
    தானடந்தான் ராசி நாயக்கனும்
எப்படியோ வென்று மேல்பதறி அங்கே
    யெடுத்தடி வைக்க மனமிடைந்து
பையப்பைய்ய நடை தானடந்து அந்தப்
    பாஞ்சைக் கோட்டைக்குள் தானுழைந்தான்
அப்போது பாஞ்சைக் கோட்டையி லதிசயம்
    எப்படிச் சொல்லுவேன் தோழியரே!

## ஊமைத்துரையின் காவல் உத்தரவு

கோட்டையைச் சுத்திக் கும்பினிப் பட்டாளங்
    குமிச லாக வளைந்ததென்று
கோட்டைக்குள் வந்தாலும் வருமென்று அங்கே
    கொடூரவான் ஊமைத் துரைதானும்
பொட்டிப் பகடையு முத்தன் பகடையு
    மைத்துன மார்க ளிருபேரையும்
கோட்டை வாசலில் காவல்வைத்துத் துரை
    குமுக்குட கம்மென்று மிருந்தானப்போ

## ஊமைத்துரை சமூகத்தில் இராசி நாயக்கன்!

நாயக்கன் வந்ததைப் பார்த்துப் பகடைகள்
    நாகரீகமாக வேது சொல்வான்
கத்தி யெடுத்து ஓங்கினு னப்போக்
    கலங்கி நாயக்கனு மேதுசெய்வான்
வெட்ட வேண்டா மென்று கெஞ்சிக்கெஞ்சி
    விரைவாய்க் காயிதந் தானெடுத்து
காட்டினு னப்போது பகடைகள் தானுமே
    கைவாள் தன்னையுங் கீழேவைத்து
பார்த்தீபன் ஊமைத் துரை சமூகத்திலே
    பண்பாய்க் கொண்டுபோய் விட்டார்கள்
அப்போது ராசி நாயக்கனு மங்கே
    அஞ்சி ஒடுங்கியே மேல்பதறிக்
காயிதந் தன்னையுந் தானெடுத்து அந்தக்
    கர்த்தன் ஊமைத்துரை கைகொடுத்து
பணிந்தானே ராசி நாயக்கனு மப்போதுப்
    பார்த்தான் ஊமைத் துரைதானுங்
காயிதந் தன்னையுந் தான்பார்த்து அந்தக்
    கர்த்தனுக்கோ கோபந் தானுகி

## கடிதங்கண்ட ஊமைத்துரையின், இறப்பு, நிகழ்வு, எதிர்கால நினைவுப்பேச்சுக்கள்

நாலா யோசனை தானினைத்து நல்ல
நன்னய வான்ஊமைத் துரைதானும்
மாற்றுக் கடித மெழுதுவாரா மந்த
மன்னவன் அக்கினி மேஜருக்குக்
காளையார் கோவில் காட்டிலே நான்
காணுத வேளை மிகப்பார்த்து
அண்ணரைச் சுத்தி வளைந்துகொண்டு அநி
யாய மாகவே தான்பிடித்து
ராசிக ளாகவே போவோமென்று சொல்லி
நயமாய்ச் செய்திகள் தானுரைத்து
என்னை வரும்படி யாயழைத்து நீ
ரெல்லோரையுஞ் சேர விலங்கடித்து
அண்ணரையுந் தானு பதிப் பிள்ளையையும்
அநியாய மாகவே கொன்றுயே!
சற்பிணைக் காரா! உன்னுடைய நல்ல
சாதுரிய மினிப் பார்த்திடலாம்
ராசிக ளாய்வரச் சொன்னுயே விசு
வாசிபோல் காயிதம் போட்டாயே
சோடு பிரியாத அண்ணரையுஞ் சுத்த
வீரரையுஞ் சாகத் தான்கொடுத்து
காவல்கார மகன் வெள்ளைய னையுங்
கந்தன் பகடையுந் தானிழந்து
போசன் தானு பதிப்பிள்ளை யாகிய
புண்ணிய வானையுந் தானிழந்து
இனிமேல் நான்தான் உயிரை வைத்துக்கொண்டு
இருந்து சீமைகள் ஆள்வதிலும்
அநியாய மாகிய அக்கினி மேஜருன்னை
அலறக் குத்தியே மண்டியிட்டு
சோல்சர் தலைகளைத் தான் அறுத்துத்
துணித்து யுத்தக் களத்தினிலே
நானு மடிவே னென்று சொல்லி
நயமாய்க் காயிதங் கண்டெழுதி
வேங்கைப் புலிக்கொரு தூங்கக் கிடாய்க்குட்டிச்
சராங்கமாய் மேன்மை கொடுக்குமென்றும்
ஆங்காணும் நல்ல வயிரிக்குச் செங்காலி
அன்பானச் சுகத்தைக் கொடுக்குமென்றுன்

சிங்கத்துக்கு நரி பட்டங் கட்டி
தேசத்தை யாண்டிட வைக்குமென்றும்

## ஊமைத்துரையின், வக்கணைக் கடிதத்தைக் கண்ட அக்கினீசுத்துரையின் எக்களிப்பு!

இப்படி யாகவே வக்கணை வைத்து
எழுதினுனே மறு காயிதமுஞ்
செப்பமுமுள்ள காயிதந் தானெழுதித்
தீரவா ஞயக்கன் தன்னிடத்தில்
கொடுத்துப் போவென்று தானுரைக்க அங்கே
கொற்றவன் வாங்கியே தானடந்தான்
நடந்து வந்துமே அக்கினி மேஜரும்
நயமாய்க் காயிதந் தான்கொடுத்தான்
காயிதம் பார்த்து அக்கினி மேஜருங்
கண்க ளிரண்டும் பொரித் தான்பறக்க
நல்லது நல்லது பார்ப்போமென்று அங்கே
நாலா ஆலோசனை தானுகிச்
சில்லாக் கோர்ட்டுச் சீமையோ ? விது
சின்ன நவாபுதன் கோட்டையோ ?
கல்லாலே யிது கோட்டையோ? மண்
கட்டுவேலை வல் லூட்டியோ?
அல்லாக் கிருபை மேன்மையி னுலிந்தச்
சொல்லுறுதிக் கோட்டை பிடிக்கலாம்
சொற்பப் பாளையக் காரனடா! வலுத்
துட்டனடா ஊமைத் துரையடா!
அற்பக் கோட்டைப் பிடியாவிட்டால் பாகி
அக்கினி மேஜர்க்குப் பேரேது ?
கும்பினி யாரென்ற பேரேது? சில்லாக்
கோர்ட்டு ஞாயமுந் தீர்ப்பேது?
வம்பு குறும்பு மொடுங்காது? இந்த
மாத்தான் கெடும்புகள் நில்லாது?
மெட்டுள்ள கோட்டைகள் பிடித்திட்டோஞ் சாதி
வெள்ளைக் காரரென்று பேரெடுத்தோம்
எட்டெட் டறுபத்து நாலு கலைக்கட்டர்
இங்கிலீசுக் கொடி நாட்டிவிட்டோம்
மண்கோட்டைக் குள்ளே கம்பளத்தான் ரொம்ப
வழக்குச் செய்துகொண் டேயிருக்கான்

## ஊமைத்துரை கோட்டைமீது, கும்பினிப் பட்டாளம் படையெடுப்பு

சிங்கச் சினமாகத் தோணுதடா! தீன்
 தீனென்று கோட்டைமே லேறுமென்றான்
அந்நேர முன்னூறு நானூறு சத்த
 மின்ன லிடிபோலே முழக்கினான்
எந்நேரம் பார்த்தாலும் பாஞ்சைக் கோட்டைமேல்
 மண்ணுங் கல்லுமாகத் தான்விழவே
வான மொலிபோலே முழங்குதே புகை
 வானமட்டுஞ் செந்தூள் பறக்குதே
வீறு வீறு டபீரென்று வலு
 மேகசஞ் சாரம்போல் திடீரென்று
சடசட சடசட சடமடா வென்று
 சடீரென்று குண்டுபட் டுருகுதே
கடகடா திடுதிடு வென்று
 கணீரென்று குண்டு தகருதே
பந்தயங் கைவச மாச்சுதென்று எங்குஞ்
 செந்தூள் பறக்குதே கோட்டையின்மேல்
இந்த விதமாக அந்தியுஞ் சந்தியும்
 எட்டுநாள் சண்டைதா னடக்குதே!

## பட்டாளமேஜர், பாதாள மண்கோட்டை இடியாமைகுறித்து மீண்டும் வருந்துதல்

ஆயிரம் பதி னாயிரங் குண்டுக
 ளாங்காங்கே நின்று அடித்தாலும்
ஈயும் எறும்பும் நுழையும்படி மண்
 ணெழும்பலையே! பாஞ்சைக் கோட்டையின்மேல்
எத்தனை பீரங்கிச் சுட்டாலும் ஒரு
 எள்ளுப் பொடிமண் ணெழும்பலையே!
சத்த மேகம்போல் முழக்கினாலும் ஒரு
 தவிட்டு மண் ணெழும்பலையே!
கோட்டையில் சத்தம் போடுபோ டென்றாலுங்
 குண்டு உடைந்து விழுகுதையோ!
நாட்டிலே தீப்போட் டெரித்தாலும் பாஞ்சைக்
 கோட்டைக்குள் கம்பளத் தானிருக்கான்
என்னமாய்க் கோட்டை யிடிப்போமென்றா னவன்
 சொன்ன சொல்லுச்சரி யாச்சுதென்றான்
இனிமேல் யோசனை யென்னவென்றான் கும்பினி
 நிர்ணயந் தப்பியே போகுதென்றான்

வச்சடி வாங்காமல் சுட்டதனுல் தம்பி
மட்டற்றக் குண்டுகள் செலவாச்சு
லட்சத்தி அன்பதி னுயிரங் குண்டுகள்
சொச்சமுஞ் செல வாச்சுமென்றுன்

## கும்பினியார் கோட்டைமேலேறிச் சண்டை செய்தல்

ஆகட்டுங் கோட்டைமே லெக்கை யேறுமென்று
அக்கினி மேஜ ருரைத்தனராம்
ஏகமாய்ச் சோல்சர் பட்டாளம் லெக்கை
யேறினர் கோட்டைமே லந்நேரம்
கோட்டைக்குள் ளிருந்து கம்பளத்தார் எட்டிக்
குத்தி யிழுத்து மலத்துவராம்
தீட்டிய வேல்கொண்டு தீட்டுவராங் குதி
போட்டுக் குத்திவீழ்த் தாட்டுவராம்
லெக்கைய நாயக்க னெருபுறம் பெரிய
லெக்கையச் சொக்கைய னெருபுறம்
கொக்குப் படையிலே ராசாளி பாய்ந்தாப்போல்
குத்தி யிழுத்து மலத்துகிறுன்
முத்தன் பகடையும் பொட்டிப் பகடையும்
மைத்துன மார்க ளிருபேரும்
சுத்தவீரன் கையில் வெடியெடுத்தா னங்கே
யுத்த களத்தில்முன் னேகுதித்தான்

## மைத்துனர்க்கு மைத்துனர் சபதங் கூறுதல்

முத்தன் பகடைக்குப் பொட்டிப் பகடையும்
உத்த சமாசா்ரம் ஏதுசொல்வான்
விஸ்தார மாய்ச்சொல்லக் கேளுமச்சான் நம்மள்
முன்னேறிப் பட்டாளத் தூடேசென்று
நடுவே வாரானே சோடுதாரி யவன்
கடுங்கோபி வெள்ளைக் காரனடா !
கடுங்கோப மான துரையைத் தனெரு
கைபார்க்க வேணு மச்சானே
மண்ணும் விண்ணுஞ் செந்தூள் பறக்கவே நாமள்
ஒன்றுபோல் வோட்டுச் சுடவேணும்
சாரிபோட்டு அந்த வெள்ளைக்காரன் மேட்டு
ஏறி வருகிற குதிரையைப்
பாரிக் குதிரையை நீயுஞ்சுடு மச்சான்
வீரிய மாக வீழ்த்தாட்டு

அடியோ டேமட லோடே அவ
னேறுங் குதிரை மட்டத்தோடே
முடிசா யும்படித் செய்தாக்கால் மச்சான்
முத்துமாலே யிப்போ வாங்கித்தாரேன்
பொன்னுஞ் சரிகைத் துப்பட்டாவுந் துரை
மன்ன னிடத்தினில் வாங்கித்தாரேன்
சொன்னச் சபத முடித்தாக்கால் இன்னுஞ்
சொல்லுகிறேன் கேளு மச்சானே!
மண்டலம் புகழ விரண்டுபேர்த் தங்கையைக்
குண்டுமாத் தாய்க்கட்டிக் கொள்வோமென்ருன்
என்றல்லோ பொட்டிப் பகடையுந் தான்துரை
கண்டத்தைப் பார்த்தல்லோ நெறித்திட்டான்

## கும்பினிப் பட்டாள மேஜர் இறத்தல்

சட்டென்று வேட்டு எழும்பிடவே துரை
பொட்டுலர் பட்டல்லோ சாய்ந்தானே
கிட்ட நின்ற முத்தன் பகடையுஞ் சரி
மெட்டுமெட்டாய் வெடி சுட்டனராம்
அதிக சடுதியில் துரை குதிரைக்கு
முதுகுப் புறத்திலே குண்டுதைத்து!
குதிரை யோடே துரை யொருத்தனுங்
குண்டி குப்புற விழுந்தானே
குப்புறச் சாய்ந்து விழுந்தானே துரை
குதிரை நாலுகாலும் பரப்பி
டப்பென்று கீழே விழுந்துதையோ கதை
யெப்படிச் சொல்லுவேன் தோழியரே!
பட்டாடள மேஜர் பட்டு விழுகவே
பொட்டிப் பகடையுங் கிட்டவந்து
கிட்டவந்து துரை குடலேப் பிடுங்கி
பொட்டிப் பகடையும் மாலேயிட்டு
வட்டமிட் டாடுகிருன் கெட்டிகெட்டி அங்கே
பட்டாள மேஜரை வெட்டிவெட்டி
சட்டஞ் சட்டமென்று முத்தன் பகடையுந்
தாவிக் குதிக்கிருன் பாருங்கடி!
அவன் சமத்து மிவன் சமத்தும் சிவ
னறியச் சொல்லி முடியாது
கவனமாய்த் தண்ணீர் தாகமென்று வெகு
சாராயப் பொட்டியுங் கொள்ளேகொண்டு
பட்டா ளத்தை முடுக்கிக் குத்தி மொட்டைப்
பரும்புக் கம்பாலே தான்விறட்டி

திட்டெனக் குப்பினிப் பட்டாளம் பின்னும்
எட்டுத் திசைக ளதிரும்படி
பட்டாளஞ் சேரக் குமித்துக்கொண்டு பின்னும்
வெட்டு வெட்டென்று குதிபோட்டு
திட்டென மொட்டைப் பரும்பைவிட்டுத் துரைகள்
திரும்பிக் கோட்டைமே லேறினராம்
அப்போது ஊமைத் துரைதானுஞ் சமத்
தெப்படி செய்கிருன் பாருங்கடி !

## கும்பினிப் பட்டாளத்தின் மீது கூழைக்காய்ச்சி ஊற்றுதல்

கப்பரை ஓட்டிலே கேப்பைக்கூழைக் காய்ச்சி
குப்புறச் சா(ய்)ச்சான் படைமேலே
வேப்பெண்ணை விட்டுக் கேப்பைக்கூழைக் காய்ச்சி
குப்புறச் சாய்ச்சான் படைமேலே
சாய்ப்பாகவே சோல்சர் பட்டாளம் பட்டுச்
சட்டை விட்டோடி முறிந்ததையோ !
வெள்ளரிப் பழம் விரிந்தாப் போல்படை
துள்ளித் துள்ளிமடி வாகுதையோ!
எள்ளுப் பொறிப்போலே சிதறியே அங்கே
இறந்து போகுதே பட்டாளம்
இப்படிச் சண்டை நடக்கையிலே கதை
இயம்பக் கேளுங்கள் நல்லோரே !

## ஊமைத்துரையின் வேடிக்கை !

விற்பனமுள்ள ஊமைத்துரை தானும் ஒரு
வேடிக்கை செய்யவுந் தான்நினைத்து
நற்புள்ள லெக்கைய நாயக்கனிடம் அங்கே
நல்லதோர் யோசனை யேதுசொல்வான்
சோல்சர் தலைகளைத் தானறுத்து அதைத்
துண்டித்து வேறே பொதிசேர்த்து
பொதிமாட்டு மேலப் பொதிபோட்டுச் சென்னைப்
பட்டணம் போவென்று தானுரைத்தான்
சென்னைப் பட்டணம் போய்ச்சேர்ந்து தேங்காய்ப்
பொதியென்று கீழிறக்கி வைத்து
நன்னய மாகவே வந்துடென்று வீரப்
பாண்டியன் சொல்லி யுரைத்திடவே

## லெக்கைய நாயக்கன் சென்னைக்குக், கும்பினி யாரின்தலைகளைத் தேங்காய்ப் பொதியென வெடுத்துச் செல்லல்

அப்போது லெக்கையன் சோல்சர் தலைகளை
யறுத்தல்லோ பொதிப் பிடிக்கிறான்
முப்பது நாற்பது தேங்காய்ப் பொதியென்று
செப்பமாய் மாடுகள் சேகரித்து
நாற்பது பொதியுந் தானேத்தி லெக்கைய
நாயக்கன் தானும் புறப்பட்டான்
விற்பன மானதோர் பத்துப் பேர்களுடன்
வீரிய லெக்கைய நாயக்கனும்
பொதி மா(ட்)டுகளைத் தான்விறட்டிச் சென்னைப்
பட்டணஞ் சேர்ந்தார்க ளப்போது
முப்பது நாற்பது தேங்காய்ப் பொதியென்று
செப்பமாய்ச் சீமை சேர்ந்தனராம்
மத்தியான வெயில் நேரத்திலே பொதி
வந்ததே சென்ரல் புறந்தனிலே

## சென்னையில், லெக்கைய நாயக்கனிடத்தில் கும்பினிச் சிப்பாகியின் கேள்வி?

வந்தப் பொதிகளைத் தான்பார்த்து அந்த
வாச லதிகாரி யென்னசொல்வான்
எந்தவூர்! எவ்விடம்? என்ன வியாபாரிகள்?
இயம்பு மென்றவர் தான்கேழ்க்க
சந்திச்சுக் கேழ்க்கும் பொழுதிலே தானப்போ
சொந்த வியாபாரிக ளென்னசொல்வான்
தென்தேச மையா! நாங்க ளிருப்பது
தேங்காய்ப் பொதியிது சாமியென்றான்
தேங்காய்ப் பொதியிது வென்றுரைத்தா னிந்தச்
சீமையில் வியாபாரஞ் செய்யவென்றான்
ஆங்காணும் பொல்லாங்கு ஒன்றுமில்லைச் சாமி
நாங்களும் வியாபாரி யென்றுரைத்தான்
நல்லதென் றனதி காரிகளு மங்கே
போதர வாகக்கொண் டாருமென்றான்
சொல்லும் பொழுதிலே அந்நேர மங்கே
சொந்த வியாபாரிக ளென்னசொல்வான்

## சென்னையில் லெக்கைய நாயக்கன் தலைகளாம் பொதிகளை, வாளா போட்டு மறைதல்

இதற்குப் பின்னால் பொதிவருது சாமி
ஏகிக்கொண்டு வரோ மென்றுசொல்லி
பின்னாலே பொதி வருகுதென்று சொல்லி
தன்னாலே பொதியைத் தள்ளிவிட்டு
மன்னவன் கம்பளம் லெக்கையன் சேகரஞ்
சன்னைபோட் டோடியே போயினராம்

## கும்பினிச் சிப்பாகிப் பொதியைப் பிரித்துப் பார்த்தலும், வெருண்டு அறிவித்தலும்!

போனபின் னந்த அதிகாரி ஒரு
பொதியை நீக்கியே பார்த்தனராம்
ஆனதனால் சுத்த வெள்ளைத் தலையாக
ஆவென்று பல்லுப் பிளப்பாக
பரட்டைச் செம்பட்டை மயிரோடே தலை
தொறட்டு வில்லங்க மாயிருக்க
பிரட்டிப் பார்த்து மனம் நடுங்கித்
திருட்டுப் பயல்க ளென்றுசொல்லி
கூக்குரல் போட்டுத் துரைமார்க ளிடஞ்
சாக்கிரதை யாகச் சென்றுசொன்னான்

## கும்பினித் துரைமாரின் கலக்கமும், பதனமும்

மார்க்கமுள்ள துரை மார்கள்பயந் தங்கே
வங்காள மெங்கும் பதனமென்பார்
ஊமையன் தானிங்கு வந்திட்டானே வென்று
சீமைக் கிப்போதே பயணமென்றார்
தாமதஞ் செய்யவுங் கூடாது துரைச்
சாணியைக் கூட்டி நடவுமென்றார்
கோட்டைக் கதவை யடையுமென்பா ரங்கே
பாட்டை மார்க்கம்வழி பாருமென்பார்
பேட்டையி லேசனங் கூடுமென்பார் நம்மள்
வீட்டு வாசல்பாரா நில்லுமென்பார்
பண்டக சாலைப் பதனமென்பார் சென்னைப்
பட்டண முழுதுங் கெட்டியென்பார்
வண்டனடா அந்த வாய்பேசா ஊமையன்
இந்தாலே வந்திட்டான் பாருமென்பார்

இப்படி யாகத் துரைமார்க ளங்கே
தொப்பிக் கழற்றி அடித்திடவே
விற்பன முள்ளத் துரைமார்க ளங்கே
மேலான யோசனை யாயிருந்தார்
சென்னைப் பட்டண முழுவது மிப்படித்
திமில குமிலமா யிருக்குதே!
என்னசொல் வேனிந்தப் பாஞ்சைப் பதியிலே
எந்நேரம் பார்த்தாலும் அக்கினீசு
கன்னி மூலைப்பின் கோட்டையிலே லெக்கை
கட்டியேறிச் சண்டை செய்தாலும்
பட்டாளஞ் சேதமாய்ப் போகுதே யல்லாமல்
ஊமையன் கோட்டையைப் பிடிப்பதில்லை!

## அக்கினீசுத்துரை எட்டையாபுரம் ஜமீந்தாரை ஆலோசனைக் கேட்டல்

அப்போது அக்கினி மேஜர் துரைக்கு
அதிக ஆலோசனைகள் தானுகி
எட்டையா புரந்துரை ஜமீந்தாரைக் கூப்பிட்டுக்
கிட்டவைத்துத் துரை சொல்லுவாராம்
வாய்பேசாப் பாண்டியன் கோட்டை பிடிக்க
வகைசொல்லு மென்று துரைகேழ்க்க
அப்போது எட்டையாபுரந் துரையும் அதற்கு
ஆன வகைகள்தா னேது சொல்வான்

## எட்டையாபுரத்துரையின் "தீவைக்கும்" ஆலோசனை

கெட்டியாய் ஊமைத் துரையுடக் கோட்டையில்
கிச்சுக் குடுக்கைதான் போடவேணும்
பாஞ்சை நகரத்துக் கோட்டைப் பிடிக்கவே
பஞ்சுப் பொதிகளைச் சுத்திவைத்து
கோட்டையைச் சுத்திப் பஞ்சு மருகையைக்
குமிச லாகவே வைத்துக்கொண்டு
மிளகு வத்தலைப் பொதிபொதி யாகவே
மேன்மேலும் போட்டுக் கலந்துகொண்டு
அக்கினி வைக்கவும் வேணுமென்று துரை
ஆலோசனை சொல்லும் வேளையிலே

## அக்கினீசுத் துரை எட்டையாபுரம் ஆலோசனையைக் கேட்டல்

கக்கிஷக் காரன் அக்கினி மேஜரும்
　　காரியந் தானென்று தான்மதித்து
அப்படிப் பின்னாலே செய்யவேணு மிப்போ
　　அதிகக் குண்டுகள் போடவேணும்
என்று மதித்துமே அக்கினி மேஜரும்
　　ஏவினன் பீரங்கித் திடீரென்று
ஊஞ்சலா மேடை ஒசந்தமேடை போட்டு
　　ஒன்பது பீரங்கித் தானேற்றி
மோருசா மேடையில் பீரங்கி வைத்து
　　நூறு சுப(ர)த மடித்தானே
சீரான ஊமைத் துரைக்கோட்டை யெங்குஞ்
　　சூரு வளிபோலே சுழறுதே

## ஊமைத்துரை தன்கோட்டை தகர்வதை யறிந்து செப்பஞ் செய்தல்

நிலவரை யெங்குந் தகராதே அங்கே
　　நேருள்ளக் கோட்டைமண் சிதறுதே
பலகை பிளந்து வெடிப்பதை வீரப்
　　பாண்டியன் ஊமைத் துரைகண்டு
இடந்தைக் கோட்டைத் திடஞ்செய்து உள்ளே
　　ஏகாந்த மாகக் கொலுவிருந்து
அடர்ந்த ராத்திரி வேளையிலே
　　கடிந்துக் கோபங்கொண் டேயெழும்பி
பத்துப் பதினைந்து பேர்களுடன் வீரப்
　　பாண்டியன் பட்டாளத் தூடேசென்று

## ஊமைத்துரையால் இறந்தக் கும்பினியான் எண்ணிக்கை

பட்டாளத்தில் விழுந்து குத்திஒரு
　　மட்டுக் கடங்காமல் சண்டைசெய்து
தொட்டியான் சமத்துப் பாரென்று சோல்சர்
　　துரைகளைக் குத்தியே தானிழுத்து
இப்படி ஊமைத் துரைவீரப் பாண்டியன்
　　எத்தனை பேர்களைக் கொன்றுபோட்டான்
பட்டா ளத்திலே நூறுசனம் தம்பி!
　　பாராக் காரரி லன்பதுபேர்

இங்கிலீசுத் துரை மார்களிலே தம்பி!
ஏழு துரைமார்க ளிறந்திட்டார்
அவுல்தார் சீமையதார் மார்களிலே அங்கே
அன்ப தறுவது பட்டாச்சு
ராத்திரி காலத்தில் வேட்டையாடி வெகு
ராணுவத் தாரையுங் கொன்றுழக்கி
பார்த்தீபன் ஊமைத் துரைவீரப் பாண்டியன்
தூத்துக் குடியையுங் கொள்ளைகொண்டு
எட்டையா புரத்தையுங் கொள்ளைகொண்டு அங்கே
பட்டிக்காடு முதல் தீப்போட்டு
வந்து நிலவரைக் கோட்டைக்குள் ளேயவன்
சிந்தை மகிழ்ந்து கொலுவிருந்தான்

## எட்டையாபுரத்தாரின் தீ வைக்கும் ஆலோசனையை நிறைவேற்றல்

இப்படித் துஷ்டத் தனங்களையுங் கண்டு
எட்டையா புரந்துரை கோபங்கொண்டு
அக்கினி மேஜருஞ் சற்பிணை யாகவே
அதிக யோசனை தான்முடித்து
முன்னாலே யோசித்தப் பிரகாரம்
முஸ்தீப்புச் செய்யவும் வேணுமென்று
எண்ணியே அக்கினி மேஜருந் தானங்கே
யேதுரைப்பான் யுத்தக் களத்தினிலே
பட்டாளத்துச் சனம் பட்டதையு மந்தப்
பாராக்காரர் சனம் பட்டதையும்
துரைகள் பட்டு இறந்ததையுங் கண்டு
துயரங்கொண் டந்த அக்கினீசு
சற்பிணை யாகப் புகைப்போட வென்று
தானெண்ணி அக்கினி மேஜருந்தான்
எட்டையா புரந்துரை சொன்னப் பிரகாரம்
ஏகமாய்ப் பஞ்சுப் பொதியை வைத்து
கோட்டையைச் சுத்திப் பஞ்சுப் படுக்கையைக்
குமிகுமி யாகத் தான் சுமத்தி
மிளகு வத்தல் மருகையு மங்கே
மேன்மே லாகக் கலந்துவைத்து
காடித் தண்ணீர் சேகரித்துச் சிப்பாகிக்
கண்ணிலே தானுமே வைத்துக்கொண்டு
நெருப்பு வைத்தல்லோ கிச்சுக் குடுக்கைகள்
நிமிஷத்தி லங்கே போட்டார்கள்

## அக்கினீசுத் துரை, கோட்டைமீது, பீரங்கித் தொடுத்தல்

அதுவு மல்லாமல் அக்கினி மேஜர்
அதிகக் குண்டுகள் தான்போட்டார்
கெர்ச்சிதஞ் செய்தல்லோ பாஞ்சைக் கோட்டைமேல்
கிச்சுக் குடுக்கைகள் போட்டனராம்
மிச்சமாய்ப் புகைக் குண்டுகள் தானெங்கும்
வெடிக்குதே! புகை யடிக்குதே!
தேங்காய்க் குடுக்கைபோ லிருக்குங் குண்டுகள்
மூங்கில் பிளாச்சுபோ லிருக்குமாம்
பாங்குட னேயதி லிருக்குஞ் சல்லிகள்
சராங்க மாகத்தா னடிக்குமாம்
பளிச்சென்று மின்ன லிடிக்கவே அந்தப்
பாஞ்சைப் பதிமண்ணும் வெடிக்கவே
புளிச்சத் தண்ணீரைக் கண்ணில் வைத்துக்கொண்டு
போட்டானே புகைக் குண்டுகளும்

## ஊமையன் நிலவரைக் கோட்டையதைத் தீப்பற்றி யெரிதல்

நில வறைகள் திகிரிடுதே! அங்கே
கலக்க மாகுதே கோட்டைக்குள்ளே
பலபலென்று மண் ணுதிருதே! அங்கே
பார்த்தத் திசையெல்லாஞ் சிதறுதே!
கங்கு லிருள்போலே தோணுதையோ! புகை
காடு காடாகவே மண்டுதையோ!
எங்கும் புகைமண்டி யெழும்புதே! கோடை
யிடிகள் போலவே முழங்குதே!
திக்குத் திசைகள் தெரியாமல் எங்குந்
தீயாகப் பிடித் தெரியுதே!

## கம்பளத்தாரின் அவல நிலை!

மண்டுதையோ! புகை நிலவறைக் குள்ளே
மயங்குதே! கம்பளம் நொடிக்குள்ளே
கண்ணைக் கவிழ்ந்து விழுந்திடுவார் சிலர்
தளும்புவார் வெளிக் கிளம்புவார்
ஒண்ணும் ரெண்டுமாக வெளியேறித் தப்பி
ஓடிப் பிழைத்தல்லோ போயிடுவார்

### ஊமைத்துரை, சிவத்தையா முதலானோர் மல்யுத்தம் செய்தல்

இந்த விதிக்கென்ன செய்வோமென்று மன
தெண்ணி ஊமைத்துரை யந்நேரம்
சிந்தை கலங்கிச் சிவத்தையா கம்பளச்
சேருவைக் காரர் குமித்தெழும்பி
முன்னும் பின்னும் பரியவொட்டாமல் புகை
தன்னாலே மண்டுதே யென்றுசொல்லி
இனிமே லொருகை பார்க்கவேணு மென்று
எழும்பி ஊமைத்துரை முழங்கி
மண்டி வரிசைகள் தான்போட்டு அங்கே
மல்யுத்தஞ் செய்யும் வேளையிலே

### கும்பினியாரை, எதிர்த்துப் பாஞ்சாலங் குறிச்சிப் பெண்களும் போரிடுதல்

பெண்டுகளுங் கூடத் தானெழும்பிச் சண்டை
செய்தார்கள் திண்டு முண்டாகப்
பாரி யுலக்கை தடியெடுத்து அங்கே
பட்டாளஞ் சோல்சரைத் தான்முடுக்கி

### ஊமைத்துரை, தன்னாட்டுப் பெண்களின், வீரத்தைக் காணுதலும், அவர்களை வாளினால் வெட்டிப் போடுதலும்

சீறி யடிக்கும் பொழுதிலே தானந்தச்
செல்வன் ஊமைத்துரை தானுங்கண்டு
மார்க்கமுந் தப்பியே போச்சுதென்று மனத்
தீர்க்கமுட னந்தக் கன்னிகளை
தீர்க்கமுட னந்தக் கன்னிகளைப் பிடித்துச்
செல்வன் ஊமைத்துரை யப்போது
ஒவ்வொரு வெட்டாக வெட்டினானே மன
துற்றுத்தான் ஊமைத் துரைதானும்
தமையன் பெண்சாதி தங்கை தமக்கை மற்றத்
தாதியர் ஊழியர் தங்களையும்
முப்பது பேரல்லோ கன்னிகளை ஒரு
முடிப்பாய் வெட்டினான் ஊமைத்துரை

### ஊமையன் வெட்டுக்குப் பயந்து, மனைவி சூலோடே அவள் ஒளியும் காட்சி

இப்படி வெட்டி வரும்போது மனத்
தெண்ணி யவன்தேவி யப்போது
நம்மையும் வெட்டுவா னென்றுசொல்லி நடு
நடுங்கிக் கன்னியுந் தானொளிந்தாள்

செம்மைய தாகவே கீழ்விழுந்து அவள்
செத்தப் பிணத்தை மேலேபோட்டு
நமக்கு விதிக ளெப்படியோ? வென்று
நடுநடுங்கிக் கொண்டே கிடந்தாள்
நாலு மாதத்துக் கெர்ப்பம் வயிற்றிலே அந்த
நாட்டுத் துரையுடப் பெண்சாதிக்கு

### தன் மனைவியை வெட்டுதற்கு ஊமைத்துரை தேடி அலைதல்

சூலோடே தேவி யொளித்தனளாம் ஊமைத்
துரையுந் தேடி அலைந்தனராம்
தேடி யூமைத்துரை அப்போது அந்தத்
திசைக ளெங்குமே காணமல்
மான பங்கம் வந்ததென்று ஊமைத்துரை
மதித்தல்லோ சும்மா தானிருந்தான்
சேவுக ரெல்லாம் பீரங்கிக் குண்டினல்
செத்துங் கெட்டுமாகத் தானிறந்தார்

### ஊமையன் படைகள் பீரங்கிப் புகைக்கு அஞ்சி ஓடுதல்

ஒண்ணும் ரெண்டும் மீதிருந்தப் பேரெல்லாம்
ஓடி ஒளிந்தல்லோ போனர்கள்
கிச்சுக் குடுக்கைப் புகையாலும் பீரங்கி
கிரு கிரென்று வருவதாலும்
அச்சமா யோடியே போனர்க ளங்கே
இருந்த சேவுக ரெல்லோரும்
முத்தன் பகடையும் பொட்டிப் பகடையும்
முன்னேறி யோடியே போய்விட்டான்

### அவலத்திலும் எஞ்சி நின்ற சிவத்தையா, ஊமைத்துரையைப் பார்த்துக் கூறல்

ஊமைத் துரை சிவத்தையா தவிர
உற்றதோர் சேவுக ரெல்லோரும்
மாயமா யோடியே பொனதைக் கண்டந்த
மன்னன் சிவத்தையா ஏதுரைப்பான்
நாடு மிழந்தோம் நகரிழந்தோம் நம்மள்
நல்லதோர் சேவுகர் தானிழந்தோம்
என்று விசாரங்க ளுண்டாகி அங்கே
யேங்கிச் சிவத்தையா சொல்லிடவே

நன்றென்று ஊமைத் துரைதானு மங்கே
நாலா ஆலோசனைத் தானினைந்து
கூடிப் புறப்பட்டு ஊமைத்துரை தானுங்
கோட்டை பிடிபட்டுப் போச்சுதென்று

## ஊமைத்துரையும் சிவத்தையாவும் நடுவிரவில் பாஞ்சைநகர் விட்டு, வெளியேறுதல்

பாதிப் பதிறு சாமத்திலே அந்தப்
பாஞ்சைப் பதிவிட்டு ஊமையன்தான்
காது கண்ணுமுதல் மேலெல்லாம் புண்படக்
காயத் துடனே சிவத்தையாவும்
உப்பாறு ஓடை வழிகடந்து தப்பி
ஒட்டப் பிடார மதுகடந்துக்
குப்பா குளக்கரை தான்கடந்து வலுக்(வை)
குண்டப் பெருமாள் குளத்தில்வந்து
காயங்கள் பார்த்து இளைப்பிடித்து வெகு
ஆயாச மாகப் படுத்திருந்து

## ஊமைத்துரை ஒரு மாத்தியன் வீட்டில் தங்குதல்

மாயங்க ளாக உபாயஞ்செய்து ஒரு
மாத்தியன் வீட்டி லிருவருந்தான்
நாங்க ளிருப்புத் தென்தேச மையா!
நன்னய மாகிய மாத்தியனே!
வடதேசம் போய்ப் பிழைப்போ மென்று
வந்த விடத்தில் வகைமோசமாய்
வைசூரி வந்து இருப்பதனு லிப்போ
வழி நடக்க முடியவில்லை
அப்போது மாத்தியன் மனதிரங்கி அவர்க்
காதரவாய்ச் சமாச் சாரஞ்சொல்லி
ஒழிந்த வீடொன்று பார்த்துக் கொடுத்து
உகந்திரு மென்று தானுரைத்தான்
அப்போ திவர்கள் நல்லதென்று
அவசர மாயந்த வீட்டில்வந்து
அம்மை புறப்பட் டிருக்குதென்று மனஞ்
சம்மதி யாகவே தானிருந்தான்
பம்மாத்துப் போட்டுக்கொண் டேயிருந்தான் வீரப்
பாண்டியன் ஊமைத் துரைதானும்
வேப்பங் குலைகளைத் தானொடித்து அந்த
வீட்டில் வைத்துவிளக் கேத்திவைத்து

காப்பாற்று வாள்சக்க தேவியென்று அவன்
காயங்க ளாத்திக் கவலையுடன்

## மீண்டும் ஊமைத்துரை மருதூர்க்குச்சென்று மருதுப் பாண்டியர்களைக் கண்டு தன் அவல நிலைமையைக் கூறுதல்

இரண்டுநா ளிப்படித் தானிருந்து மறுதூர்க்
கேகவேணு மென்று தானினைத்து
இருவரும் யோசனை செய்துகொண்டு அங்கே
யேகினர் மருதூர் வழிபார்த்து
இராத்திரி காலத்தில் புறப்பட்டு நல்ல
மருதூர் சென்று மனமகிழ்ந்து
நாத்திசையும் புகழ் ஊமைத் துரையும்
நன்னைய மாகிய சிவத்தையாவும்
மருதூர்ப் பாண்டியர் தன்னைக்கண்டு இவர்கள்
வந்த விவரத்தைக் கூறினராம்
ஆதியோ டந்தமாய்ச் சண்டை நடந்தது மிவர்க
ளவதிப் பட்டங்கே வந்ததுவும்

## ஊமைத்துரைக்கு, மருதூர்ப் பாண்டியன் வருகைதந்து, அபயங்கொடுத்தல்

நேயமாய்ச் சொல்லி யுரைத்தார்க ளப்போது
நீதியாய் மருதூர்ப் பாண்டியனும்
ஒன்றுக்கு மஞ்சாமல் நீங்க ளிருவரும்
உண்மையா யிவ்விடந் தானிருங்கள்
கும்பினி யானிங்கே வந்தாக்கா லிப்போக்
கூடி யொருகை தான்பார்ப்போம்

## ஊமைத்துரைக்கு, மருதுப்பாண்டியர் விருந்து அளித்துச் சிறப்பித்தல்

சந்தோஷ மாக அவர்களுக்கு அங்கே
சட்ரச வர்க்கம் பாலுடனே
உண்பதுக் கேற்ற முயல்கறியுங் கது
வாலி யுடும்பு பொறிக்கறியும்
சீனிச் சம்பாநெல் வமுதுகளு மிவர்
சித்தத்துக் குச்சரி யானபடி
பாங்குடனே அன்னந் தான்பொசித்து அங்கே
விஸ்தார மாய்ச்சபை செய்திருந்தார்

கும்பினிச் செய்தியைச் சொல்லுகிறேன் கதை
அன்பாகக் கேளடி மீனுட்சி !

## ஊமையன் இல்லாதப் பாஞ்சாலங்குறிச்சியின் நிலை

கெம்பீர மாகவே பட்டாளம் வெகு
சம்பிரதாயப் பாஞ்சைக் கோட்டையின்மேல்
சச்சர வாகவே கிச்சுக் குடுக்கைகள்
மிச்சமாகப் புகைக் குண்டுகளும்
உச்சித மாகவே தான்போட்டு அங்கே
ஊமையன் கோட்டையுந் தானிடித்து
அக்கினி மேஜரும் பாஞ்சை நகரத்து
முக்கு முடுக்கெல்லாந் தான்பார்த்து
திக்குத் திசையெங்குந் தான்பார்த்து ஒரு
செய்தி ஆலோசனை யேதுசொல்வான்

## ஊமையனைத் தேடிப் பிணங்களைப் புரட்டுதல்

ஊமையனைக் காணும் பாகியென்ருன் பாகி !
உள்ளரை வீடெங்குந் தேடுமென்ருன்
சீமையிலே சுத்திப் பாருமென் ருங்கே
செத்தபேரைக் குத்திச் சோதியென்ருன்
அப்போது சிப்பாகி செத்துக் கிடக்கின்ற
ஆளைப் பிரட்டியே தான்பார்த்தான்

## பிணக்குவியலின் இடையிலே விற்பனக் கன்னி !

இப்படிச் சோதிக்கும் வேளையிலே ஒரு
விற்பனக் கன்னி யெழும்பினளாம் !

## அக்கினித் துரையின் வினு ?

அப்போது அக்கினி மேஜர் துரை நீயார் ?
என்று கன்னியைக் கேட்டனராம்

## வினுவுக்கு விற்பனக்கன்னி, தான் ஊமையன் தேவி என்றும், அடைக்கலமென்றும் கூறுதல்

அந்நேரங் கன்னியு மேதுசொல்வாள் துரை
மன்னவன் ஊமையன் தேவியென்ருள்
எந்நாளு முங்க ளடைக்கலந் தானென்று
கன்னி யுரைத்திடும் வேளையிலே

## ஊமையன் தேவிக்கு, அக்கினீசுத் துரையின் ஆதரவு மொழி!

பெண்ணரசே! உன்னைக் காப்போமென்று துரை
சொன்னானே கும்பினி அக்கினிசு!

## ஊமையன் தேவியிடத்தில் மறுவினா?

ஒண்ணுக்கு மஞ்சாதே! உடன்பிறப் பென்றானுன்
ஊமைத் துரையெங்கே சொல்லுமென்றான்

## ஊமையன் தேவியின் விடை!

சொல்லுமென்று துரை தான்கேழ்க்க நிசஞ்
சொன்னாளே கன்னியுங் காணேனென்று

## அக்கினீசுத் துரையின் மங்களாலோசனை!

வல்லமை யான மொழிகேட்டுத் துரை
மங்களாலோசனை யென்னவென்றான்

## ஊமைத்துரையைப் பிடித்துக் கொடுப்பவர்கட்கு இனும் ஐந்நூறு ரூபாய்

ஊமைத் துரையைப் பிடிப்பவர்க்கு ஒரு
முடிப்பாய் அஞ்னூறு ரூபாய்தான்
தப்பிதஞ் செய்யாமல் தாரோமென்று அந்தச்
சீமைக்குஞ் சொல்லிச் சாட்டினார்கள்

## அக்கினீசுக் கூடாரத்தினுள், ஊமையன் தேவி தங்கியிருத்தல்

கற்புள்ள ஊயைன் தேவிக்கு அங்கே
முப்பாலுந் தீனியுந் தான்கொடுத்து
ஆதர வாகக் கூடா ரத்துக்குள்
அன்பாகப் போய் இருக்கச்சொல்லி
அப்போது ஊமையன் தேவியரு மங்கே
அக்கினிசுக் கூடாரந் தான்சேர்ந்தாள்
இப்படி யாகவே அக்கினி மேஜரும்
துப்பு விசாரித்துக் கொண்டிருக்க

## இடநாட்டிலுள்ளவர் அக்கினீசுக்கு, ஊமையன் மருதூரில் இருப்பதாகக் கடிதம் எழுதுதல்

அக்கினி மேஜர் விளம்பரஞ் செய்தது
அந்தரங்கச் செய்தி தானறிந்து
செப்ப முடனந்த மருதூர்ப் பாண்டியன்
சீமையில் ஊமைய னிருப்பதையும்

இட நாட்டி லுள்ளவர் தானறிந்து அங்கே
எழுதினர் அக்கினி மேஜருக்கு

### அக்கினீசுத்துரை கடிதமூலம் துப்பு அறிதல்

கமிட்டிக் காயிதம் வந்ததுவே அந்தக்
கக்கிஷன் ஊமைத் துரைதனக்கு

### அக்கினீசுத்துரை மருதூரில் வந்து கூடாரம் அடித்தல்

அறிந்து அக்கினி மேஜர் துரையங்கே
விரைந்து பட்டாளந் துருசென்று
பட்டா ளத்தை யெழுப்பிக்கொண்டு அந்தப்
பார்த்தீபன் மருதூர் சென்றனராம்
மருதூர்ப் பாண்டியர் கிட்டவந்து அங்கே
வந்து கூடாரம் அடித்தார்கள்

### அக்கினீசுத்துரை மருதூரில் வந்துள்ளதை அறிந்த, ஊமைத்துரையின் ஆலோசனையும் கேள்வியும் ?

அக்கினி மேஜர் கூடாரம் அடித்தார்கள்
அதிசெயம் ஊமைத் துறையறிந்து
இங்குஞ் சனியன் வந்தானோ ? வென்று
எண்ணியே ஊமைத் துரைதானும்
மருதூர்ப் பாண்டியன் கிட்டவந்து அந்த
மன்னன் ஊமைத்துரை யென்னசொல்வான்
வல்லமை யான அக்கினி மேஜரும்
வந்தான் படைகள் தன்னுடனே
கடல்வெள்ளம் போலே தோணுதென்ரு னங்கே
கண்கொள்ளாச் சேனை வருகுதென்ருன்
இனிமேல் யோசனை யென்னவென்ரு னங்கே
இங்கிதவான் ஊமைத் துரைதானும்

### மருதுப் பாண்டியர், அபயமடைந்தவனுக் காகப் பரிந்து போரிடுவேன் எனல்

அப்போது மருதூர்ப் பாண்டியரு மங்கே
அதிகக் கோபங்கொண் டேதுசொல்வார்
நற்புள்ள ஊமைத் துரையே ! நீர்
நம்மிட அடைக்கல மாயிருக்க
நடுப் படையி லும்மைத் தள்ளிவிட்டால்
நான்தானும் வீரப் பாண்டியனோ ?

ஆனாலும் ஆகுது போனாலும் போகுது
அடிக்கிறேன் பாரொரு தம்மாசு
வெத்திப்போர் விட்டு வெகுநா ளாச்சுது
கத்திப்போர் வேடிக்கை பார்ப்போமென்றார்
முன்னாலே பஞ்சப் பாண்டவரி லங்கே
மூர்க்கவான் அர்ச்சுன ராசனுந்தான்
சொன்னசொல் போலே குருக்கேத் திரனைச்
சுகமாகக் காத்துவிட் டானல்லவோ?
சிபிச்சக்கர வர்த்தி புருவுக்காக அவர்
சரீரத்தை யறுத்துக் கொடுக்கவில்லையோ?
அதுபோல நானு மென்னுடைய
ஆவியுள்ள மட்டும் மன்னவனே !
சதிராய்க் காப்ப னென்றுசொல்லி யப்போத்
தானுரைத்தான் மருதூர்ப் பாண்டியனும்

## ஊமைத்துரையுடன் மருதூர்ப் பாண்டியரும் சிவஞானமும் சேர்ந்து போர்செய்ய ஏகுதல்

சேவுகர் சேரத் தயாரென் றானதி
சீக்கிரம் வேட்டைக் கெழும்புமென்றான்
துரைமகன் சிவஞானமுந் தானங்கே
துடிதுடித்து வெளி யேறினராம்

## கும்பினிப் பட்டாளத்தை, மருதூர்ப் பாண்டியர் எதிர்த்துப் போரிடல்.

அங்கே மருதூர்ப் பாண்டியனு மங்கே
முன்னோடிச் சண்டைக் கெழும்பினராம்
சின்ன மருதுடனே சேர்ந்தச் சிவ
ஞானந் துரையுஞ் சிவத்தையாவும்
வட்டப் பொட்டுக்கார மருதூர்ப் பாண்டியன்
வளரிக் கம்பு பிடித்தவன்
பட்டா ளத்தில் விழுந்து குத்திச்சண்டை
யிட்டானே துரை யப்போது

## கும்பினியாரை ஒருபக்கத்திலிருந்து, ஊமைத் துரை கடுமையாக எதிர்த்துப் போரிடல்

ஊமைத் துரையொரு கையாகப் படை
யூடே விழுந்தானே மெய்யாக
மடமடென் றல்லோ சிப்பாகி மார்களை
மலத்திப் போட்டல்லோ குத்துகிறான்
திடுதிடென் றல்லோ உருட்டுகிறான் ஈர்க்
குலையிலே குத்திச் சாய்க்கிறான்

## மருதுப்பாண்டியர் ஊமையனினும் இரண்டு பங்காகக் கடும்போர் புரிதல்.

ஊமைத் துரையுட தீர்க்கத்தைச் சொல்ல
ஒருவ ராலு முடியாது
இப்படி ஊமைத்துரை சண்டை செய்கையில்
என்னசெய்வான் மருதூர்ப் பாண்டியனும்
ஊமைத் துரையிலு மிரண்டு பங்காக
ஓடிக் குத்திஞன் பாருங்கடி !
வச்சடி வாங்காமல் குத்துகிருன் தம்பி
மிச்சமாய் வேட்டைக ளாடுகிருன்
வளரிக் கம்புக்கொண் டடிக்கிருன் வன்
மணிக் குடலையு மிழுக்கிருன்
ஏதே! யிவன்செய்யுஞ் சண்டைகளைச் சற்றே
எப்படிச் சொல்லுவேன் தோழியரே !
குறை உயிராய்க் கிடக்குந் துரைகளைக்
குத்தியே மலத்தி யிழுக்கிருன்
பரியைக் குத்தி யிழுக்கிருன் தம்பூருக்
காரனையும் பூசை கொடுத்திட்டான்
இப்படிச் சண்டை நடப்பதையு மங்கே
யிறந்துப் பட்டாளம் போவதையும்

## கும்பினிப் பட்டாளம் இறப்பதைக் கண்டு அக்கினீசுத்துரை கடிந்து போர் செய்யக் குதிரைமீது செல்லல்

கண்டந்த அக்கினி மேஜருந் தானங்கே
கடுங்கோபங் கொண்டு தானெழும்பி
இப்படி மோசங்கள் செய்தானே யென்று
யேறிக் குதிரைமே லப்போது
கையிலே ஆயுதந் தானெடுத்து அங்கே
கடிந்து வந்தானே அக்கினீசு

## சிவஞானமும் எதிர்த்துப் போரிடக் குதிரை மீது செல்லல்

இப்படித் துரை வரும்போது அங்கே
செற்றமுள்ள சிவ ஞானமுந்தான்
தானுங் குதிரைமே லேறிக்கொண்டு அங்கே
தாண்டியே வந்தானே பட்டாளத்தில்

## சிவஞானமும் அக்கினிசுத் துரையும் ஒருவரோ டொருவர் எதிர்த்துப் போர் செய்தல்

சிவஞானமும் அக்கினி மேஜரும்
சீறிச் சினந்து எதிர்த்தார்கள்
இருவ ருடைய குதிரைகளு மங்கே
இடசாரி வலசாரி சுத்திவர
ஒருவருக் கொருவர் தோர்வை யில்லாமல்
உன்னியே வாள்வீச்சாய் வீசினர்கள்
இருவ ருடைய முனைவாள்க ளங்கே
யேகமாய் மேலெல்லாம் பட்டதுவாம்
ரத்தச் சோறிக ளுண்டாகும்படி அங்கே
நாட்டினர் சண்டைகள் மூட்டினர்கள்
இப்படிச் சண்டை நடக்கையிலே கதை
விற்பனரே! சொல்லக் கேளுங்கண்ணே!

## சிவத்தையா, பட்டாளம் இடையில் புகுந்து போரிடும் காட்சி

சிவத்தையா ஒரு கையாகத் திட
ரென்று படை யூடேகி
கொக்குத் திரளிலே ராசாளிப் பாய்ந்தாப்போல்
குத்தி யிழுத்து மலத்துகிருன்
கும்பினிச் சோல்சர் துரைகளுமே அங்கே
கும்பு கும்பாய் வெட்டிச் சுட்டார்கள்
மருதூர்ப் பாண்டியர் சேவுகர்களு மங்கே
மார்க்கமாய்க் குண்டுகள் விட்டார்கள்
கும்பினிச் சோல்சர் குண்டுகள் தானங்கே
குறிப்பாய் வந்தல்லோ தைத்திடுமாம்
மருதூர்ப் பாண்டியர் சேவுகர்கள் குண்டுகள்
மடமடென்று போய்த் தைத்திடுமாம்

## இருவர் படையிலும் பிணமலையாகக் காட்சி யளித்தல்

இருவர் படையிலும் பிணமலை யாக
இறந்துக் குமியுது காலாள்கள்
அப்போது அக்கினி மேஜருக்கு அங்கே
அதிக ஆங்காரங்கள் தானெழும்பி

### அக்கினிமேஜரும், கும்பினிப்பட்டாளமும் சேர்ந்து, மருதுப்பாண்டியர்களை கைது செய்தல்

இப்படி மோசங்கள் வந்ததென்று அவர்
எண்ணித் தைரியந் தாளுகி
துரைமகன் சிவ ஞானத்தையு மங்கே
துரத்தி முடுக்கித் தானடித்து
வீரிய மாகிய அக்கினி மேஜர்தான்
விருவிரென்று படை தாண்டி
மருதூர்ப் பாண்டியர் தன்னையுந் தான்சுத்தி
வளைந்து கொண்டதே பட்டாளம்
சிறிது பட்டாளந் திரண்டு அங்கே
மருதூர்ப் பாண்டியனைத் தான்பிடித்து
துரைமகன் சிவ ஞானத்தையு மங்கே
தொடர்ந்ததே பட்டாளந் திடீரென்று
சுத்தி வளைந்தது பட்டாள மங்கே
துரைமகனையுந் தான் பிடித்தார்

### மருதுப் பாண்டியர்களின் நிலையை ஊமைத் துரையும் சிவத்தையாவும் அறிந்து, நகரை விட்டு மலைக்காட்டில் ஒளியச் செல்லல்

படைமுறிந் தங்கே போனபின்பு வீரப்
பாண்டியன் ஊமைத் துரைதானும்
இனிமேல் நிற்கவுங் கூடாது நமக்
கிடைஞ்சல் வந்திடு மென்றுசொல்லி
சிவத்தையா வுடன்தான் பேசி அங்கே
சீருடனே வெளி யேறிவிட்டார்
நமக் குதவிக ளாக வந்த
நல்லதோர் புண்ணிய வான்களையும்
கமுக்கமாகப் பிடித்துக்கொண் டானந்தக்
கபடக் காரக் கும்பினியான்
இனிமேல் நமக்குதவி யில்லை யென்று
ஏங்கி யிருவருந் தானடந்தார்
கடும் பயணங்க ளாகவே தான்மலைக்
காட்டிலே போளு ரிருவருந்தான்

### கும்பினியார் மருதுப் பாண்டியர்களை, சித்திர வதைசெய்து, வாக்குமூலம் வாங்கித், தூக்கிலிடல்

இவர்க ளிப்படித் தான்போக இங்கே
யெம்பிட்ட மருதூர்ப் பாண்டியரை

சுத்தி வளைந்தல்லோ சிப்பாகி மார்கள்
துடிக்கத் துடிக்க அடித்திடுவார்
துரைமகன் சிவ ஞானத்தையு மங்கே
துயரப் படுத்தின ரப்போது
இரண்டு பேரையுந் தூக்கவென்று மன
தெண்ணியே அக்கினி மேஜர் துரை
தூக்கு மரங்களுந் தானட்டி அதில்
தூண்டிக் கயர்களுந் தான்போட்டு
வாக்கு மூலங்களுந் தான்கேட்டு அங்கே
மார்க்கமாய்த் தூக்கின ரப்போது
அன்பான மருதூர்ப் பாண்டியர் தன்னுயிர்
ஆதி சிவலோகஞ் சேர்ந்ததுவே !

## கும்பினியார் மருதுக்கோட்டையை இடித்தலும், உள்விசாரமாக விருத்தலும்

மருதூர்ப் பாண்டியர் கோட்டைகளை யங்கே
யிடித்து மட்டமாய்த் தான்பரப்பி
ஊமைத் துரைதன்னைக் காணோமென்று அங்கே
உள் விசாரமாகத் தானிருந்தார்
இவடத்தி லிப்படித் தானிருக்க அங்கே
ஏகிய ஊமைத் துரைக்கதையை
விற்பன மாக யெடுத்துரைப்பேனதை
மெல்லியரே! சொல்லக் கேளுங்கடி !

## ஊமைத்துரையும் சிவத்தையாவும் வழி தப்புதல்

மலைக்காட்டி லிருவரும் போகையிலே வழி
மார்க்கங்கள் தப்பிச் சிவத்தையாவும்
முன்னும் பின்னுமாய்ப் போகையிலே வழி
மோசம் போறதை யென்னசொல்வேன் !

## வழிதப்பி, சிவத்தையா விருப்பாக்ஷி மலையை அடைதல்

விருப்பாச்சி மலைப்போய்ச் சேர்ந்தா னங்கே
வீரன் சிவத்தையா அப்போது

## சிவத்தையாவை தப்பவிட்ட ஊமைத்துரை, தன்னை தானே மனது நொந்துகொண்டு, கன்னிவாடிச் சீமை செல்லல்

சிவத்தை யாவையுந் தப்பவிட்டு மனத்
தீர்க்கமுடன் வீரப் பாண்டியனும்
இனிமேல் நமக்குதவி யொருத்தரு
மில்லையென்று மனந் தானேங்கி

கன்னி சக்கதேவி பாதத்தைப் போற்றியே
கர்த்தன் ஊமைத்துரை தான்தியங்கி
திக்கற்றப் பாவிபோ லானேனே அய்யோ
தெய்வமே யென்று மிகப்புலம்பி
முக்காலுந் தெய்வ மெனக்கில்லையோ ! யெங்கள்
மூதாக்கள் செய்தத் தவமில்லையோ !
மருப்படா மேனி யெங்குந் தளம்பவே
நெருப்புப்போல் மனங் குழருதே !
அன்ன மாகாரமு மில்லாமல் தம்பி
அஞ்சாறுநாள் தண்ணீ ரில்லாமல்
தாமரை யிலைபோல் தான்வாடி யங்கே
கட்டழித்து ஊமைத் துரைதானும்
கன்னிவாடிச் சீமை போய்ச்சேர்ந்து அங்கே
கவலை கொண்டுமே ஊமைத்துரை
உடுத்திய ஆடைகள் தான்தவிர மற்ற
தொன்று மில்லாமல் மனமுழன்று
சாப்பாடு செய்ய வகையில்லாமல் மனந்
தளர்ந்து யென்செய்வோ மென்றுசொல்லி

ஊமைத்துரை, கன்னிவாடிச் சீமையில், ஒரு கன்னி வீட்டில் ஆயுதங்களை யடகுவைத்து உணவு உண்ணுதல்

கன்னிவாடிச் சீமை தன்னிலே தானொரு
கன்னி யிடத்திலே போய்ச்சேர்ந்து
கையி லிருந்திடும் ஆயுதத்தை அந்தக்
கன்னி யிடத்தில் அடவுவைத்து
சாதங்கள் தானுமே வேணுமென்று கைச்
சன்னைகள் போட்டு மொழியலுற்றான்
அப்போது அந்தக் கன்னியரு மங்கே
அறிந்தாள் சாடைகள் தன்னையுந்தான்
விற்பனக் கன்னி சாடையறிந் தங்கே
விருந்து சமைத்தாள் நொடிக்குள்ளே
அப்போது ஊமைத் துரைதனக்கு அங்கே
அதிகப் பசித்தாக மாகையினால்
நெய்யுடன் பாலமு துண்டாரா மங்கே
நீட்டி நிமிர்ந்து படுத்தனராம்

ஊமைத்துரை உண்ட மயக்கத்தினாலும், நீண்டநாள் உறக்கமில்லாக் காரணத்தாலும், அயர்ந்து நித்திரை செய்தல்

அஞ்சாறு நாளன்ன மில்லாமல் தம்பி
ஆன உறக்கமு மில்லாமல்

மங்கையுட வீட்டில் ஊமையன் தான்மதி
மயங்கி நித்திரை செய்திடவே
சிங்கம்போல் அவன் தானுறங்க அந்தச்
சேயிழை யாளும் மனம்பதறி

கன்னி, ஊமைத்துரை என்றறிந்து, தன் ஊரின் அம்பலக் காரரிடத்தில் கூறிப் பரிசு வேண்டுதல்.

ஊமைத் துரையென்று தானறிந்து மெள்ள
உள்தாப் பாள்போட்டுக் கதவடைத்து
தாமதஞ் செய்யாமல் அம்பலத் தேவந்து
சாடைசொன் னளந்த மங்கையரும்
அஞ்னூறு ரூபாயுந் தாருமென்ரு ளினி
வாய்பேசா மன்னனே பிடியுங்களென்ருள்
நாயகனே! முன்சீபு! அம்பலக் காரரே!
நான்சொல்லும் விண்ணப்பங் கேளுமென்ருள்
மெட்டுப் போலீசு அதிகாரிகளே !
மேன்மை பொருந்துந் தலையாரி!
பட்டணத்துக் குடிகளே! டப்பைக் கெட்டிக்
காரர் வந்து பிடியுங்களென்ருள்

ஊமைத்துரையை, கன்னிவாடிச்சீமை முனிசிப், போலீசு, அம்பலக்காரர் முதலியோர் ஆட்களைக் கூட்டிக்கொண்டு, பிடிக்கச் செல்லுதல்.

அப்போது அவ்வூரில் போலீசு முனிசீபு
அதிகாரி களுந் தான்கேட்டு
டாக்குப் போலீசு துருசடா! தம்பி
டப்பைக் கொடிகளுந் திரசடா;
பாணுத் தடிகள் தானெடுத்தார் சிலர்
வளரிக் கம்புகள் கைப்பிடித்து

அம்பலக்காரர் போலீசு முதலியோர், ஊமையன் தூங்குவதைப் பார்த்து அருகில் செல்ல அஞ்சுதல்.

வீட்டையுஞ் சுத்தி வளைந்தார்க ளந்தக்
கத விடுக்கலை நீக்குவராம்
ஓட்டைவழி யெட்டிப் பார்ப்பாராம் நீதான்
முன்னே போவென்று மொழிவாராம்

ஊமையன் கெலி யடிக்குதென்று வீட்டுக்
குள்ளேதான் போகப் பயப்படுவார்
வீமனைப் போலே உறங்குகிறு னவன்
சாமர்த்தியஞ் சொல்லக் கூடாது
என்று அவர்கள் தான்பேசி அங்கே
ஏகியே உள்ளுக்குத் தானுழைந்து

பத்துப்பேராக, ஒருங்கு சேர்ந்து ஊமையன் மீது விழுந்து பிடித்தல்

பத்துப் பதினைந்து பேர்களு ஊமையன்
நித்திரை வேளையில் மேல்விழுந்து
பொத்திப் பிடிக்கவே ஊமைத்துரைப் புலி
போலே அதட்டி யெழும்பினராம்

ஊமைத்துரை, நித்திரை கலைந்து, மேல் விழுந்தோரில், மூன்று பேரை குத்திக் கொன்ருன்.

எழும்பி ஊமைத் துரைதானுங் கையா
லிடித்துக் குத்திறு னப்போது
ஊமைத் துரையுட குத்தாலே உயிர்
விட்டார்கள் மூன்றுபேர்க ளப்போது

ஊமைத்துரையை, எல்லோருங் கூடிப்பிடித்து விலங்கிட்டு, அக்கினி மேஜருக்குக் கடிதம் எழுதுதல்

மற்றபேர்கள் ஒருமிக்கவே தான்கூடி
மன்னனைக் கெட்டியாய்த் தான்பிடித்து
சுத்தவீர னந்த ஊமைத் துரைதன்னை
பத்திர மாகவே தான்பிடித்து
அத்தரிப் பானிச்சோ மாதரிச்சோ வென்று
பத்திர மாக விலங்கடித்து
மருதூரி லிருக்கும் அக்கினி மேஜர்க்கு
மார்க்கமாய்க் காயிதம் போட்டனராம்

அக்கினிமேஜர், பட்டாளத்துடன், கன்னிவாடிச் சீமைக்கு வந்து, ஊமைத்துரையை கைது செய்து புத்திமதிகள் கூறுதல்

காயிதம் பாத்தல்லோ அக்கினி மேஜரும்
கடுகப் பயணம் புறப்படென்று
பட்டா ளத்தை யெழுப்பிக்கொண்டு அங்கே
வந்தானே அக்கினி மேஜருந்தான்

கன்னிவாடிச் சீமை வந்தனரா மங்கே
கர்த்தன் ஊமைத்துரையைக் கண்டனராம்
கக்கிஷக் காரனும் ஊமைத் துரைதன்னை
அக்கினி மேஜரும் ஒப்புக்கொண்டு
சிந்தை மகிழவே ஊமைத் துரைக்கு
சிறந்தப் புத்திகள் தானுரைக்க
அன்பான வார்த்தைகள் தானுரைத்து
அக்கினி மேஜரும் ஏதுசொல்வான்

## அக்கினீசு, ஊமைத்துரையிடத்தில், சிவத்தையாவைப்பற்றிக் கேட்டாலும், பொருமலும் விம்மலும் கொண்டு பதில் பெறுதலும்

தெம்பான ஊமைத் துரையே! உன்னுட
சிவத்தையா வெங்கே சொல்லுமென்றான்
அப்போது ஊமைத் துரைதானு மங்கே
அதிக விம்மல் பொருமலுடன்
சிந்தை கலங்கி செகவீரப் பாண்டியன்
தியங்கி மயங்கி யேதுசொல்வான்
வலை(யி) லம்பிட்ட மான்போலே அங்கே
மயங்கி ஊமைத்துரை தானும்
விருப்பாச்சி மலைக் காட்டிலே யெங்கள்
வீரிய மான சிவத்தையாதான்
நாங்க ளிருபேரும் வரும்போது நடுக்
காட்டிலே தப்பியே போய்விட்டான்
இப்படி ஊமைத் துரையுரைக்க அங்கே
யென்னசெய்தான் கும்பினி அக்கினீசு
பட்டா ளத்தைத் திரட்டிவிட்டு அந்தப்
பார்த்திபனைப் பிடி யென்றுரைத்தான்

## அக்கினீசு, சிவத்தையாவைப் பிடித்து விலங்கிடுதல்

அப்போது கும்பினிப் பட்டாள மங்கே
ஆரணியக் காட்டிலே தான்தேடி
செடிகாடு மலைக் காட்டிலே அங்கே
சிவத்தையா வையுந் தான்பிடித்து
கடின மாகவே கம்பளத் தானுட
காலிலே கிட்டி விலங்கடித்து
கன்னிவாடிச் சீமை கொண்டுவந்து அவர்
காயிதம் போடவே வேணுமென்று

## அக்கினீசு, சென்னை-கவர்னர் ஜெனரலுக்குக் கடிதம் எழுதுதல்

திக்கிலுள் ளோர்புகழ் சென்றல் கெவுனர்க்குச்
சீக்கிரங் காயிதம் போட்டனராம்
காயிதம் பார்த்து கெவுனர் மெண்டர்களும்
ஞாயமா யாலோசனை செய்துசொல்வார்

## அக்கினீசுக்கு சென்னை-கவர்னர் ஜெனரலின் உத்தரவு

ஆயிரம் பேர்க ளிறந்தாலு மந்த
வாய்பேசா மன்னனைக் கொல்லவேண்டாம்
தூக்கு மரத்திலே போடாம லதி
சீக்கிரம் கூட்டி வரவேணும்
பார்க்க வேணுமந்த ஊமையனை யென்று
மார்க்கமாய்க் காயிதம் போட்டனராம்
சட்டமாய்க் காயிதம் வந்திடவே அதை
யெட்டையா புரந்துரை பார்த்திடவே

## அக்கினீசுக்கு எட்டையாபுரந் துரையின் துர்ப்போதனைகள்

மட்டுக் கடங்காத ஊமையனை யினி
விட்டாலும் மோசங்கள் வருமென்று
அக்கினி மேஜர்க்குப் போதனைகள் சொல்ல
ஆங்காணு மிது நிசமென்று

## பாஞ்சாலங்குறிச்சியில் ஊமைத்துரையையும் சிவத்தையாவையும் தூக்குப் போடுதல்

மிக்கவே யிருபேருந் தான்பேசி அதி
வேகமாய் ஊமைத் துரைதனையும்
பார்க்கப் பயமாக யிருக்குதென்று அந்தப்
பாஞ்சை நகரத்து எல்லையிலே
தூக்கு மரத்திலே தான்போட்டு இனிக்
கூக்குரல் சத்தம் ஒழிந்ததென்று
சிவத்தை யாவையுந் தூக்கினுரா மதில்
சேர்ந்தபே ருயிரையும் போக்கினுராம்
அப்போ திவர்க ளுயிர்தானு மங்கே
ஆதி சிவலோகஞ் சேர்ந்ததுவே

## சென்னைக்கு, கும்பினிப் பட்டாளத்துடன் அக்கினீசுத்துரை செல்லுதல்

அழுத்த மாகவே கவுத்துவஞ் செய்து
அக்கினீசுத் துரை யேதுசொல்வான்
பாஞ்சால நாட்டு ஊமைத் துரையாலே நாம்
பட்டப் பாடுகள் போதுமென்று
அஞ்சாது தெய்வம் அறியுமென்று அங்கே
சாஞ்சலோ போகுது பட்டாளம்
எட்டையா புரந்துரை நில்லுமென்று சென்னைப்
பட்டணஞ் சேர்ந்தானே அக்கினீசு

## அக்கினீசுத்துரை, சென்னைக் கவர்னர் ஜெனரலைக் கண்டு, ஊமைத்துரையைத் தூக்கிலிட்டதின் விபரம் கூறுதல்

அட்டாளத் தேசமுந் தானுளும் வலுத்
துஷ்டனும் ஊமையனைத் தான்பிடித்து
உத்தரவைத் தப்பி நாமளுந் தானந்த
ஊமையனைத் தூக்கிலே போட்டமென்று
சத்திராதி மித்திரம் போச்சுதென்று பாஞ்சைத்
தலமுங் கைவச மாச்சுதென்று
கெம்பீர மாகவே அக்கினீசுத் துரை
கெவுனர் சமுகத்தின் முன்பாக
போய்நின்று மெள்ள சலாம்போட்டு வெகு
விழிப்பா யென்ன சேதிசொல்வான்
உத்தரவு வரத் தாமத மாகையால்
உகந்து ஊமைத் துரைதனையும்
தூக்கு மரத்திலே போட்டேனென்று அங்கே
சொன்னுனே அக்கினி மேஜருந்தான்
சம்பிரதாய முள்ள அக்கினி மேஜர்மொழி
அன்பாகச் சென்ரல் துரைகேட்டு

## கவர்னர் ஜெனரலின் கேள்வி!

நல்லது தானந்த ஊமைத்துரை தன்னைக்
கொல்ல வேண்டாமென்று சொன்னேமே
சொல்லுறுதி தப்பிச் செய்தாயே நீ
பொல்லாத அக்கினி மேஜர் நீ ரென்றான்

## அக்கினிசுத் துரைமீது கவர்னர் ஜெனரல் கோபித்துக்கொண்டார்

தப்பு முகாந்திரஞ் செய்தாயே நீ
சாதித் துரைமக னில்லையென்ருன்
வீருன சிங்கப் புலிக்குட்டியை வைத்து
வேடிக்கை பார்க்கவும் வேணுமென்று
மார்க்காய்த் கூட்டி வரும்படியாய்ச் சொல்ல
மாயமாய்த் தூக்கிலே போட்டாயே
என்று கிலேசங்க ளுண்டாகி அங்கே
யிருந்தார் கெவுனர் துரைகளுந்தான்

## ஊமையன் தேவி குழந்தை பெறுதல்

தீர்க்கமாய் ஊமைத் துரையுடத் தேவியை
மார்க்கமாய் வைத்து வளர்த்தார்கள்
மார்க்கமுள்ள கன்னி கெர்ப்பமுஞ் சங்கை ஆறு
மாதமுந் திங்களு முண்டாகி
தீர்க்கமுடன் பத்து மாதஞ் சென்றபின்
செல்லக் குழந்தையைப் பெற்றனளாம்
விக்கிரகம் போலே ஆண்பிள்ளை தானும்
விற்பனக் கன்னியும் பெற்றனளாம்
பெற்று வளர்த்துப் பிரபல மாகவே
பேரிட்டுக் கும்பினி யார்களுடன்
சட்டத் திட்டப்படி தானடந்து வெகு
சம்பிர மாக யிருந்தனளாம்
அப்போது நண்புள்ள குழந்தைக்கு ஆறு
மாதமுந் திங்களுந் தாகுகி

## ஊமையன் குழந்தையாம் வேல்முருகு பருவ மடைந்து, பள்ளிக்கு ஏகுதல்

செல்வக் குழந்தைக்கு வயது அஞ்சாகிச்
சிறப்புடன் பள்ளிக்குத் தானும்வைத்து
நாலு வேதங்களுந் தான்படித்து அங்கே
நாகரீக மாக வாழ்ந்திருந்தார்
கும்பினி யார்களும் பெற்ற பிள்ளையைப்போல்
கூட்டி யுறவாகத் தான்வளர்த்தார்

## வேல்முருகு, ஆயுதங்களிடத்து பிரியம் செல்லுதலும், கும்பினியாரின் ஆலோசனையும்

ஆயுதத்தின்மேல் பிரியமதா யிந்த
அறியாக் குழந்தை யிருப்பதனால்
கும்பினி யார்களும் எப்படியோ வென்று
கூடி ஆலோசனை செய்திருந்தார்
சந்தன மாமலை வேல்முரு கேசனும்
சக்தி சக்கதேவி தாள்துணையே!

## கவி, இறுதியில் கடவுளரை வாழ்த்துகிறார்

மந்திர மூலப் பொருளா யுதித்திடும்
வாலை விநாயகன் தாள்துணையே!
சிந்தை தனில்குடி கொண்ட சரசுபதி
தேவகி யாளுட தாள்துணையே!
பாடும் புலவர்கள் கொண்டாடும் பத்திரக்
காளியுட பாதம் நான்மறவேன்!
நாடும் நகரும் மதித்தோங்கும் எந்தன்
நாராயணர் பாதம் நான்மறவேன்!

## நூல் இனிதுபாடி முடிந்தமை வாழ்த்து

அந்தரத் தேவர் முனிவர்களும் வாழி!
அட்ட வசுக்களுந் தான்வாழி!
சந்திர சூரியரும் வாழி! புவி
தன்னி லுள்ளோர்களும் தான்வாழி!
அன்பான மங்கையர் தான்வாழி! யவர்
குலகோத் திரங்களுந் தான்வாழி!
அன்பான மீனாட்சி தான்வாழி! அவள்
அகமுடை யானுந் தான்வாழி!
மானிலத்தி லிக்கதை பாடிப் படித்ததோர்
மலையர சென்னுந் தான்வாழி!
பாடிப் படிப்பவரும் வாழி! இந்தப்
பாரில் பெரியோரும் தான்வாழி!
நீடிய செந்தமிழ்ச் சொல்ல வெழுதுவோர்
நீடூழி காலமும் வாழ்த்தியதே!

கட்ட பொம்மன் வரலாறு அல்லது சண்டைக்கும்மி

முற்றும்.

*The India Printing Works, Mylapore, Madras-4.*